# சங்ககாலச் சமூக அமைப்பில் பாணர்களின் மரபும் நீட்சியும்

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக
முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
ஜீ. பாண்டியலட்சுமி
பதிவு எண்: 11486

நெறியாளர்
முனைவர் சு. மகாலெட்சுமி.,எம்.ஏ.,எம்.ஃ.பில்.,எம்.எட்.,பிஎச்.டி.,டிப்.எபி.,
துறைத்தலைவர் & உதவிப்பேராசிரியர்,




தமிழ்த்துறை – ஆய்வுமையம்,
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி (தன்னாட்சி),
(தேசிய தர மறுமதிப்பீட்டுக் குழுவால் “A” தகுதி பெற்றது)
குற்றாலம் - 627 802.

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகம்,
திருநெல்வேலி.

ஜுலை - 2017

முனைவர் சு. மகாலெட்சுமி.,எம்.ஏ.,எம்.ஃ.பில்.,எம்.எட்.,பிஎச்.டி.,டிப்.எபி.,
**துறைத்தலைவர் & உதவிப்பேராசிரியர்,**
**தமிழ்த்துறை – ஆய்வு மையம்,**
**ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி (தன்னாட்சி),**
(தேசிய தர மறுமதிப்பீட்டுக் குழுவால்“**A**” தகுதி பெற்றது)
குற்றாலம் - 627 802.

## நெறியாளர் சான்றிதழ்

‘‘சங்ககாலச் சமூக அமைப்பில் பாணர்களின் மரபும் நீட்சியும்’’ என்னும் தலைப்பிலான இந்த ஆய்வேடு, மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில் தமிழ் முனைவர் பட்டம் (பிஎச்.டி) பெறும் பொருட்டு ஆய்வாளர் ஜீ. பாண்டியலட்சுமி (பதிவு எண்: 11486) அவர்களால் என் மேற்பார்வையின் கீழ்த் தன்னியலாகச் செய்யப்பட்டதாகும். குற்றாலம், ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, தமிழ்த்துறை ஆய்வுமையத்தில் மேற்படி ஆய்வாளர் செய்த இந்த ஆய்வின் மீது இதற்கு முன் வேறெந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என சான்றளிக்கப்படுகிறது.

**இடம்:** குற்றாலம்

**நாள்:**

நெறியாளர்

**ஜீ. பாண்டியலட்சுமி,**
**ஆய்வாளர், பதிவு எண்: 11486**
**தமிழ்த்துறை – ஆய்வுமையம்,**
**ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி,**
**குற்றாலம் - 627 802.**

## ஆய்வாளர் உறுதிமொழி

“சங்ககாலச் சமூக அமைப்பில் பாணர்களின் மரபும் நீட்சியும்” எனும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக மேற்கொள்ளப்பட்ட இவ்ஆய்வு என் சொந்த முயற்சியால் மேற்கொள்ளப்பட்டதாகும் என்றும், இவ்ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் இதற்கு முன் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**இடம்:** குற்றாலம்
**நாள்:**

**ஆய்வாளர்**
**(ஜீ. பாண்டியலட்சுமி)**

**நெறியாளர் கையொப்பம்**

# நன்றியுரை

''சங்ககாலச் சமூக அமைப்பில் பாணர்களின் மரபும் நீட்சியும்'' எனும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி அளித்த மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகத்திற்கும், குற்றாலம், ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி நிர்வாகத்திற்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

நான் முனைவர் பட்ட ஆய்வினைத் திறம்பட மேற்கொள்ள ஆதரவும் அனுமதியும் வழங்கிய குற்றாலம், ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரியின் முதல்வர் முனைவர். கி.திரிபுரசுந்தரி.,எம்.காம்.,எம்.ஃ.பில்.,பி.எட்.,பிஎச்.டி.,எம்.பி.ஏ., அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். சு. மகாலெட்சுமி அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்வுக்கு நல்ல தலைப்பு வழங்கி, ஆய்வுச் சிக்கல்களைக் களைந்து, எனக்கு நெறிகாட்டி வழிநடத்திய வணக்கத்திற்குறிய நெறியாளர் முனைவர். சு.மகாலெட்சுமி.,எம்.ஏ.,எம்.ஃ.பில்.,எம்.எட்.,பிஎச்.டி.,டிப்.எபி., அவர்களுக்கும், என் நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

என் ஆய்வுக்குத் தேவையான நூல்கள் வழங்கி உதவிபுரிந்த இராஜபாளையம் இராஜுக்கள் கல்லூரி நூலகத்திற்கும், கல்லூரி நிர்வாகத்திற்கும், முதல்வர் முனைவர் வே. வெங்கட்ராமன் அவர்களுக்கும், செயலர் திரு. A. A. S. ஷியாம் அவர்களுக்கும், தலைவர் திரு. S. K. சந்திரசேகர் ராஜா அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் ஆய்வுத்தேவைக்கு அவ்வப்போது தம் நூல்களை வழங்கி உதவிய முனைவர் வி. கலாவதிக்கும், என் மாணவச் சகோதரர்களான திரு. விஜய் அய்யப்பன் மற்றும் செல்வன் தி. குமரேஸ்வரனுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் கல்விப்பணி சிறக்க எப்போதும் துணைநிற்கும் என் தாயினும் மேலான திரு. R. பத்மநாபன் அவர்களுக்கும், இவ்அனைத்திற்கும் காரணமாக விளங்கும் என் பெற்றோருக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

நான் ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரியில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ளக் காரணமாக விளங்கிய பேரா. மீனாகுமாரி (ஓய்வு) அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன். மேலும் என் ஆய்வுக்குத் தேவையான நூல்கள் வழங்கி உதவிபுரிந்த ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரியின் நூலகத்திற்கு என் நன்றியைத் தெரிவிக்கிறேன்.

என் வாழ்வில் எத்தனை சோதனைகள் வந்தாலும், அத்தனையையும் சாதனைகளாக மாற்றி, என்னை வாழ்நாள் முழுமையும் வழிநடத்தும், மூலாதாரமாக விளங்கும் என் அன்னை ஆதிபராசக்திக்கும், அருள்திரு பங்காரு அடிகளார் அவர்களுக்கும் நன்றி கூறி என் முயற்சியினைச் சமர்ப்பிக்கிறேன்.

**ஜீ. பாண்டியலட்சுமி**

## சுருக்கக் குறியீட்டு வழக்கம்

| | | |
|---|---|---|
| அகத் | – | அகத்திணையியல் |
| அகப் | – | அகப்பொருள்விளக்ம் |
| அகம் | – | அகநானூறு |
| அதி | – | அதிகாரம் |
| ஆ.கு | – | ஆசிரியர் குழு |
| ஆசி | – | ஆசிரியர் |
| உ.ஆ | – | உரை ஆசிரியர் |
| உழி | – | உழிஞை |
| ஊர்.கா | – | ஊர்காண் |
| ஐங் | – | ஐங்குறுநூறு |
| ஒழிபு | – | ஒழிபியல் |
| கரந் | – | கரந்தை |
| கலி | – | கலித்தொகை |
| கள | – | களவியல் |
| களஞ் | – | களஞ்சியம் |
| கற் | – | கற்பியல் |
| காடு.கா | – | காடுகாண் |
| கு.எ | – | குறள் எண் |
| குறுந் | – | குறுந்தொகை |
| கொ.எ | – | கொளு எண் |
| சிலப் | – | சிலப்பதிகாரம் |
| சிற.பா | – | சிறப்புப் பாயிரம் |
| சிறுபாண் | – | சிறுபாணாற்றுப்படை |
| செய் | – | செய்யுளியல் |
| திருஞா | – | திருஞானசம்பந்தர் |
| திருநா | – | திருநாவுக்கரசர் |
| திருக் | – | திருக்கோவையார் |
| திரு.கு | – | திருக்குறள் |
| திருத் | – | திருத்தேவூர் |
| திருப் | – | திருப்பாவை |
| திருப்பு | – | திருப்புத்தூர் |
| திருமுரு | – | திருமுருகாற்றுப்படை |
| து.எ.கா | – | துயில் எழுப்பிய காதை |
| தும் | – | தும்பை |
| தேவா | – | தேவாரம் |
| தெ.ஆ | – | தெளிவுரை ஆசிரியர் |
| தொ.ஆ | – | தொகுப்பு ஆசிரியர் |
| தொல் | – | தொல்காப்பியம் |
| நற் | – | நற்றிணை |
| நூ.எ | – | நூற்பா எண் |
| நெடுநல் | – | நெடுநல்வாடை |

| | | |
|---|---|---|
| ப.ஆ | – | பதிப்பு ஆசிரியர் |
| ப.கு | – | பதிப்புக் குழு |
| பட்டினப் | – | பட்டினப்பாலை |
| பதி | – | பதிகம் |
| பதிற் | – | பதிற்றுப்பத்து |
| பரி | – | பரிபாடல் |
| பரி.திர | – | பரிபாடல் திரட்டு |
| பவ.அறு.பா.நோ.கா | – | பவத்திறம் அறுகென பாவை நோற்ற காதை |
| பா.எ | – | பாடல் எண் |
| பாசு | – | பாசுரம் |
| பாடாண் | – | பாடாண்திணை |
| புறத் | – | புறத்திணையியல் |
| புறப் | – | புறப்பொருள் வெண்பாமாலை |
| புறம் | – | புறநானூறு |
| பெ.பு | – | பெரியபுராணம் |
| பெரி.திரு | – | பெரிய திருமொழி |
| பெரும்பாண் | – | பெரும்பாணாற்றுப்படை |
| பொருள் | – | பொருளதிகாரம் |
| பொரு | – | பொருளியல் |
| பொருந | – | பொருநராற்றுப்படை |
| மணி | – | மணிமேகலை |
| மது.கா | – | மதுரைக்காஞ்சி |
| மர | – | மரபியல் |
| மலைபடு | – | மலைபடுகடாம் |
| மு.ப | – | முதல் பதிப்பு |
| வ | – | வரி |
| வஞ் | – | வஞ்சி |
| வ.ள் | – | வரிகள் |
| வி.ஆ | – | விளக்கவுரை ஆசிரியர் |
| வெ.எ | – | வெண்பா எண் |
| வேள்வி | – | வேள்விக்குடி |

## பொருளடக்கம்

## இயல்: 1. சங்ககாலச் சமூக அமைப்பு

### 1.0. முன்னுரை

இலக்கியங்கள் மனித வாழ்க்கையினைப் பதிவு செய்துள்ள முதல் இயற்கைக் கணினி. எதிர்காலச் சமூகத்திற்காக முன்னோர்கள் உருவாக்கிய பிரம்மச்சுவடி. எண்ணிலடங்கா சங்கப் பனுவல்களுள் முன்னோர் காத்துத் தொகுத்த 2381 பாடல்களின் மூலம் அக்கால மக்கள் வாழ்ந்து சென்ற வாழ்வியல் தடங்களையும், தடயங்களையும் அறியமுடிகின்றது. உலகில் மனித இனம் தோன்றிய பின்னர், பரிணாம வளர்ச்சியினால் பல்வேறு வளர்சிதை மாற்றங்களைப் பெற்று இம்மானிட இனம் குழுவாக வாழப்பழகியது. அப்போது அவன் உணவுக்காக விலங்கினைப் போல வேட்டையாடவும் காய்கனிகளைத் திண்ணவும் கற்றுக் கொண்டான். இத்தகைய மனிதன் ‘போலச்செய்தல்’ (Imitation) எனும் நியதிப்படி பறவை, விலங்குகளின் ஒலியைக் கேட்டும், பார்த்தும் பழகி உருவாக்கியதே மொழி ஆகும். அதன் மூலமே மனிதன் பேசவும், பாடவும், தன்னுடைய கருத்தினைப் பிறருக்குத் தெரிவிக்கவும் பழகினான். அப்பேச்சு மொழியில் ஊறிப் படிந்து தெளிந்த பின்னரே எழுத்து மொழியினைக் கண்டறிந்தான். தான் பேசிய, பாடிய அனைத்தையும் இலக்கியங்களாகப் படைத்தான். அத்தகைய மொழி எதுவாயினும் அம்மொழி சார்ந்த இலங்கியங்கள் அச்சமூகத்தினை அடியொற்றி அமைகின்றன. அச்சமுதாய நிகழ்களையும், பின்னணிகளையும் அவை பிரதிபலிக்கின்றன. அவ்வகையில் தமிழ்ச் சமூகத்தினை அறிய தமிழ்மொழி இலக்கியங்கள் அனைத்தும் துணைபுரிகின்றன. அவ்விலக்கியங்களின் வழிச் சங்ககாலச் சமூகஅமைப்பினை ஆராயுமாறு இவ்வியல் ஆராய்கின்றது.

### 1.1. சங்கம் சொற்பொருள் விளக்கம்

சங்கம் என்ற சொல்லுக்குச் சங்கமம், சங்கமித்தல், கூடல், கூட்டம், அவை, அமைப்பு என்னும் பல பொருள் கூறுகின்றனர். இதனை அகராதிகளும், இலக்கண இலக்கியங்களும் மெய்ப்பிக்கின்றன. எனவேதான் பண்டைத்தமிழ் இலக்கியங்களின் தொகுப்பினைச் சங்க இலங்கியங்கள் என்று வழங்குகின்றனர். சங்ககாலத்தில் வாழ்ந்த மக்கட் சமூகத்தினைச் சங்கச் சமூகம் என்றும், சங்ககாலச் சமூகம் என்றும் அழைக்கப்படலாயின். சங்கம் என்ற சொல் இன்றளவும் பயன்படுத்தப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. அதேபோன்று சங்கம் எனும் பொருள் கொண்ட பிற சொற்களும் பயன்பாட்டில் உள்ளதையும் அறியமுடிகிறது.

### 1.1.1. அறிஞர்கள் பார்வையில் சங்கம்

அறிஞர்கள் சங்கம் என்ற சொல்லைப் பல்வேறு கோணங்களில் பயன்படுத்தியுள்ளனர். ‘‘சங்கம் என்பதற்குக் கூட்டம் அல்லது கல்விக்குழு என்பது பொருளாகும்’’ என்று க. கைலாசபதி குறிப்பிடுகின்றார். (2006: 8) இக்கூற்று இன்றளவும் மக்களிடையே பயன்படுத்தப்பட்டு வருகிறது. சங்கஇலக்கியம் என்று கூறப்பெறும் தொகை நூல்களின் அறிமுகம் கிடைத்தது இறையனார் அகப்பொருளுரையில் தான். அவ்வுரை மூன்று சங்கங்கள் தமிழகத்தில் இருந்தது எனவும், அச்சங்கங்களைப் பாண்டியர்களே நிறுவினர் என்றும் குறிப்பிடுகிறது.

‘‘தமிழ் நாட்டில், பாண்டிய அரசர் தலைநகரில் மூன்று கழகங்கள் பல ஆண்டுகளாக இருந்து வந்தன. இக்கழகங்கள் பிற்கால இலக்கியங்களில் சங்கங்கள் என்று வழங்கின. சங்கம் என்பது தமிழ் உருவம் பெற்று வழங்கும் சங்கதச்சொல்’’ என்று சு. வித்தியானந்தன் கூறுகின்றார். (1954: 3) மேலும் ‘‘கி.பி.470-இல் வச்சிரநந்தி என்னும் சமணமுனி தனது சமயத்திற்கான திராவிட சங்கத்தை நிறுவிய பின்னரே இதன் வழக்கு பரவிற்று’’ என்றும் குறிப்பிடுகிறார். (சு. வித்தியானந்தன்.,1954: 3) இக்கருத்தினைத் துளசி. இராமசாமியின் கூற்றிலும் அறியமுடிகிறது. (துளசி. இராமசாமி.,2012: 622) இத்திராவிட சங்கத்தைப் பின்பற்றியே தமிழ்ச்சங்கம் சமயச்சார்பான ஒரு கழகமாக முதலில் நிறுவப்பட்டது. ‘‘புத்த, சமண சமயங்களோடு கொண்ட பகையினால் சைவர்கள் தங்கள் மேன்மையையும் தொன்மையையும் நிலை நிறுத்துவதற்காகச், சிவனைப் பாடிய தம் புலவர்களைச் சங்கப் புலவர்கள் எனக் கருதத் தொடங்கினர்.’’ (சு. வித்தியானந்தன்.,1954: 3) இக்கருத்தினை வலியுறுத்துமாறு, ‘‘சங்கம் என்ற சொல், சமணர்களாலும் (ஜைனர்களாலும்), பௌத்தர்களாலும், மக்களிடையே பழக்கப்படுத்தப்பட்ட ‘சங்க்ஹ’ என்ற சமஸ்கிருதச் சொல்லின் தமிழ் வடிவமாம்.

சமணர்கள் (ஜைனர்கள்) இச்சொல்லை மகாவீரரைப் பின்பற்றுவோராகிய பிக்குகள், பிக்குணிகள், ஸ்ராகவர், ஸ்ராவீகர்களைக் கொண்ட ஓர் அமைப்பைக் குறிக்க வழங்கினர்’’ எனும் பி. டி. சீனிவாசஅய்யங்காரின் கருத்தும் அமைகிறது. (2013: 281) ‘‘திகம்பர தர்ஸன சாரம்’’ என்ற நூலின் மூலம், தமிழகத்தில் கி.பி. 470 - இல் ஒரு (சைண) சமண சமயச் சங்கத்தினைத் தோற்றுவித்த வச்சிரநந்தி என்பவன் ஸ்ரீபூஜ்யபாதர் என்பவரின் மாணவன்

என்பதையும், அவன் தக்கண மதுரையில் கி.பி. 525–இல் திராவிட சங்கத்தைத் தொடங்கினான். இதனை,

''**ஸ்ரீ பும்ஜ பாதசீசோ தாவிட சங்கஸ காரகோ வுஸ்ட்ஹோர**

**நாமென வஜ்ஜிரநந்தி பாஹு ஊ வெதீ மகாசத் தொ**

**பம்கச கவீணா விக்ரமராயச மரண பட்டஸ**

**தரிசன மகுராஜாடொ தாவிட சம்கொ மஹாமஹெ**''

எனும் வரிகள் சுட்டுகின்றன. (பி. டி. சீனிவாசஅய்யங்கார்., 2013: 283) இக்கூற்றினை மயிலைசீனி. வேங்கடசாமி உறுதி செய்வதுடன், ''வச்சரிநந்தி மதுரையிலே திரமிள சங்கத்தை ஏற்படுத்தினார். திரமிளம் என்றாலும் திராவிடம் என்றாலும் ஒன்றே. இவற்றின் பொருள் தமிழ் என்பது. திரமிள சங்கம் என்றால் தமிழ்சங்கம் என்பது பொருள். இது தமிழ் மொழியை ஆராயும் சங்கம் அன்று. சமண சமயத்தைப் பரப்புவதற்காக ஏற்படுத்தப்பட்ட சங்கம்'' என்று விளக்கியுள்ளார். (மயிலைசீனி. வேங்கடசாமி.,2001: 47)

சங்கம் எனும் சொல்லை அறிஞர்கள் கூட்டம் எனும் பொருளிலும் அமைப்பு எனும் பொருளிலும் பயன்படுத்தியுள்ளனர். இச்சங்கம் எனும் சொல்லைச் சமணர்களும், பௌத்தர்களும் கூட்டம் எனும் பொருளில் பயன்படுத்தியுள்ளனர். அதேவேளையில் சமண சமயத்தவர் பயன்படுத்திய சங்கம் எனும் சொல்லைப் பயன்படுத்தியே தமிழச்சங்கம் அல்லது சங்ககாலம் எனும் தொடரைத் தமிழர் உருவாக்கினர் எனும் வையாபுரிப் பிள்ளையின் கூற்றை முற்றிலுமாக மறுத்துக் கூறும் மயிலைசீனி. வேங்கடசாமியின் கூற்று ஏற்புடையதாக அமைகிறது. பாண்டியரின் தமிழ்ச்சங்கம் காலத்தால் முற்பட்டது என்றும் கூறுவதோடு, சங்கம் எனும் சொல்லைத் தமிழ்ச்சமூகமே முதலில் பயன்படுத்தியுள்ளது என்பதும் அறியப்படுகிறது.

### 1.1.2. இலக்கியங்களில் சங்கம்

சங்கஇலக்கியங்களில் சங்கம் என்ற சொல் மேற்கூறிய பொருள்களில் வழங்கப்படவில்லை. ஆனால் சங்கம் எனும் பொருளை உணர்த்துகின்ற சொற்களான தொகை, கூடல், அவை, புணர் என்னும் சொற்கள் இடம் பெறுகின்றன. ''புலவர் அவை என்ற கருத்துடன் சங்கம் என்ற சொல் முதன் முதல் வழங்கப்பட்டிருப்பது மணிமேகலையிலாகும்'' என்று சுட்டுகின்றனர். (சு. வித்தியானந்தன்.,1954: 4) இதனைப்,

''**புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க**'' (மணி.,து.எ.கா: 7.,வ: 114)

எனும் வரி உணர்த்துகின்றது. (கொ. மா. கோதண்டம்.(தெ.ஆ).,2007: 92) சங்கம் எனும் சொல்லானது சமயச் சார்பான குழு அல்லது சங்கம் என்னும் பொருள்பட அமைந்துள்ளது. சங்ககாலச் சமூகத்தில் மன்னர்களும் இலக்கியம் படைக்கும் ஆற்றல் பெற்றவர்களாக விளங்கினர். அத்தகைய மன்னர்கள் புலவர்களையும், பாடல் புனையும் ஆற்றல் பெற்றோர் அனைவரையும் ஆதரித்தனர். ''இலக்கிய ஆர்வமுள்ள அரசன் ஒருவன் தன்னுடைய கவிதைகளையும் தன்னைச் சுற்றியுள்ள பெருமக்களின் கவிதைகளையும் கேட்டு மகிழ்ந்த கழகங்கள்'' இருந்தன என்று குறிப்பிடுகின்றனர். (சு. வித்தியானந்தன்.,1954: 4) இதனைச்,

''**சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தன**

……………………………………………

……………………………………………

**புலவர் பாடாது வரைகவென் னிலவரை**'' (புறம்.பா.எ: 72.,வ.ள்: 7-16)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 184-185) தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன் ஆதரவில் இருந்த ஒரு புலவர் அவைக்களத்தை இப்பாடல் வாயிலாகக் குறிப்பிடுகிறான். இது ஒரு புலவர் குழுமத்தையும், அக்குழுவை ஆதரிக்கும் மன்னனையும் உணர்த்துகிறது. மேலும் அவ்வரசன் வஞ்சினம் கூறுகையில், ''பொழுது முடியும் முன்னர் பகைவரைப் புறமுதுகிட்டு ஓடச் செய்ய இயலவில்லை எனில், மாங்குடி மருதனைத் தலைவனாகக் கொண்ட புலவர் என்னைப் பாடாது விடுவாராக'' என்று கூறுவதன் மூலமும் ஒரு தலைமைப் புலவரின் கீழ் உள்ள பல புலவர்கள் கொண்டதொரு குழு எனும் (சங்கம்) அமைப்பு இருந்துள்ளமையை அறியமுடிகிறது. புத்தசமயக் கருத்துகளை எடுத்துரைக்கும் மணிமேகலையில்,

''**புத்த தன்ம சங்க மென்னும்**

**முத்திர மணியை மும்மையின் வணங்கி**'' (மணி.,பவ.அறு.பா.நோ.கா:30., வ.ள்:34-35) இதில் புத்தம், தர்மம் மற்றும் சங்கம் எனும் முன்று மணிகள் எனப்படும் தத்துவம் உணர்த்தப்படுகிறது. (கொ. மா. கோதண்டம்.(தெ.ஆ).,2007: 405) புத்த சமயத்தவர் சங்கம் எனும் சொல்லைக் கூட்டம், ஒற்றுமையாகக் கூடியிருத்தல் எனும் பொருளில் பயன்படுத்தியுள்ளனர் என்பதை உணரமுடிகிறது.

சைவசமயத்தைப் புத்துணர்வு பெறச் செய்தவர்கள் நாயன்மார்கள். அவர்களுள் முதன்மையானவராகப் போற்றப்படுபவர் திருஞானசம்பந்தர். அவர் இயற்றிய திருத்தேவூர் பதிகத்தில் சங்கம் எனும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்.

"**ஞானசம்பந்தன் உரை செய் சங்கம்மலி செந்தமிழ்கள் பத்து**"(திருஞா.தேவா. திருத்.பதி: 147(2).,பா.எ: 11.,வ.எ: 6-7) எனும் இப்பாடலடி, "திருத்தேவூர் இறைவுனைப் பாடிய தம்முடைய பாடலகள் பத்தையும் ஞானசம்பந்தனால் பாடப்பெற்ற சங்கத்தோடு உறவுடைய பத்துப் பாடல்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்." (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2004: 557)

"**திருவால வாயில், எம்மைப் பவர் தீர்ப்பவர் சங்கமிருந்து**" என்று பெரியபுராணமும், (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2005: 533)

"**சங்கத்தமிழ் மூன்றும் தா**"

என்று நல்வழியும், சங்கம் எனும் சொல்லைக் குறிக்கின்றது. தமிழகத்தில் சைவசமயத்தைப் போன்றே வைணவ சமயமும் விரிந்து பரந்த ஒரு சமயமாக விளங்கியது. அச்சமயம் வலுப்பெற ஆழ்வார்கள் காரணமாக அமைகின்றனர். இவ்ஆழ்வார்களுள் திருமங்கை ஆழ்வார் குறிப்பிடத்தக்கவர் ஆவார். அவர் இயற்றிய பெரிய திருமொழியில், சங்கம் எனும் சொல்லைக் கையாண்டுள்ளார் என்பதைச்,

"**சங்கமுகத் தமிழ் மாலை பத்து**" (பெரி.திரு.,பாசு.எ: 1187.,வ: 7)

எனும் வரியும், (உ. வே. மதி. சீனிவாசன்.(தெ.ஆ).,1998: 100)

"**சங்கமலி தமிழ் மாலைபத்து**" (பெரி.திரு.,பாசு.எ: 1237.,வ: 7)

எனும் வரியும், (உ. வே. மதி. சீனிவாசன்.(தெ.ஆ).,1998: 120)

சங்கத் தலைமைக்குச் சூட்டும் பத்துப் பாக்களால் ஆன மாலை எனவும், சங்கத்திற்குரிய தமிழில் ஆன பாக்கள் பத்து எனவும் பொருள் உணர்த்துகின்றன. திருமங்கைஆழ்வார் சங்கம் எனும் சொல்லைத் தலைமையான ஓர் அமைப்பு எனும் பொருளில் பயன்படுத்தியுள்ளார். இவரைப்போன்று ஆழ்வார்கள் பன்னிருவருள் பெண் ஆழ்வரான ஆண்டாள் தாம் பாடிய திருப்பவையில் சங்கம் எனும் சொல்லைப் பயன்படுத் தியுள்ளார். இதனைப்,

"**வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை**

..................................................

.....................**பட்டர்பிரான் கோதைசொன்ன**

**சங்கத் தமிழ் மாலை முப்பது**...............'' (திருப்.பா.எ:30.,வ.ள்: 4-5)

எனும் இவ்வரியானது, சங்கம் இருந்தமையை உணாத்துகின்றது. (எம். நாராயண வேலுப்பிள்ளை.(தெ.ஆ).,2000: 230) ஆழ்வார்கள் தமிழ் மொழியினைச் சங்கத் தமிழ் என்று புகழ்ந்து உரைத்துள்ளனர்.

திருஞானசம்பந்தரைப் போலவே சைவ சமயத்துள் தம்மை ஆட்படுத்திக் கொண்டவர் திருநாவுக்கரசர். அவர் இயற்றிய தேவாரத் திருமுறைகளுள் ஒரு பாடலில், சங்கம் எனும் சொல்லை எடுத்தாண்டுள்ளார்.

''**நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி**

**நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன் காண்**'' (திருநா.தேவா.திருப்புத்.பதி: 123.,பா.எ: 3.,வ.ள்: 3-4) எனும் வரியில், தருமி என்ற ஏழைப்புலவனுக்கு, சங்கத்தாரிடமிருந்து பொற்கிழி பெற்றுத்தர சிவன் துணை புரிந்த திருவிளையாடல் புராணம் பற்றிய குறிப்பினை எடுத்துரைப்பதனை அறியமுடிகிறது. (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2003: 363)

எட்டுத்தொகை நூல்களை உணர்த்தும் பழம்பாடலில் பயின்றும் வரும் தொகை எனும் சொல்லும் எட்டு நூல்களின் தொகுப்பு, கூட்டம், சேர்க்கை என்னும் பொருள்பட அமைந்துள்ளது. இதனை,

''**நற்றிணை** .....................

.....................................

...... **இத்திறந்த எட்டுத்தொகை**''

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.,2007: 5)

கூடல் எனும் சொல்லுக்கு இணைதல், கலத்தல், சங்கமித்தல், சங்கமம் என்று பல பொருள் உண்டு. இக்கூடல் எனும் சொல் இலக்கியங்களில் பல்வேறு இடங்களில் பயின்று வருகின்றன. இதனை,

''**மாடமலி மறுகிற்கூடற் குடவயின்**............**குன்று**'' (திருமுரு.,வ: 71)

எனும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 48)

''**உறைவா னுயர்மதிற் கூடலினாய்ந்த வொண் டீந்தமிழின் துறை**''
(திருக்.பா.கூ.பா.எ: 2.,வ.ள்: 2)

எனும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.(வி.ஆ).,1970: 56)

"**கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது**" (புறப்.,உழி.கொ.எ: 87)

எனும் இக்கூற்றும், சுட்டுகிறது. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 148) கூடல் எனும் சொல் நான்மாடக் கூடல் என்னும் மதுரையைக் குறிக்கிறது. மேலும்,

"**குண்டுநீர் வரைப்பிற் கூடல்**" (புறம்.,பா.எ: 347.,வ: 6)

எனும் இவ்வரி அக்கால மதுரையைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்த அகழியை உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 295) இதேபோன்று,

"**வாடா வேம்பின் வழுதி கூடல்**" (அகம்.,பா.எ: 93.,வ: 9)

எனும் வரியும், (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 239)

"**மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்**" (மது.கா.,வ.ள்: 429 – 430)

இப்பாடலடிகளும் மதுரையைக் குறிக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 144) மேலும்,

"**நெடுநீர் மலிபுனல் நீண்மாடக் கூடல்**" (பரி.,பா.எ: 20.,வ: 106)

இவ்வடியும் மதுரையைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டுள்ளன. (பொ. வே. சோமசுந்தரனார். (உ.ஆ).,2007: 405)

இதுபோலவே புகார் நகரினையும் குறிக்கக் கூடல் எனும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். இதனைத்,

"**தேறுநீர்ப் புணரியொடு யாறுதலை மணக்கும்**

**மலியோதத்து ஒலிகூடல்**" (பட்டினப்.,வ.ள்: 97 - 98)

எனும் வரிகள், குறிக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 51) புகார் நகரினைக் கூடல் என்னும் சொல்லால் குறிக்கக் காரணம், காவிரியாறு கடலில் கலப்பதே என்று உணர்த்தப்படுகிறது.

கூடல் எனும் சொல் நான்கு மாடங்கள் இணைந்த மதுரையைக் குறிக்கவும், காவிரி கடலில் கலப்பதால் புகாரினைக் குறிக்கவும் பயன்படுத்தியுள்ளமை புலனாகிறது.

அக்கால மதுரையில் வழக்குமன்ற அவை ஒன்று இருந்ததென மதுரைக்காஞ்சி பகர்கின்றது. இதனைச்,

"**செற்றமும் உவகையும் செய்யாது காத்து**

**ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்**

**சிறந்த கொள்கை யறங்கூ றவையம்**'' (மது.கா.,வ.எ்: 490–493)

என்னும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 159-160) அவை என்பது வழக்குமன்றம் எனும் நீதிமன்றம் ஆகும். அவை என்பது ஒன்றுக்கு மேற்பட்ட மக்கள் கூடியிருக்கும் இடமாகையால், அவை எனும் சொல் சங்கம் எனும் பொருள் தரும்படியான இடத்தை வகிப்பது புலப்படுகிறது. இவ்அவை என்னும் சொல் திருக்குறளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவை எனும் சொல்லால்ஆன இரண்டு அதிகாரங்களில் இருபது குறட்பாக்களைப் படைத்துள்ளார் வள்ளுவர். 'அவை அறிதல்' எனும் அதிகாரத்துள் 'அவை' என்னும் சொல்லை வெளிப்படையாக மூவிடங்களில் கையாண்டுள்ளார். 'அவை அஞ்சாமை' எனும் அதிகாரத்துள் ஆறிடங்களில் கையாண்டுள்ளார். இவ்விரு அதிகாரத்துள்ளும் அவை எனும் சொல்லை அரசவை என்னும் பொருளில் கையாண்டுள்ளார். எனினும் அவற்றுள்ளும் நல்லோர் கூடிய அவை, அறிவுடையோர் கூடிய அவை, பகைவர் கூடிய கூட்டம், எனும் பொருளில் குறட்பாக்களை அமைத்துள்ளார். இதனை,

''**அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக**'' (திரு.கு.,அதி.எ: 72.,கு.எ: 711)

''**அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர்**'' (திரு.கு.,அதி.எ: 72.,கு.எ: 713)

இவ்விரு குறளிலும், அரசவை என்னும் பொருளே பயன்பட்டுள்ளன. (மு. வரதராசனார்.,1949: 146) ஆனால்,

''**புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்**

**நன்கு செலச்சொல்லு வார்**'' (திரு.கு.,அதி.எ: 72.,கு.எ: 719)

என்னும் இக்குறளில், புல்லவை எனக் குறிக்கிறார். (மு. வரதராசனார்.,1949: 146) புல்லவை என்பது அறிவிலார் அவை என்னும் பொருளில் கையாண்டுள்ளார். நல்லவை என்பது நல்லோர் இருக்கும் அவை என்றும், அவை அஞ்சாமை அதிகாரத்துள் 'பகையகம்' (திரு.கு.,அதி.எ: 723) என்று பகைவர் கூடிய கூட்டம் எனும் பொருளிலும் குறிப்பிட்டுள்ளார். 727ம் குறளில் 'பகையகம்' எனும் சொல்லாட்சியையும் பயன்படுத்தியுள்ளார். அறிவுடையோர் அவை என்னும் பொருளில் நுண்ணவை, அவை (திரு.கு.,அதி.எ: 73.,கு.எ: 726 மற்றும் 729 - இல்) எனும் சொற்களைப் பயன்படுத்தியமை குறிப்பிடத்தக்கது. அரசவை எனும் பொருளில் (திரு.கு.,அதி.எ: 73.,கு.எ: 723 மற்றும் 727 - இல்) அவை என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளமையும் உணரத்தக்கது. மக்கட்பேறு அதிகாரத்தில் தந்தை மகனுக்குச் செய்யும் நன்மை என்னவென்றால், அவனைக் கற்றவர் சபையில் முதன்மை அடையுமாறு

செய்தலாகும் என்று, அவை என்னும் சொல்லை 'கற்றோர் சபை' எனும் பொருளில் பயன்படுத்தியுள்ளார். இதுபோலவே ஒருவனிடத்தில் இருக்கும் செல்வத்தைக் கூத்தாடுகின்ற சபையில் அதனைப் பார்க்கக் கூடிய கூட்டம் போன்றது என ஒப்பிட்டுக் காட்டுகிறார். (மு. வரதராசனார்.,1949: 146-148) இதனைக்,

''**கூத்தாட்டு அவைக்குழாந் தற்றே பெருஞ்செல்வம்**

**போக்கும் அதுவிறிந் தற்று**'' (திரு.கு.,அதி.எ: 34.,கு.எ: 332)

எனும் குறள் மொழிகின்றது. (மு. வரதராசனார்.,1949: 68) திருக்குறளில் அவை எனும் சொல்லைப் பல இடங்களில் மக்கள் கூடிய கூட்டம் எனும் பொருளை அடிப்படையாகக் கொண்டு கையாளப்பட்டுள்ளது. ''புணர்'' எனும் சொல்லும் சூழ்தல் எனும் பொருளில் சிலப்பதிகாரத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

''**இளைசூழ் மிளையொடு விளையுடன் கிடந்த**

**இலங்குநீர்ப் பரப்பின் வலம்புணர் அகழி** (சிலப்.,ஊர்.கா.,வ.ள்: 62 - 63)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2005: 93) கட்டு வேலி சூழ்ந்த காவற் காட்டோடு அகழியும் நகரைச் சூழ்ந்து கிடந்தன எனப் பொருளுரைக்கிறது.

சங்கம் எனும் சொல்லைச் சங்ககாலத்திற்கு மிகப் பிற்பட்ட காலங்களில் பயன்படுத்தி உள்ளனர் என்பதும், சங்க நூல்களில் சங்கம் எனும் பொருள் தரும் பிற சொற்களைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதும் பெறப்படுகிறது.

### 1.1.3. இலக்கணங்களில் சங்கம்

தமிழ் மொழியின் முதன்மையான இலக்கண நூல் தொல்காப்பியம். தமிழ்மொழியில் முதன்முதலில் முழுமையும் கிடைத்த ஓர் இலக்கண நூல் தொல்காப்பியம். பிற்கால இலக்கண நூல்களுக்கு எல்லாம் முன்னோடியாக விளங்குவது தொல்காப்பியம். அத்தகைய இலக்கண நூலுள் சங்கம் எனும் சொல் காணக் கிடைக்கவில்லை. ஏனென்றால், தொல்காப்பியத்தின்,

''**சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே**

**அ ஐ ஔ என்னும் மூன்றலங் கடையே**'' (தொல்.,எழுத்.,நூ.எ: 62.,வ.ள்:1-2)

எனும் நூற்பா, 'ச' என்னும் மெய்யானது 'அ', 'ஐ', 'ஔ' என்னும் மூன்று உயிர்களைத் தவிர ஏனைய உயிர்களுடன் இணைந்து பிறக்கும் என்று கூறுகிறது. இதன்மூலம் ச, சை,

சௌ என்னும் சகர வரிசை எழுத்துக்களில் சொற்கள் தமிழில் பயன்படுத்தப்படவில்லை என்பதை அறியமுடிகிறது. (ச. வே. சுப்பிரமணியன்.(உ.ஆ).,1998: 47) மேலும் “சமைத்து, சலம், சதுக்கம், சந்தி, யூகம், யவணர், சங்கு, சமம்” முதலிய சகர முதற் சொற்களும் பிறவும் கடைச்சங்க நூல்களிற் காணப்படுகின்றன. (ந. சி. கந்தையா.,2010: 150) கடைச்சங்க காலமான முடத்திருமாறனைத் தலைவனாகக் கொண்ட காலகட்டத்தில் தான் சகரமுதற் சொற்கள் தமிழில் வழங்கலாயின. ஆனால் அதேவேளையில், தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்துள் அவை என்னும் சொல்லைப் பயன்படுத்தப்பட்டுள்ளமையும் குறிப்பிடத்தக்கது. இதனை,

“**நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து**” (தொல்.,சிற.பா.,வ: 9)

தொல்காப்பியர் இயற்றிய இலக்கண நூலை நிலந்தரு திருவிற் பாண்டியனின் அவையில், அதங்கோட்டு ஆசானின் தலைமையில் அரங்கேற்றம் செய்த செய்தியை அறியமுடிகிறது. (ச. வே. சுப்பிரமணியன்.(உ.ஆ).,1998: 27)

இதன்மூலம் அவையம் எனும் சொல் (அவை) சங்கம் எனும் பொருள்பட கையாளப்பட்டுள்ளது புலனாகிறது. தொல்காப்பியக் காலத்தில் சங்கம் எனும் சொல் தமிழ் மொழியில் பயன்பாட்டில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இறையனார் அகப்பொருளுரையில் முச்சங்கங்கள் பற்றிய வரலாறு கூறப்படுகிறது. இவ்வரலாறு பற்றிய கருத்தினைத் தமிழறிஞர்கள் சிலர் ஏற்றுக்கொள்ளவில்லை எனினும், சங்கம் எனும் சொல்லைக் கையாண்டுள்ளனர். மூன்று சங்கங்களும், அச்சங்கங்களுக்குரிய புலவர் பெருமக்களும் குறிக்கப்படுகின்றனர். அவர்களுள் தலைமைப் புலவனும், அனைவருக்கும் தலைமையாய் நின்ற மன்னனும் குறிக்கப்படுகின்றான். இறையனார் அகப்பொருளுரையில், தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்று சங்கங்கள் இருந்தமையை உணர்த்துவதோடு, சங்கம் என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இலக்கணங்களிலும் சங்கம் எனும் சொல்லும், சங்கம் எனும் பொருளுணர்த்தும் அவையம் எனும் சொல்லும் பயன்படுத்தியமையை அறியமுடிகிறது.

### 1.1.4. செப்பேடுகளில் சங்கம்

வச்சிரநந்தியின் பேர்போன சங்கம் கி.பி. 470-இல் நிறுவப்பட்டது. தொல்காப்பியம் இச்சங்கத்தின் முதல் வெளியீடாக வெளிப்பட்டிருக்கக்கூடும். கி.பி. 470-இல் தமிழ் மொழியிலும் தமிழ் இலக்கியத்திலும் ஒரு முதன்மையான நிகழ்ச்சி ஏற்பட்டது. அந்நிகழ்ச்சி என்ன வென்றால், மதுரையிலே வச்சிரநந்தியின் மேற்பார்வையில் நிறுவப்பட்ட தமிழ்ச்

சங்கமாகும். இக்கருத்தினைச் சின்னமனூர் செப்பேட்டுச் சான்றுகளின் வாயிலாக மயிலைசீனி. வேங்கடசாமி மறுத்துரைக்கிறார். இதனைத்,

"**தடம் பூதம் பணி கொண்டு**

**தடாகங்கள் பல திருத்தியும்**

**அரும்பசிநோற் நாடகற்றி**

**அம் பொற்சித்ர முயரியும்**

**தலையாலங் கானத்திற்**

**றன்னொக்க லிருவேந்தரைக்**

**கொலைவாளிற் றலைதுமித்துக்**

**குறைத்தலையின் கூத்தொழித்தும்**

**மஹாபாரதந் தமிழ்ப்படுத்தும்**

**மதுராபுரிச் சங்கம் வைத்தும்**

**மஹாராஜரும் ஸார்வ பௌமரும்**

**தம்மகி மண்டலங் காத்தி தந்தபின்**" (மயிலைசீனி. வேங்கடசாமி.,2001: 45)

இச்சின்னமனூர் செப்பேட்டுச் சாசனம் மூலம் தலையாலங்கானம் எனும் சொல்லாட்சி பயன்படுத்தப் பட்டுள்ளதை அறியமுடிகிறது. (மயிலைசீனி. வேங்கடசாமி.,2001: 45) மற்றொரு செப்பேட்டுச் சாசனம்,

"**மண்ணதிரா வனைவென்று**

**தேன்மதுரா புரஞ்செய்தும்**

**அங்கனில் லருந்தமிழ்நற்**

**சங்கம் இரீஇத் தமிழ்வளர்த்தும்**

**ஆலங்கானத் தமர்வென்று**

**ஞாலங்காவல் நன்செய்தியும்**

**கடிநாறு கவினலங்கற்**

**களப்பாழர் குலங்களைந்தும்**

**முடிசூடி முரண்மன்னர்**

**எனைப்பலரு முனிகந்தபின்**" (மயிலைசீனி. வேங்கடசாமி.,2001: 45-46)

எனும் இவ்விரு சாசனங்களும் பாண்டிய அரசர்களின் காலத்தில் எழுதப்பட்டவை. (மயிலைசீனி. வேங்கடசாமி.,2001: 45-46) இச்சாசனங்கள் இரண்டும் பாண்டிய அரசர் மதுரை மாநகரத்தில் தமிழ்ச்சங்கம் வைத்து நடத்தியதைக் கூறுகின்றன. பாண்டியரின் ஆட்சிகாலத்தில் சங்கம் எனும் சொல் செப்பேடுகளில் பயன்படுத்தியுள்ளனர்.

இதன் வாயிலாகச் சங்கம்எனும் சொல் இலக்கியங்களிலும், இலக்கணங்களிலும் பயன்படுத்தப்பட்டமையும், சங்கம் எனும் பொருள் தரும் பிற சொற்களும் பயின்றுள்ளமையும் புலனாகிறது. சங்கங்கள் இல்லை என்று அறிஞர்கள், கருத்துத் தெரிவித்தாலும், அக்காலத்தில் உருவான நூல்கள் சங்கம் இருந்தமையை உணரவைக்கிறது. அதனைச் செப்பேட்டுச் சாசனங்கள் உறுதிப்படுத்துவதால் சங்கம் எனும் சொல் நேரடியாகவோ அல்லது அதன் பொருளையோ இலக்கிய இலக்கணங்களில் உணர்த்துவது அறியப்படுகிறது.

சங்கம் எனும் சொல் கூட்டம், அமைப்பு, கலத்தல், அவை, இணைதல், குழு என்னும் பொருள்களில் இலக்கிய இலக்கணங்களில் இடம் பெறுவதும் ஏற்புடையதாகிறது.

**1.2. சங்ககாலம்**

சங்ககாலத்தில் தமிழகத்தில் சேர, சோழ, பாண்டியரின் ஆட்சி நிலவியதைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. அத்தகைய மன்னராட்சி காலத்தில் பாண்டியர்கள் சங்கம் வைத்து தமிழ் வளர்த்தனர் என்று இறையனார் அகப்பொருளுரையும் உணர்த்துகிறது. இப்பாண்டியரின் வழியில் பசும்பூண் பாண்டியன் என்பான் மதுரையை ஆண்டதாகக் கருதப்படுகிறது. இதனைப்,

“…………………**..பொருவர்**

………………………………

**விசும்பிவர் வெண்குடைப் பசும்பூண் பாண்டியன்**

**பாடுபெறு சிறப்பிற் கூடல்**………” (அகம்.,பா.எ: 231.,வ.ள்: 10 – 13)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 261) இப்பசும்பூண் பாண்டியன் செங்கோல் மன்னன் என்றும், நீதிநெறியோடு ஆட்சி புரிந்தவன் என்றும் உணர்த்துகின்றன. மேலும் இக்கருத்தினை,

“**மறங்கெழு தானை யரச ருள்ளும்**

………………………………….

………………………………….

**பலர்புகழ் திருவிற் பசும்பூட் பாண்டியன்**'' (அகம்.,பா.எ: 338.,வ.எ்: 2-5)

எனும் வரிகளும், வலியுறுத்துகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 88) பசும்பூண் பாண்டியன் தன்னுடைய ஆட்சியின் போது கொங்கு தேசத்தைக் கைப்பற்றினான் என்பதை,

''**வாடாப் பூவிற் கொங்கர் ஒட்டி**

……… **பசும்பூண் பாண்டியன்**

………………………………

**இன்னிசை யார்ப்பினும்**……'' (அகம்.,பா.எ: 253.,வ.எ்: 4 – 7)

எனும் வரிகளால் உணரமுடிகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 312) இப்பாண்டியனின் சேனைத் தலைவனாக அதிகமான் என்பான் இருந்தான் என்பதைப்,

''**பசும்பூண்பாண்டியன் வினைவல் அதிகன்**'' (குறுந்.,பா.எ: 397.,வ: 4)

எனும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 704)

''……………**கழல் தொடி அதிகன்**

…………………………………………

**வில்கெழு தானைப் பசும்பூண் பாண்டியன்**'' (அகம்.,பா.எ: 162.,வ.எ்: 18-20)

எனும் வரிகளும் அறிவிக்கின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 101) பசும்பூண் பாண்டியனின் சேனைத் தலைவனான அதிகனின் இயற்பெயர் நெடுமிடல் ஆகும். இதனை,

''**நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தலர்**'' (அகம்.,பா.எ: 266.,வ.எ்: 12)

எனும் வரியால் அறியமுடிகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 346) இவ்அதிகமான் என்னும் நெடுமிடலைக் களங்காய்கண்ணி நார்முடிச் சேரல் வென்றதனை,

''**நெடுமிடல் சாயக் கொடுமிட றுமியப்**

**பெருமலை யாமையொடு புலங்கெட விறுத்துத்**'' (பதிற்.,4.,வ.எ்: 10-11)

எனும் பதிற்றுப்பத்தின் வரிகள் உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை. (உ.ஆ)., 1950: 143) பின்னர் இவ்அதிகமான் துளு நாட்டை ஆண்ட நன்னனோடு போரிட்டு இறந்தான் என்பதைக், ''**கறையடி யானை நன்னன் பாழி**

……………………………………

……………………………………….

**வெள்ளத்தானை யதிகன் கொன்று உவந்து**'' (அகம்.,பா.எ: 142.,வ.ள்: 9–13)

எனும் இவ்வடிகள் உணரச்செய்கின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 56 - 57) களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலின் காலத்தோடு நெடுமிடல் என்னும் அதிகமானும், பசும்பூண் பாண்டியனும் ஒருமித்தவராவர். மேலும் களங்காய் கண்ணி நார்முடிச்சேரல் கி.பி. 2ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவன். எவ்வாறெனில் இவன் சேரன் செங்குட்டுவனின் தமயன் ஆவான். செங்குட்டுவனின் காலம் சிலப்பதிகாரத்தால் அறியப்படுகிறது. ஆதலால் பசும்பூண் பாண்டியனும் அதே காலகட்டத்தைச் சார்ந்தவன் என்று ஒருவாறு வரையறை செய்யலாம். ''பசும்பூண் பாண்டியன் உத்தேசம் ஏறத்தாழ கி.பி. 125 முதல் 150 வரையில் அரசாண்டான்'' எனும் வரிகளும் அவன் காலத்தை உறுதிசெய்கிறது. (மயிலைசீனி. வேங்கடசாமி.,2001: 39)

பசும்பூண் பாண்டியனும் சோழர் வழியில் வந்த உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னியும் சமகாலத்தவர் என்றும், இவன் சோழர் வழியில் வந்த ஐந்தாம் அரசன் என்றும் கூறப்படுகிறது. ''சோழர் வழியில் முதன் முதலில் வந்தவன் வெளியன் தித்தன் ஆவான். இவன் கி.மு. 50-ல் அரசுகட்டில் ஏறியிருக்கலாம் என்று கூறப்படுகிறது. அவ்வழியில் கடைசியாக வந்தவன் கோச்செங்கணான்'' என்று கூறப்படுகிறது. (சு. வித்தியானந்தன்.,1954: 14) எனவே ''பசும்பூண் பாண்டியனுடன் ஒத்த காலத்தவனாகிய உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னிக்குப் பின் தொடங்கிக் கோச்செங்கணான் இறுதிக்காலம் வரை ஆண்ட சோழ அரசருக்கு இருபத்தைந்து ஆண்டுகள் வீதம் கணித்துப் பார்த்தால், சோழர் ஆட்சி கி.பி. 200 உடன் முடிவடையும்'' (சு. வித்தியானந்தன்.,1954: 14) என்று கூறுவதன் மூலம் சோழரின் காலத்தை அறியமுடிகிறது. எனவே கி.மு. முதலாம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை உள்ள கால எல்லையைச் சங்ககாலம் என்று ஒருவாறு வரையறை செய்யலாம்.

### 1.3. சங்ககாலச் சமூகம்

சங்ககாலச் சமூகம் சேர, சோழ, பாண்டியரால் ஆளப்பட்டது என்றாலும், சிற்றரசர்களும், குறுநிலமன்னர்களும் இனக்குழுத் தலைவர்களும் ஆண்டுள்ளனர் என்பதைச் சங்க இலக்கியங்களால் உணரமுடிகிறது. சங்கச் சமூகத்தில் செல்வச் செழிப்புடன் வாழ்ந்தவர்கள் தலைமை மாந்தர்களாக மதிக்கப்பட்டனர். மற்றோர் அடிமைகளாகவும், வறுமையில் வாடுபவர்களாகவும் காணப்பட்டனர். கைத்தொழில் புரிபவர்களாகவும், வாணிபம்

செய்பவர்களாகவும் சங்ககால மக்கள் வாழ்ந்துள்ளனர் என்பதைப் பண்டைய, இலக்கியங்கள் குறிக்கின்றன.

### 1.3.1. நில அமைப்பு

சங்ககாலச் சமூகம் நானில அமைப்பு கொண்டதாக விளங்கியது என்பதை,

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"** (தொல்.பொருள்.அகத்.,நூ.எ: 5.,வ.எ்: 1-6) எனும் நூற்பாவால் அறியமுடிகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 9) குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பன முறையே மலை, காடு, வயல், கடல் என்னும் நில அமைப்பாக விளங்கின. ஆனால் இலக்கியங்களில் பாலை எனும் நிலமும் பற்றியும், அந்நிலம் சார்ந்த மக்கள் முதலாகிய கருப்பொருள்கள் காணப்படுவதும் குறிப்பிடத்தக்கது. இதனைத்,

**"தானலந் திருகத் தன்மையிற் குன்றி**
**முல்லையுங் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்**
**பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"** (சிலப்.காடு.கா.,வ.எ்: 63-66)

எனும் வரிகள் உறுதிசெய்கின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2005: 19-20) சங்க காலச் சமூகத்தின் நிலஅமைப்பு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து நிலங்களைக் கொண்ட சமூகமாக விளங்கியுள்ளது.

### 1.3.2. சங்ககால மக்கள்

சங்ககால மக்களுள் உழைத்துப் பிழைப்பவர்களும் இருந்தனர். தலைமைப் பொறுப்பினை ஏற்று ஆளும் மரபினரும் இருந்தனர். அவர்களுள், "கொண்கானக் கிழான், தோன்றிக் கோன், அம்பர்கிழான், அருவத்தை, கரும்பனூர்க்காரன், ஏறைக்கோன், பெரும்பெயர்ஆதி, நாலைக் கிழவன்நாதன், ஈர்ந்தையோன், ஓல்லையூர் சாத்தன், வில்லியாதன், அவியன், சிறுகுடிக்கிழான் பண்ணன், வேங்கடக் கிழவன், ஆதனுங்கன், பிடவூர்சாத்தன், வஞ்சன், வட்டாற்று எழினியாதன் ஆகிய 17 இனக்குழச் சமுதாயத் தலைவர்களைப்

பாணர்கள் தம் பாட்டுக்களில் பாடியிருக்கிறார்கள்.'' (துளசி. இராமசாமி.,2012: 815) இதன்வழிச் சங்ககாலச் சமூகத்தில் பல்வேறு இனக்குழுக்களாக மக்கள் வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. அவர்களுள் ஒருவன் அக்குழுவிற்குத் தலைவனாகவும் இருந்துள்ளான். இதுபோலவே ''பாரி, ஆய் அண்டிரன், பேகன், ஓரி, நள்ளி, அதியமான் அஞ்சி, அதியர் கோமான் எழினி, குமணன்'' போன்ற குறுநில மன்னர்களும் வாழ்ந்துள்ளனர். (துளசி. இராமசாமி.,2012: 815)

இனக்குழுக்களாக வாழ்ந்த சங்ககாலச் சமூகம் குறுநில மன்னர்களும், முடியுடை மூவேந்தர்களும் ஆட்சி செலுத்திய சமூகமாக விளங்கியுள்ளது. இத்தகைய சமூகத்தில் ஆளும் தன்மை கொண்டவர்களை நம்பி வாழும் கலைஞர் குழுவும் இருந்தது. இதனைப்,

''**பாணன், கூத்தன், விறலி, பரத்தை**

**யாணம் சான்ற அறிவர், கண்டோர்**

……………………………………

……………………………………

**தொல்நெறி மரபின் கற்பிற்குரியர்**'' (தொல்.பொருள்.,நூ.எ: 491.,வ.எ: 1-5)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 495) மேலும்,

''**துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று**

**இந்நான்கு அல்லது குடியும் இல்லை**'' (புறம்.,பா.எ: 335.,வ.எ: 7–8)

எனும் வரிகளும் துடியன், பாணன், பறையன், கடம்பன் என்னும் கலைஞர்களும் வாழ்ந்துள்ளனர் என்பதை உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1951: 268) இவர்களைப் போன்றே அகவுநர், வயிரியர், கண்ணுளர் கோடியர் போன்றோரும் வாழ்ந்துள்ளனர்.

முடியுடை மூவேந்தர்கள் முதல் இனக்குழுத் தலைவர்கள் வரையிலும், அவர்களை அண்டிப் பிழைக்கும் கலைஞர்களும் சங்ககாலத்தில் வாழ்ந்துள்ளனர். இச்சங்கச் சமூகத்தின் நில அமைப்போடு இயைந்து வாழ்ந்த மக்கள் சங்ககால மக்களாக விளங்கினர். அவர்கள் குறிஞ்சி எனும் மலையும் மலை சார்ந்த நிலத்தில் வாழ்ந்தவர்களும், முல்லை எனும் காடு சார்ந்த நிலத்திற்கு உரியவர்களும், மருதம் எனும் வயல் சார்ந்த நிலத்தை அடியொற்றி வாழ்ந்தவர்களும், நெய்தல் எனும் கடல் சார்ந்த வாழ்வாதாரத்தைக் கொண்டவர்களும்,

இவர்களை அடுத்துப் பாலைநில மக்களும் ஆவர். இத்தகைய மக்களினம் வாழ்ந்த பெரும் பரப்பாகச் சங்ககாலச் சமூகம் விளங்கியது.

**1.3.3. சங்ககால மக்களின் தொழில்கள்**

சங்ககால மக்கள் அவரவர் வாழ்ந்த இடத்திற்கும் சூழலுக்கும் ஏற்றவாறு பல்வேறு தொழில்களைச் செய்துள்ளனர். அவ்வகையில் அவர்கள், ஆநிரை மேய்த்தல், தினை பயிரிடுதல், உழவு செய்தல், மீன் பிடித்தல், உப்பு விளைத்தல், வழிப்பறி செய்தல், கொல்லர் (இரும்பு), பொற்கொல்லர், தச்சர், கலஞ்செய் மாக்கள், நூல் நூற்றல் மற்றும் நெய்தல், வணிகர், சானைக்கல் செய்வோர், சங்குவளை அறுத்தல், நாழிகைக் கணக்கர், தேர்த்தொழில் செய்தல், கிணறு வெட்டுவோர், பொன் விற்போர் என்னும் பல்வேறு தொழில்களைச் செய்துள்ளனர் என்று சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

**1.3.3.1. ஆநிரை மேய்த்தல்**

சங்ககாலச் சமூகத்தில் ஆநிரை மேய்ப்பவர்களை ஆயர், ஆய்ச்சியர் என்று வழங்கினர். இவர்கள் தம்முடைய முக்கியத் தொழிலாக மேய்த்தல் தொழிலைச் செய்தனர். இவ் ஆநிரைகளைக் கொண்டு கிடைக்கும் பால், தயிர், மோர், வெண்ணெய் போன்ற பொருட்களை விற்றுப் பிழைத்துள்ளனர். இதனை,

> “**ஆம்பி வான்முகை யன்ன கூம்புமுகி**
>
> **முறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து**
>
> **புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ**
>
> **நாண்மோர் மாறும்**” (பெரும்பாண்.,வ.எ்: 156–160)

என்னும் வரிகள், ஆநிரைகளால் கிடைத்த தயிரினை கலக்கி அதனை மோராக்கினர் என்று உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 90)

**1.3.3.2. தினைப்புனம் காத்தல்**

அக்கால மக்களுள் தினைப்புனம் காக்கும் தொழிலைச் செய்தவர்களை வெற்பன் என்றும் குறவர், குறத்தியர் என்றும் வழங்கினர். அவர்கள் உயர்ந்த மலையிடங்களைச் சமன் செய்து அதில் தினை பயிரிட்டனர். பின்னர் அதனை மயில், கிளி, யானை போன்ற பறவை விலங்குகளிடமிருந்து காவல் செய்யும் பணியையும் செய்துள்ளனர். இதனைப்,

> “**புலந்து புனிறு போகிய புனஞ்சூழ் குறவ**
>
> **ருயர் நிலை யிதணை மேறிக் கைபுடையூஉ**
>
> **வகன் மலை யிறும்பிற் றுவன்றிய யானைப்**

**பகனிலை தளர்க்குங் கவணுமிழ் கடுங்க**

**லிருவெதி ரீங்கழை தத்திக் கல்லெனக்**

**கருவிர லூகம் பார்ப்போ டிரிய**

**வுயிர் செகு மரபிய் கூற்றத் தன்ன**'' (மலைபடு.,வ.ள்: 203–209)

என்னும் வரிகள் சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 93) இம்மக்கள் உயர்ந்த பரனை அமைத்து, அதன் மேல் ஏறி நின்று யானைகள் மீது கவண் கற்களை எறித்து தினைப் புனத்தைக் காத்தனர் என்பதை இதன்மூலம் அறியமுடிகிறது.

**1.3.3.3. உழவு செய்தல்**

சங்கச் சமூகத்தில் உழவுத் தொழில் செய்தவர்கள் உழவர், உழத்தியர் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் மண்ணைப் பண்படுத்தி அதில் நெல்லைப் பயிர் செய்தனர். நில வளமும் நீர் வளமும் ஒருங்கே வாய்க்கப் பெற்றதால் இம்மக்கள் செழிப்புடன் வாழ்ந்துள்ளனர். மனித நாகரிக வளர்ச்சிக்கு இந்நில மக்கள் ஆதாரமாக விளங்கினர் என்று அறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். ''ஆற்றுப் பாய்ச்சலுள்ள வயலும் வயல் சார்ந்த இடமும் மருதநிலம் எனப்படும். நாகரிக வளர்ச்சி பெற்ற பகுதி இந்நிலப் பகுதியேயாகும்.'' (மா. இராசமாணிக்கனார்.,2009: 17) எனும் கூற்றின் வழி மருதநில வளத்தை உணரமுடிகிறது. இம்மக்களின் உழவுத் தொழிலைப் பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது. உழவுத் தொழிலின் பணிகளுள் நாற்று நடுதல், அறுவடை செய்தல், காற்றிலே தூற்றுதல் போன்றவற்றை விரிவாகக் குறிப்பிடுகிறது.

''**முடிநா றழுத்திய நெடுநீர்ச்செறு**'' (பெரும்பாண்.,வ: 212)

எனும் வரியானது, நாற்றுநடுதலை உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 106) மற்றும்,

''**நீங்கா யாணர் வாங்கு கதிர்க் கழனிக்**

……………………………………

……………………………………

**குடகாற் றெறிந்த குப்பை**'' (பெரும்பாண்.,வ.ள்: 228–240)

எனும் இவ்வரிகள், அறுவடை செய்தல், காற்றில் தூற்றிவிடுதல் போன்ற உழவுத் தொழிலைச் செய்தனர் என்று உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 110)

**1.3.3.4. மீன் பிடித்தலும் உப்பு விளைத்தலும்**

பண்டைத் தமிழகத்தில் கடலோரத்தில் தங்கள் வாழ்வை நிலை நாட்டியவர்கள் பரதவர், பரத்தியர் என்று வழங்கப்பட்டனர். இவர்கள் மீன் பிடித்தலையும், கடலிலிருந்து உப்பு விளைத்தலையும் தங்கள் முக்கிய தொழிலாகச் செய்தனர். இவர்கள் வலை கொண்டு மீன் பிடித்த காரணத்தால் வலைஞர் எனவும் அழைக்கப்பட்டனர். இதனை,

> "**வள்ளை நீக்கி வயமீன் முகந்து**
>
> **கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்**" (மது.கா.,வ.ள்: 255–256)

எனும் வரிகள் மூலம் வலைஞர் மீன்பிடித்தனர் என்பது புலனாகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 107) இந்நிலச் சிறார்கள் அலை கடலில் குளித்து விளையாடினர். பின் அவர்கள் உப்புக் குவியல்கள் மேல் ஏறிநின்று தன் தந்தையர்களின் வருகையை எதிர்பார்த்திருந்தனர். இதனைத்,

> "**திரையுழந் தசைஇய நிரைவளை ஆயமொடு**
>
> **உப்பின் குப்பைஏறி, ஏற்பட**
>
> **வருதிமில் எண்ணும் துறைவனொடு ஊரே**" (அகம்.,பா.எ: 190.,வ.ள்: 1-3)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 167)

**1.3.3.5. வழிப்பறி செய்தல்**

சங்ககாலத் தமிழகத்தில் பாலை எனும் ஓர் இயல் நிலம் இல்லை என்றாலும், அது குறிஞ்சி முல்லையின் வறட்சி கால நிலப்பகுதியைக் குறிக்கும் என்பதைச் சிலப்பதிகாரத்தால் அறியமுடிகிறது. இத்தகைய பாலை நிலமானது எப்போதும் வறண்ட நிலப்பகுதியாகவே காணப்படுவதால், அந்நில மக்கள் வழிப்பறிக் கொள்ளையைத் தங்கள் தொழிலாகச் செய்துள்ளனர். அவர்கள் விலங்குகளை வேட்டையாடியுள்ளனர் என்பதைப்,

> "**உலைக்க லன்ன பாறை யேறிக்**
>
> **கொடுவி லெயினர் பகழி மாய்க்கும்**" (குறுந்.,பா.எ: 12.,வ.ள்: 2 – 3)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 57) வேட்டையாடுதலுக்குத் தேவையான அம்புகளைப் பாறையில் தீட்டினர் என்பதால் வேட்டைத் தொழிலைச் சங்ககால மக்கள் செய்துள்ளனர் என்பது பெறப்படுகிறது.

### 1.3.3.6. கொல்லர் (இரும்பு வேலை செய்வோர்)

இரும்பு கொண்டு வேலை செய்யும் மக்களைக் கொல்லர் என்று வழங்கினர். இத்தகைய கொல்லர் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

“.........................**கொல்லன்**

**எறிபொற் பிதிரிற் சிறுபல் காய**

***வேங்கை வீயுகும்***...” (நற்.,பா.எ: 13.,வ.ள்: 5–7)

எனும் வரிகள், உணரச்செய்கின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 18 - 19) சிறிய பல காய்களை உடைய வேங்கையின் மலர்கள் உதிர்தல் என்பது, காண்பதற்குக் கொல்லனது உலைக்களத்து இரும்பின் பொறி சிதறுமாறு தோன்றும் எனக் கொல்லன் தன் தொழிலைச் செய்யும் உலையில் பயன்படுத்தப்படும் கொல்லனது குறடுபோல நண்டினது கால் இருக்கும் என்று உவமிக்கப்படுகிறது. இதனை,

“**வல்புல மிறந்த பின்றை மென்றோல்**

***மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன***

***கவைத்தா னலவன் அளற்றளை சிதைய***” (பெரும்பாண்.,வ.ள்: 206-208)

எனும் வரிகள் மெய்ப்பிக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 104-106)

### 1.3.3.7. பொற்கொல்லர்

சங்ககாலச் சமூகத்தில் பொன்னை உருக்கி ஆபரணங்கள் செய்யும் பொற்கொல்லர் தொழிலும் செய்துள்ளனர். இதனைப்,

“***பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்***” (பெரும்பாண்.,வ: 220)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 108) பொன்னை உரைத்து மாற்று காணும் உரைகல்லைப் பற்றிக் கூறுவதன்மூலம் பொற்கொல்லர் தொழிலைச் சங்ககால மக்கள் செய்துள்ளனர் என்பது பெறப்படுகிறது. மேலும்,

“***கட்டளையன்ன மணிநிறத் தும்பி***” (ஐங்.,பா.எ: 215.,வ: 1)

எனும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 318)

“***கட்டளை யன்ன கேழன்***” (ஐங்.,பா.எ: 263.,வ: 2) எனும் வரியும், முறையே தும்பி, தலைவன் இருவரும் உரை கல்லைப் போன்றோர் என உவமிக்கப்படுகின்றனர். (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 394) இதன்வாயிலாகச் சங்கச்சமூகத்தில் பொன்னைக் கொண்டு தொழில் செய்யும் பொற்கொல்லர் வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

1.3.3.8. தச்சர்

சங்ககாலத்தில் தச்சுத் தொழில் மிகவும் சிறந்த முறையில் விளங்கியுள்ளது. இதனை நெடுநல் வாடையில் சிறப்புறக் காணமுடிகிறது. “சிற்ப நூலை கற்றறிந்த தச்சர் நுட்பமாக நூலை நேரே பிடித்துத் திசைகளைக் குறித்துக்கொள்வர். மதிலின்கண் அமைந்த வாயில், ஆணிகளும் பட்டங்களுமாகிய வலிய இரும்பாலே செய்யப்பட்டது. அதில் சாதிலிங்கக் குழம்பு பூசப்பட்டுள்ளதும் குறிப்பிடப்படுகிறது. மதில், தாழோடு அமைந்த இரு கதவுகளை உடையது. அக்கதவானது, கைத்தொழில் வல்ல தச்சன் திறம்பட அமைத்தலினாலே இடைவெளியற்றுக் காணப்படுகிறது. இதனைப்,

“**பரு விரும்பு பிணித்துச் செல்வரக் குரீஇத்**

……………………………………

…………………………………

**கைவல் தம்மயன் முடுக் தலிற் புரைதீர்ந்து**” (நெடுநல்.,வ.ள்: 80–85 )

இவ்வரிகளின் மூலம் தச்சுத் தொழிலின் சிறப்பு புலனாகிறது. (பொ. வே. சோமசுந்தரனார். (உ.ஆ).,2007: 48)

1.3.3.9. கலஞ்செய் மாக்கள் (குயவர்)

கலஞ்செய் மாக்கள் என்பவர் குயவர்களே ஆவர். சங்ககாலத்தில் தாழி போன்ற மண்ணாலான பொருட்களை இவர்கள் வனைந்தனர். இதனை,

“**இலங்குமலை புதைய வெண்மழை கவைஇக்**

**கலஞ்சுடு புகையிற் றோன்றும்**” (அகம்.,பா.எ: 308.,வ.ள்: 5–6)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.,(உ.ஆ).,2008: 11–21) மட்கலம் சுடும் சூளையின் புகைபோல விளங்கும் வெள்ளிய மேகம், மலைகள் மறையுமாறு சூழ்ந்து தோன்றும். இதன் வாயிலாக கலஞ்செய் மக்களாகியக் குயவர் வாழ்ந்தமை புலனாகிறது.

1.3.3.10. புலைத்தியர் (சலவை செய்வோர்)

களர் நிலத்து உவர் மண் ஆடைகளில் உள்ள கறைகளைப் போக்கும் என்பதை அறிந்தவர்கள் இவர்கள். இவர்கள் புலைத்தியர் எனப்பட்டனர். இதனைக்,

“**களர்ப்படு கூவற் றோண்டி நாளும்**

**புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை**” (புறம்.,பா.எ: 311.,வ.ள்: 1–2)

என்னும் வரிகள், குறிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.,(உ.ஆ).,2007: 219) களர் நிலத்து உண்டாகிய கூவலைத் தோண்டி நாள்தோறும் புலைத்தி (வண்ணாத்தி) துவைத்து வெளுத்ததால், அவ்ஆடையானது தூய வெள்ளிய ஆடைபோன்று விளங்கியது. இதன்வழிச் சங்ககாலத்தில் சலவை செய்யும் தொழில் செய்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**1.3.3.11. நூல் நூற்றலும் நெசவுத் தொழிலும்**

நூல் நூற்றலும் நெசவுத் தொழிலும் தமிழகத்தின் இன்றியமையாத தொழில்கள் ஆகும். சங்ககாலத்தில் பட்டு, பஞ்சு போன்றவற்றால் நெசவுத் தொழில் செய்துள்ளனர். நூல் நூற்று நெய்த ஆடையை அறுவை என்றும், கலிங்கம் என்றும் வழங்கினர். இத்தகைய நெசவுத் தொழிலை,

> ***“நோக்குநுழை கல்லா நுண்மைய பூக்கனிந்து***
>
> ***அரவுரி யன்ன அறுவை நல்கி”*** (பொருந.,வ.எ: 82–83)

எனும் வரிகள், விளக்குகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 54) கண்களால் கண்டு இ∴து இழைபோன வழியென்று குறித்துப் பார்க்க முடியாத அளவிற்கு மிகவும் நுண்மையை உடைய துகிலை அக்கால மக்கள் நெசவு செய்துள்ளனர்.

**1.3.3.12. சானைக்கல் செய்வோன்**

சங்ககாலச் சமூகத்தில் அம்மக்கள் பல்வேறு தொழில் புரிந்துள்ள நிலையில், சானைக்கல் செய்யும் தொழிலையும் செய்துள்ளனர். இதனைச்,

> ***“சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய***
>
> ***கற்போர் பிரியலம்”*** (அகம்.,பா.எ: 1.,வ.எ: 5–6)

எனும் வரிகள், உரைக்கின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ)., 1944: 8) சிறியனாகிய சானைக்கல் செய்வோன் அக்கல்லினை அரக்கொடு சேர்த்து இயற்றியுள்ளான். அக்கல்லைப்போலப் பிரியாது தலைவன் தலைவி விளங்கினர் என்று உவமிக்கப்படுவதன் மூலம் சானைக்கல் செய்யும் தொழிலை அக்கால மக்கள் மேற்கொண்டனர் என்பது தெளிவுறுகிறது.

**1.3.3.13. சங்கு வளை அறுத்தல்**

சங்ககால மக்கள் கடலிலிருந்து கிடைக்கும் சங்கினை அறுத்து வளையல் செய்யும் தொழிலை மேற்கொண்டுள்ளனர். இதனை,

> ***“வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த***

***வளை களைந் தொழிந்த கொழுந்தி னன்ன***'' (அகம்.,பா.எ: 24.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், குறிக்கின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.,(உ.ஆ).,1944: 73) யாகம் செய்யாத பார்ப்பணர்களாகிய ஊாப்பார்ப்பான் என்போர் கூரிய அரத்தால் அறுத்தெடுத்து வளையல்கள் செய்துள்ளனர். வளையல்கள் செய்ததுபோக எஞ்சிய சங்கின் தலைப்பகுதியானது பகன்றையின் அரும்புகள் போன்று காணப்பட்டதாகச் சங்கினை உவமிக்கின்றனர்.

**1.3.3.14. நாழிகைக் கணக்கர்**

சங்ககாலத்தில் பொழுதினைக் கணக்கிட்டுக் கூறுபவருக்கு நாழிகைக் கணக்கர் என்று பெயர் வழங்கப்பட்டது. இதனை,

''***நிலனும் விசும்பும் நீரியைந் தொன்றிக்***

***குறுநீர் கன்னல் எண்ணுநர் அல்லது***

***கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்த்***'' (அகம்.,பா.எ: 43.,வ.ள்: 5-7)

எனும் வரிகள், விளக்குகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 119) நிலமும் வானமும் நீர் இயைந்து ஒன்றிக் கார்மேகத்தால் சூழ்ந்திருக்கும்போது கதிரவன் இருக்கும் இடம் எதுவெனத் தெரியாது மக்கள் அஞ்சுவர். அவர்களின் அச்சத்தைப் போக்குபவர் குறிய நீரையுடைய நாழிகை வட்டிலால் நாழிகை அளந்து கூறுவர். நாழிகையைக் கணக்கிட்டு உரைக்கின்ற காரணத்தால் நாழிகைக் கணக்கர் எனப்பட்டனர்.

**1.3.3.15. தேர்த்தொழில் செய்பவர்**

சங்கஇலக்கியங்களில், தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் மீண்டு வரும்போது, அவனின் வருகையை உணர்த்தும் பாடல்கள் எண்ணற்றவை உள்ளன. அவ்வாறு தலைவன் வருகின்ற தேரும், தேரின் வலிமையும், அழகும் எண்ணற்ற பாடல்களில் பேசப்பட்டுள்ளன. இதனை,

''***மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்***'' (அகம்.,பா.எ: 4.,வ: 12)

எனும் வரி, சுட்டுகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 18) தேரில் பூட்டியிருக்கும் மணிகளின் நாவை ஒலியாமற் கட்டிய மாண்புற்ற தொழிலமைந்த தேரினையுடையவன் தலைவன். நன்கு தொழிலமைந்த தேர் எனத் தேரின் திறம் கூறப்படுவதால், தேர்த்தொழிலில் வல்லவர்களைக் கொண்டு தேர் வடிவமைக்கப்பட்டது புலனாகிறது.

1.3.3.16. கிணறு வெட்டுபவர்

சங்ககாலச் சமூகத்தில கிணறு வெட்டும் தொழில் நடைபெற்றுள்ளது. அவ்வாறு கிணறு வெட்டியும் நீர் ஊராத வெற்றுக் கிணறுகளும் இருந்துள்ளன என்பதைக்,

''…………………***கூழார் கூவலர்***

***ஊறா திட்ட உவலைக் கூவல்***'' (அகம்.,பா.எ: 21.,வ.ள்: 22-23)

எனும் வரிகள், பகருகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 66) ''கூழினை உண்ணும் கிணறு வெட்டுவோர் அகழ்ந்து பார்த்தும் நீர் ஊறாமையால் விட்டேகிய தழை மூடிய கிணறுகள்'' அக்காலச் சமூகத்தில் காணப்பட்டன. இதன்முலம் தண்ணீருக்காக அக்கால மக்கள் கிணறுவெட்டினர் என்பது பெறப்படுகிறது.

1.3.3.17. பொன் வணிகர் (பொன் விற்போர்)

சங்ககாலச் சமூகத்தில் பொன்னாலான ஆபரணங்கள் செய்யும் வணிகரும் இருந்துள்ளனர். இதனைப்,

''………………………………***பகர்நர்***

***பவளச் செப்பில் பொன்சொரிந் தன்ன***'' (அகம்.,பா.எ: 25.,வ.ள்: 10-11)

எனும் வரிகள், குறிப்பிடுகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 76) பொன்விற்போர் பவளச் (செப்பிற்) சிமிழில் அக்காலத்தில் பொற்பொடியைச் சொரிந்து வைத்துள்ளனர். இதன்வழிப் பொன் வணிகத்தை அறியமுடிகிறது.

சங்ககாலச் சமூகத்தில் பலதரப்பட்ட தொழில்களை மக்கள் செய்துள்ளனர். இத்தகைய தொழில் புரியும் மக்களுக்கு அத்தொழில் சார்ந்த பெயர்களும் வழங்கப்பட்டுள்ளன. மற்றும் வணிகர் பொன்னை மட்டுமல்லாமல் பல்வேறு பொருட்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டு சென்று விற்றனர் என்பதையும் அறியமுடிகிறது.

1.3.4. சங்ககால மக்களின் பழக்கவழக்கங்கள்

பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். இது தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையை குறிப்பதாகும் என்று கலைக்களஞ்சியக் குறிப்புகள் உணர்த்துகின்றன. (கலை – களஞ்.,தொகு-7: 29-30) இத்தகைய ''பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கமாகும். வழக்கம் சமூகம் சார்ந்த ஒன்றாகும் என்று கூறப்படுகிறது. இத்தகைய பழக்கவழக்கங்களைத் தனிமனிதனும் சமுதாயம் என்ற அமைப்பும் இணைந்து

உருவாக்குகின்றன. (மு. காந்தி.,2008: 13 - 14) இங்ஙனம் உருவான பழக்கவழக்கங்கள் சங்ககால மக்களிடம் காணப்படுகின்றன.

#### 1.3.4.1. வழிப்பாட்டு முறைகள்

சங்ககால மக்களின் பழக்கவழக்கங்களுள் வழிபாட்டுமுறை குறிப்பிடத்தக்கது. இவ்வழிபாட்டு முறையானது வெறியாட்டு, நடுகல் வழிபாடு மற்றும் கடவுளர் வழிபாடு என்று வகைப்படுத்தப்படுகின்றன.

#### 1.3.4.2. வெறியாட்டு

தமிழருடைய வழிபாட்டிலே வெறியாட்டு முதலிய ஆட்டங்கள் முக்கிய இடம்பெற்றன என்று தொல்காப்பியம் உணர்த்துகிறது. முருக வழிபாடு பற்றிக் குறிப்பிடும் இடங்களில் வெறியாட்டு நிகழ்வுகள் பேசப்படுகின்றன. இதனை,

> "**வெறியறி சிறப்போன் வெவ்வாய் வேலன்**
>
> **வெறியாட் டயர்ந்த காடுகளும்**" (தொல்.பொருள்.புறத்.,நூ.எ: 63.,வ.ள்: 1-2)

எனும் தொல்காப்பியக் கூற்று மேற்சொன்ன கருத்தைப் புலப்படுத்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 80) அதுபோல,

> "**மென்றோ ணெகிழ்த்த செல்லல் வேலன்**
>
> **வென்றி நெடுவே ளென்னும்**" (குறுந்.,பா.எ: 111.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், மொழிகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 209) தலைவியின் மெல்லிய தோளை மெலியச் செய்த துன்பமானது வெற்றியையுடைய முருகக் கடவுளால் வந்தது என்று வேலன் சொல்லுபவன் குறிப்பிடுகிறான். இதன்மூலம் சங்ககால மக்களிடம் வெறியாட்டு என்னும் வழிபாட்டுமுறை இருந்தமை புலனாகிறது.

#### 1.3.4.3. நடுகல் வழிபாடு

சங்ககாலம் போரும் வீரமும் காதலும் நிறைந்த காலம். அக்காலத்தில், போரில் விழுப்புண் பட்டு வீர மரணம் அடைந்தவர்களுக்கு மரியாதை செலுத்தும் விதமாக நடுகல் வழிபாடு செய்யப்பட்டுள்ளது. கல்லில் வீரனின் உருவத்தை வடித்து வழிபடும் வழக்கமும் சங்ககால மக்களிடம் காணப்படுகிறது. இதனைக்,

> "**கிடுகுநிரைத் தென் கூன்றி**
>
> **நடுகல்லி ரைண் போல்**" (பட்டினப்.,வ.ள்: 78-79)

என்னும் வரிகளும், (பொ. வே.சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 48)

“..................**பெயர் மருங் கறிமார்**

**கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த**

**கடவுள்**” (மலைபடு.,வ.எ்: 394-396)

என்னும் வரிகள், சங்ககால மக்களின் நடுகல் வழிபாட்டினை உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 143)

1.3.4.4. கடவுளர் வழிபாடு

சங்ககால மக்கள் கடவுளராகிய, இந்திரன், மால், முருகன், உமை, வருணன், தேவர்கள் போன்றோரை வழிபட்டுள்ளனர். இதனை,

“**இந்திர விழவிற் பூவின் அன்ன**

**புன்தலைப் பேடை வரிநிழல் அகவும்**” (ஐங்.,பா.எ: 62.,வ.எ்: 1-2)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 97) அக்காலத்தில் **இந்திரனுக்கு** விழா எடுத்துள்ளனர். இவ்விழாவில் பூக்களை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**திருமால்** வழிபாடு பற்றிப் பரிபாடல் தெற்றென உணர்த்துகின்றது. எனினும் சங்க இலக்கியங்கள் பலவும் மால் வழிபாட்டினை உணர்த்துகின்றன என்பதைப்,

“**புகழ்தல் உற்றோர்க்கு மாவோன் அன்ன**

**உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற**” (புறம்.,பா.எ: 57.,வ.எ்: 2-3)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1947: 150) அதேபோன்று **முருகன்** வழிபாடு பற்றியும் பரிபாடல் உணர்த்துகிறது. இதனைக்,

“**களம் நன்கு இழைத்து கண்ணி சூட்டி,**

.................................................

.................................................

**முருகு ஆற்றுப்படுத்த உருகெழு நடுநாள்**” (அகம்.,பா.எ: 22.,வ.எ்: 8-11)

எனும் வரிகள், புலப்படுத்துகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 68 - 69) வெறியாடும் களம் நன்கு அமைத்து (வேலிற்கு)க் கண்ணளி சூட்டினர் என்றும், வளம் பொருந்திய கோயிலில் ஒலி உண்டாகப் பாடல் பாடினர் என்றும், அழகிய செந்தினையைக் குருதியுடன் கலந்து தூவி முருகனை வரவழைத்தனர்.

சங்கஇலக்கியங்கள் **சிவனை** முக்கண்ணன் என்றும், நீலமணி மிடற்றன் என்றும் பலவாறு உணர்த்துகின்றன. அவ்வகையில்,

"**மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்**

**முக்கண்ணா னுருவேபோல் முரண்மிகு குராலும்**" (கலி.,பா.எ: 104.,வ.ள்: 11-12) எனும் வரிகள், சுட்டுகின்றன. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 324) குரால் என்னும் ஏற்றின் நிறத்தொடு முக்கண்களின் நிறம் ஒப்புமையாகக் கூறப்படுகிறது. மேலும், இக்கலித்தொகையானது **உமையின்** வழிபாடு பற்றியும் உணரச்செய்கிறது என்பதை,

"**உமைஅமர்ந்து உயர்மலை இருந்தன னாக**" (கலி.,பா.எ: 38.,வ: 2)

எனும் வரியால், சங்ககால மக்களின் வழிபாடுகளில் உமையின் வழிபாடும் இருந்தது என்பதை உணரமுடிகிறது. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 106) இத்தகைய கடவுளர் வழிபாட்டினைத் தொல்காப்பியமும்,

"**மாயோன் மேய காடுறை உலகமும்**

**சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**" (தொல்.பொருள்..அகத்.,நூ.எ: 5)

என்னும் நூற்பாவால் விளக்குகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 9) சங்ககாலச் சமூகத்தில் இத்தகையக் கடவுளர் வழிபாடும், நடுகல் வழிபாடும் வெறியாட்டு நிகழ்த்துதலும் மக்களின் பழக்க வழக்கங்களாகக் இருந்தமையைக் காணமுடிகிறது.

### 1.3.4.5. நம்பிக்கைகள்

நம்பிக்கை மனிதனின் வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்குவது. அத்தகைய நம்பிக்கைகள் சங்ககால மக்களிடம் பரந்துபட்டுக் காணப்படுகின்றன. அவர்கள், கோள்கள் மீதும் நம்பிக்கை கொண்டிருந்தனர். அதுபோல அக்கால மக்கள் தாம் வாழ்ந்த இடங்களிலும், தாம் பயன்படுத்திய பொருட்களிலும் கூட தெய்வம் உறைந்துள்ளதாக நம்பிக்கை கொண்டிருந்தனர். மேலும் பேய்கள் மீதும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

### 1.3.4.6. கோளும் நாளும்

சங்ககால மக்கள் கோள்கள் மீது மட்டுமல்ல நாள்கள் மீதும் நம்பிக்கை கொண்டிருந்தனர். அவற்றுள் "ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்னும் ஏழும், இராகு, கேது என்னும் இரு பாம்புகளும் ஆக ஒன்பதும் கோள்கள்

(கிரகங்கள்) எனப்படும்.'' (மு. சண்முகம் பிள்ளை.,2003: 164) சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் போன்றவற்றை நாள்கள் என்று அவர்கள் வழங்கினர். இதனை,

''**நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரும்**

**நாண்மீன் விராய கோண்மீன் போல**

**மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇ**'' (பட்டினப்.,வ.ள்: 67 - 69)

எனும் வரிகள், உரைக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 44-45) நாள்களோடு கோள்களும் விரவி, ஒரு குழுவாக வடிவு கொண்டு சூழ்ந்து வருதலை உணர்த்துகின்றன. சங்ககால மக்கள் நாள்களிலும் கோள்களிலும் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதை உணரமுடிகிறது.

**1.3.4.7. யாழில் தெய்வம் உறையும்**

சங்ககால மக்களின் வாழ்வியலுக்குள் யாழ் என்னும் இசைக்கருவி மிக்க இன்றியமையாத இடம்பிடித்துள்ளது. இவ்யாழின் மீது தெய்வம் உறைந்துள்ளதாக அக்கால மக்கள் நம்பினர். இதனை,

''**மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன**

**அணங்கு மெய்ந் நின்ற அமைவரு காட்சி**

**ஆறலை கள்வர் படைவிட அருளின்**

**மாறுதலை பெயர்க்கும் மருவுநின் மாலை**'' (பொருந.,வ.ள்: 19 - 22)

என்னும் வரிகள், கூறுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 28) பொருநன் கையில் ஏந்திச் செல்லும் பாலை யாழை வருணிக்கின்றனர். இதில் அணங்கு என்பது யாழிற்குரிய தெய்வமாகும். சங்கச் சமூகத்தில் தாம் பயன்படுத்திய பொருளிலும் தெய்வம் இருப்பதாக மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். இதன் வாயிலாகவே ''செய்யும் தொழிலே தெய்வம்'' எனும் கூற்றும் உருவாகியிருக்கக் கூடும் என எண்ணமுடிகிறது.

**1.3.4.8. ஆயுதத்திலும் முரசிலும் தெய்வம்**

சங்ககால மக்களின் வாழ்வியலில் போரும் ஒன்று. போருக்குச் செல்லும் வீரர்களின் கையில் வைத்திருக்கும் ஆயுதங்களில் தெய்வம் உறைந்திருப்பதாக அவர்கள் நம்பியிருந்தனர். இதனை,

''**அரவின் பொறியும் அணங்குப் புணர்ந்த**

**உரவு வில்மேல் அசைத்த கையை**'' (கலி.,பா.எ: 50.,வ.ள்: 6-7)

எனும் வரிகள், விற்படையில் சேர்ந்துறையும் அணங்கைக் குறிப்பிடுகின்றன. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 150-151) பண்டை மன்னர்கள் முரசினைப் பெரிதும் போற்றினர். இம்முரசிலும் தெய்வம் உறைந்துள்ளதென அக்கால மக்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். இதனைப்,

"**பணை கெழு வேந்தரும் வேளிரும், ஒன்று மொழிந்து**

……………………………………………

…………………………………………………………

**கருஞ்சின வேந்தே! ~ நின் தழங்கு குரல் முரசே**" (பதிற்.,பா.எ: 30.,வ.எ்: 30-44) என்னும் வரிகள், புலப்படுத்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 129) முரசுறை கடவுளுக்குச் செய்யும் வழிபாட்டினையும், முரசொலி கேட்ட உடனே பிற பெருமன்னரும், குறுநில மன்னரும் நடுக்குற்றனர். அப்போது முரசுறைக் கடவுளை வழிபடுவோர் மிக்க சினத்துடன் உரக்க உச்சரிக்கப்படும் மந்திரங்களால் குருதியும் கள்ளும் முதலிய பலிகளைக் கொடுத்துள்ளனர். கொடுக்கும் பலி உணவைக் காக்கைகளும் பருந்தும் உண்ணுகின்றன. இதனால் பகைவர்களைத் தோற்றோடச் செய்யலாம் என எண்ணியுள்ளனர். இதன் வாயிலாக சங்ககால மக்களின் நம்பிக்கை புலனாகிறது.

**1.3.4.9. மரங்களில் தெய்வம்**

சங்ககால மக்கள் மரங்களிலும் தெய்வங்கள் வாழ்வதாக நம்பிக்கைக் கொண்டிருந்தனர். என்பதை,

"**நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து**" (நற்.,பா.எ: 343.,வ: 4)

எனும் வரியும், (அ. நாராயணசாமிஐயர்.(உ.ஆ).,1952: 423)

"**தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில**" (அகப்.,பா.எ: 309.,வ: 4)

என்னும் வரியும், (ந. மு. வேங்கடசாமிநாட்டார்.(உ.ஆ).,2008: 23) மரங்களில் தெய்வம் உறைந்துள்ளதை உணர்த்துகிறது. இதன்மூலம் அக்கால மக்கள் கொண்டிருந்த மரங்கள் மீதான தெய்வநம்பிக்கை புலனாகிறது.

**1.3.4.10. நிமித்தம் பார்த்தல்**

நிமித்தம் பார்த்தல் என்பது சங்ககால மக்களின் பழக்க வழக்கங்களுள் ஒன்றாக இருந்துள்ளது. அப்பழக்க வழக்கங்கள் மீது அவர்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தனர். இந்நிமித்தங்களுள் நன்நிமித்தம், தீநிமித்தம் என இருவகை நிமித்தங்கள் இருந்தன. நன்

நிமித்தங்களாவன புள், ஓந்தி, பல்லி, காக்கை, காரிப்புள், மாந்தர் உறுப்புகள் - கண் துடித்தல், தும்மல் போன்றவற்றால் நிகழும் என்று அவர்கள் நம்பினர். ஏதாவது ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன் நல்ல நாளும், பொழுதும், நன்னிமித்தமும் பார்த்துத் தொடங்குவது தமிழ் மக்களிடம் தொன்றுதொட்டு இருந்து வரும் ஒரு வழக்கமாகும்.

பல்லியின் சத்தம் நன்நிமித்தமாகக் கொண்டனர் பண்டைத் தமிழர்கள். இதனை வலியுறுத்துமாறு ''இனிய கூறும் பல்லி'' என நற்றிணையும், ''நிகழ்வதைக் கூறும் பல்லி'' எனும் பொருள்பட அகநானூறும் பல்லி நிமித்தத்தை உணர்த்துகின்றன.

தீ நிமித்தங்கள் எனச் சிலவற்றையும் சங்ககால மக்கள் நம்பினர். இயற்கையின் மாறுபட்ட செயல்முறைகள், பறவை, விலங்கு, கனவு ஆகியவற்றின் வழித் தீநிமித்தங்களைச் சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன.

உன்னம் என்பது ஒரு வகை மரமாகும். இம்மரம் தழைத்து காணப்பட்டால் வெற்றி கிட்டும் என்றும், கரிந்து காணப்பட்டால் தோல்வி உறுதி என்றும் அவர்கள் நம்பினர். இதனை,

''**வேண்டிடத் தரூஉம் வெல்வோர் வேந்தே**

……………………………………………

**வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்**'' (புறம்.,பா.எ: 41.,வ.ள்: 3-6)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1947: 113) இதில், வற்றிய மரம் தீப்பற்றிய நிலை தீநிமித்தக் குறியாகக் கூறப்பட்டுள்ளது.

### 1.3.4.11. கள்ளுண்ணுதலும், படைத்தலும்

சங்ககால மக்களிடம் கள்ளுண்டு தம் மகிழ்வைக் கொண்டாடும் பழக்கம் இருப்பதைப் பல்வேறு சங்கப்பாக்கள் உணர்த்துகின்றன. குறிப்பாகத் தங்களைப் பாடவரும் புலவர்களுக்கு மன்னர் பெருமக்கள் கள்ளை உண்ணுமாறு கொடுத்து மகிழ்வித்தனர். இதனைச்,

''**சிறியகட் பெறினே எமக்கு ஈயும் மன்னே**

**பெரியகட் பெறினே**

**யாம்பாடத் தான் மகிழ்ந்து உண்ணும் மன்னே**'' (புறம்.,பா.எ: 235.,வ.ள்: 1-3)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 76) அதியமான் நெடுமான் அஞ்சியின் பிரிவைத் தாழாத அவ்வை பாடியதாகும். அக்காலத்தில் மன்னர்கள் புலவர்களுக்கு உண்பதற்குக் கள்ளைக் கொடுத்துள்ளனர்.

இத்தகையக் கள்ளினை வழிபாட்டின் படையல் பொருளாகவும் சங்ககால மக்கள்

பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**"இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்**

**புடைநடு கல்லின் நாட்பலி யூட்டி"** (புறம்.,பா.எ: 329.,வ.எ்: 1-2)

எனும் வரிகளும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 255)

**"நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்**

**தோப்பிக் கள்ளொடு துரூஉப்பிலி கொடுக்கும்"** (அகம்.,பா.எ: 35.,வ.எ்: 8-9)

எனும் வரிகளும், உணர்த்துகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 100) இதன் வாயிலாக நடுகல் வழிபாட்டில் கள் படைக்கப்பட்ட செய்தியை அறியமுடிகிறது.

**1.3.4.12. மழைச் சடங்கு**

சங்ககால மக்கள் மழை வேண்டி அதற்காகக் கடவுளுக்குப் பலிகொடுக்கும் வழக்கம் கொண்டவர்களாக விளங்கினர். இதனை,

**"மலைவான் கொள்கெனவுயர் பலிதூஉய்**

**மாரியான்று மழைமேக் குயர்கெனக்**

**கடவுட் பேணிய குறவர் மாக்கள்"** (புறம்.,பா.எ: 143.,வ.எ்: 1-3)

என்னும் வரிகள், குறிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 300) குறிஞ்சி நில மக்கள் மழை வேண்டித் தெய்வத்தை வணங்கியுள்ளனர். சங்ககாலச் சமூகத்தில் மக்கள் தங்கள் வாழ்விடங்களுக்கு ஏற்ற பழக்க வழக்கங்களைப் பெற்றிருந்தனர். மேலும் அவர்கள் பழக்கவழக்கங்களில் வாயிலாக நம்பிக்கையுணர்வு மிக்கவர்களாக விளங்கினர் என்பதையும் அறியமுடிகிறது.

**1.3.5. சங்ககாலச் சமூகக் கட்டுப்பாடும் சீர்கேடும்**

சங்ககாலச் சமூகம் நம்பிக்கைகளும், எண்ணற்ற பழக்க வழக்கங்களும் நிறைந்தது. அத்தகைய சமூகத்தில் நிறைய கட்டுப்பாடுகளும் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன. ஓர் ஆண்மகன் கல்வி, காவல், பொருள் என்னும் காரணங்களுக்காகப் பிரிந்து செல்கின்றான். அவ்வாறு அவன் பிரிந்து செல்வதற்குச் சில கால வரையறையை வகுத்துள்ளனர். அதுபோல பரத்தையற் பிரிவின் போதும் சில கால வரையறையைப் பின்பற்றியுள்ளனர் என்பதை இலக்கணங்கள் வகுத்துரைக்கின்றன. தொழில் புரிவதிலும் வரையறைகள் வகுக்கப்பட்டுள்ளன. இருப்பினும் சங்ககாலச் சமூகத்தில் பெண்களுக்காக விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் எண்ணற்றவையாகக் காணப்படுகின்றன. இத்தகையக் கட்டுப்பாடுகள் ஒருபுறமிருக்க,

சமுதாயத்தில் சீர்கேடும் பரந்துபட்டுக் காணப்படுகிறது.

**1.3.5.1. பிரிவுக்கால வரையறை**

சங்ககாலச் சமூகத்தில் ஓர் ஆண்மகன் கல்வி, காவல், தூது, பொருள் இவற்றிற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்வதாகச் சங்கஇலக்கியங்கள் பகருகின்றன. இலக்கணங்கள் அவற்றைை மெய்ப்பிக்கின்றன. இத்தகையப் பிரிவிற்குச் சில கால எல்லையைக் கணக்கிட்டு அதன்படி பிரிந்து சென்றுள்ளனர். மேலும் அவர்கள் அக்குறிப்பிட்டக் கால எல்லைக்குள் மீண்டு வருகின்றனர் என்றும் உணர்த்துகின்றன.

**1.3.5.2. கல்விப்பிரிவு**

கல்விக்குப் பிரியும் பிரிவானது மூன்று ஆண்டுகளுக்கு மேல் இருக்கக் கூடாது என்று தொல்காப்பியம் உணர்த்துகிறது. இதனை,

''**வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது**'' (தொல்.பொருள்.கற்., நூ.எ: 186.,வ:1)

எனும் கூற்றினால், அறியப்படுகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 311)

''கல்வியிற்பிரிவு முதலாகிய ஐந்தினுள்ளும் தூதும், உதவியும் காரணமாகிய பிரிவின்கண் அவ்வினை ஓர் யாண்டின் முடியாது. நீட்டித்து முடிந்துழி.....'' என்று உணர்த்துகிறது. இதன்மூலம் கல்விக்கு உரிய பிரிவின் காலத்தை அறியமுடிகிறது.

**1.3.5.3. காவல் பிரிவு**

காவல்பிரிவானது, அரசனுக்காகப் பிரிவும் பகைவயிற் பிரிவு, தூதுப்பிரிவு போன்றவை ஓர் ஆண்டிற்கு உட்படும். இதனை,

''**வேந்நுறு தொழிலே யாண்டினது அகமே**'' (தொல்.,பொருள்.,கற்.,நூ.எ: 187.,வ:1)

எனும் தொல்காப்பியக் கூற்றானது தெளிவுபடுத்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 311) இதன் வழிக் காவல்பிரிவிற்கான கால எல்லையை அறியமுடிகிறது.

**1.3.5.4. பொருள்வயிற் பிரிவு**

பொருள் ஈட்டச் செல்லுதற்குப் பிரியும் பிரிவானது ஓர் ஆண்டிற்கு உட்பட்டே அமையும். இதனை,

''**ஏனைப் பிரிவும் அவ்வயின் நிலையும்**'' (தொல்.,பொருள்.,கற்.,நூ.எ: 188., வ.ள்: 1)

எனும் கூற்று உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 311) சங்ககால மக்கள் தம் மனைவியைக் குழந்தைகளை விடுத்துச் செல்லுதற்குச் சில கால வரையறைகளைப் பின்பற்றியுள்ளனர். அதுமட்டுமல்லாது சங்ககாலச் சமூகத்தில் பரத்தையிற் பிரிவும் மலிந்து காணப்படும் நிலை காணப்படுகிறது. இப்பரத்தையிற் பிரிவும் சில வரையறைக்கு உட்பட்டே நிகழ்ந்துள்ளது. இதனைப்,

**"பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்**

**நீத்து அகன்று உறையார் என்மனார் புலவர்:**

**பரத்தையின் பிரிந்த காலையான"** (தொல்.பொருள்.,கற்.,நூ.எ: 185.,வ.எ: 1-3)

எனும் கூற்று உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 311) அதாவது, "தலைவிக்குப் பூப்புத் தோன்றிய பன்னிரண்டு நாட்களும், அவளைப் பிரிந்து தங்குதல் இல்லை என்று கூறுவர் அறிவுடையோர். பரத்தையிடம் பிரிந்த காலத்தும் உட்பட" எனக் கருதப்படுகிறது. சங்ககாலச் சமூகத்தில் ஒவ்வொரு செயலையும் கால எல்லைக்கு உட்படுத்தி அதன்படி மக்கள் வாழ்ந்துள்ளனர்.

**1.3.5.5. தொழில் வரையறை**

சங்ககால மக்களுள் உழைத்துப் பிழைக்கும் மக்களினத்தோடு, சில வகுப்பு வாதங்களும் இருந்துள்ளன. இவற்றை இலக்கணங்கள் உறுதிசெய்கின்றன. அக்காலச் சமூகத்தில் எண்ணற்ற தொழில்கள் செய்வோர் இருந்ததைப் போல, குலத்தாலும், பொருள் மதிப்பாலும் உயர்ந்தவர்களாகச் சிலர் மதிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்பவராவர். இவர்கள் நான்கு வருணத்தார் என்று மதிக்கப்பட்டுள்ளனர். கல்வியும் தூது செல்லுதலும் உயர்ந்தவர்கள் மட்டுமே செய்யக்கூடியது என்ற வரையறைப் பின்பற்றப் பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இக்கல்வியானது அரசன், அந்தணன், வணிகர் என்போருக்கு உரியது. தூது செல்லும் பணியானது வணிகருக்கும், வேளாருக்கும் உரியது. ஆனால் பொருளுக்காகச் செல்லும் வழக்கம் நிலத் தலைமக்களுக்கு உரியது என்றும், உயர்ந்தோர் பொருள்வயிற் பிரிதல் அறத்தொடு முறைமையாக அமையும் என்றும் விளக்குகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 186) ஆனால் காவல் பொருட்டுச் செல்லுதல் என்பது, "அரசியலாளர், தலைமக்கள், நிலமக்கள், அடியோர் (வினைவலர்)" என அனைவருக்கும் உரியது என்று கூறப்படுகின்றது.

### 1.3.5.6. பெண்களுக்கு விதிக்கப்பட்ட கட்டுப்பாடு

சங்ககாலச் சமூகத்தில் பெண்களுக்கு முந்நீர் வழக்கமும், எதிர்ச்சொல்லாடுதலும், தன்னைப் புகழ்தலும் இல்லை என்று அதிகக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. ஆயினும் அக்காலப் பெண்கள் இக்கட்டுப்பாடுகளைத் தங்கள் கடமையாக எண்ணி வாழ்ந்துள்ளனர்.

#### 1.3.5.6.1. முந்நீர் வழக்கம் இல்லை

முந்நீர் என்பதைக் கடலினைக் குறிக்கும் சொல்லாகும். அக்கால மக்கள் வாணிபத்திற்காக கடல்வழிப் பயணம் மேற்கொண்டு வேற்று நாடுகளுக்குச் சென்றுள்ளனர். அவ்வாறு செல்லும்போது பெண்களை உடன் அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை என்று தொல்காப்பியம் உணர்த்துகிறது. இதனை,

**"முந்நீர் வழக்கம் மகடூஉ வேறு இல்லை"**

(தொல்.,பொருள்.,அகத்.,நூ.எ:37.,வ:1)

எனும் இக்கூற்று உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 34) இதனையே,

**"வலைஞயர் சிறப்பின் மற்றை மூவர்க்கும்**

**குலமட மாதரொடு கலமிசைச் சேறலும்**

**பாசறைச் சேறலும் பழுதென மொழிப"** (அகப்.,அகத்.,நூ.எ: 85.,வ.ள்: 1-3)

எனும் கூற்றும் சுட்டுகிறது. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.,1948: 45) இதன்மூலம் பெண்களுக்குக் கடல் பயணம் ஆகாதது என்று அக்காலச் சமூகம் கட்டுப்பாடு விதித்திருந்தமை புலனாகிறது.

#### 1.3.5.6.2. எதிர்ச்சொல் இல்லை

சங்ககால மக்களில் பெண்கள் தம் கணவனை எதிர்மொழிந்து பேசும் வழக்கமும் இல்லை. இதனைச்,

**"சொல்எதிர் மொழிதல் அருமைத்து ஆகலின்**

**அல்ல கூற்றுமொழி அவள் வயினான"** (தொல்.பொருள்.கள.,நூ.எ: 108.,வ.ள்:1-2)

என்னும் நூற்பா வாயிலாக அறியமுடிகின்றது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 188) அக்காலப் பெண்கள் எதிர்மொழிந்து பேசும் வழக்கம் இல்லாதவர்களாக வாழக் கட்டுப்படுத்தப் பட்டுள்ளனர்.

### 1.3.5.6.3. தன்னைப் புகழ்தல் இல்லை

சங்ககால மக்கள் வாழ்க்கை முறையில், கணவன் முன்னே மனைவி தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளும் நிலை இல்லை. இதனைத்,

**"தற்புகழ்க் கிளவி கிழவன் முன் கிளத்தல்**

**எத்திறத்தானும் கிழத்திக்கு இல்லை"** (தொல்.,பொருள்.,கற்.,நூ.எ:178.,வ.எ்:1-2)

எனும் கூற்று உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 308) இக்கூற்றின் மூலம் அக்காலப் பெண்கள் மிகுந்த கட்டுப்பாடுகளுடன் வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

### 1.3.5.6.4. பகற்குறி, இரவுக்குறிக்கான எல்லை வரையறை

சங்ககால மக்களின் வாழ்வில் காதலும் வீரமும் இரண்டறக் கலந்து காணப்படுவது குறிப்பிடத்தகுந்தது. ஆயினும், களவு வாழ்க்கையில் ஓர் ஆண் பெண்ணைச் சந்திக்க எண்ணற்ற இடர்ப்பாடுகளைக் கடந்து வருவதாகச் சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. அதன் வாயிலாக ஆண்மகனின் வீரம் முன்னிறுத்தப்படுகின்றது. ஆனால் பெண்ணுக்கு அவ்விதமல்லாமல் பகலிலும், இரவிலும் தன் தலைவனைச் சந்திக்க வேண்டிச் சில எல்லைகளை வரையறை செய்துள்ளனர். இதனைப்,

**"பகற் புணர் களனே புறன் என மொழிப"** (தொல்.,பொருள்.,கள.,நூ.எ: 130.,வ: 1) என்னும் கூற்றும், (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 242)

**"இரவுக்குறியே இல்லகத் துள்ளம்**

**மனையோர் கிளவி கேட்கும் வழி அதுவேஞ**

**மனையகம் புகாக் காலை யான"** (தொல்.,பொருள்.,கள.,நூ.எ: 129.,வ.எ்: 1-3)

எனும் கூற்றும், விளக்குகின்றன. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 242) ஒரு பெண் தான் விரும்பிய தலைவனைச் சந்திக்கப் பகலில் வீட்டிற்கு வெளியே செல்வதாகக் கூறப்படுகிறது. அதுபோல இரவுப் பொழுதில், வீட்டின் அகப்பாட்டுக்குள்ளும், மனையகத்துள்ளோர் பேசும் சொற்கள் கேட்கும் புற எல்லைக்குள்ளும், மனையகத்திற்குள் புகுதற்கு ஆகாத காலத்தில் அமையும். இதன்மூலம் சங்ககாலத்தில் ஒரு பெண் ஆணைப்போல வெளியே செல்லும் உரிமை இல்லதவளாக வாழ்ந்தமையை அறியமுடிகிறது.

### 1.3.5.6.5. தலைவனை இடித்துரைத்தலிலும் எல்லை

சங்ககாலச் சமூகத்தில் தலைவன் பரத்தையிற்பிரிவு சென்று மீண்டு வரும்பொழுது தலைவியும், தோழியும் கடிந்து கொள்வர். இதனை எண்ணற்ற சங்கப் பனுவல்கள்

விளக்குகின்றன. தலைவனின் தவறான செயலைக் கண்டிப்பதிலும் தலைவிக்குச் சில எல்லையை வரையறை செய்துள்ளனர். இதனைத்,

**“தம்முறு விழுமம் பரத்தையிற் கூறினும்**

**மெய்ம்மையாக அவர்வயின் உணர்த்தும்**

**தலைத்தாள் கழறு அறம் எதிர்ப்பொழுது இன்றே**

***மலிதலும் ஊடலும் அவை அலங்கடையே*”** (தொல்.பொருள்.பொரு.,நூ.எ: 231.,வ.ள்: 1-4) என்னும் தொல்காப்பியக் கூற்று, உணத்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 335) “பரத்தையர் தன் துன்பத்தைத் தலைவியிடம் வந்து கூறினாலும், அதைத் தலைவி உண்மையாக உணர்ந்தாலும், அவனுடன் மகிழ்வாக இருக்கும் போதும், ஊடும்போதும் அன்றி, எதிர்ப்பட்ட போது இடித்துரைத்தல் இல்லை.” தலைவனின் தவறை உணர்த்த முற்படும்போது கூட பெண்கள் மிக்க கவனத்தைக் கையாண்டுள்ளனர். இது அக்காலப் பெண்களைக் கட்டுப்படுத்தும் தன்மையாக விளங்குகிறது.

சங்ககாலப் பெண்கள், தலைவன் பரத்தையற்மாட்டுச் செல்லும்போது, அவனை இகழ்ந்துரைக்காது, அவளின் மடன் என்னும் பண்பால் அடங்கி ஒழுகுகிறாள். இதனைப்,

**“பரத்தை மறுத்தல் வேண்டியும், கிழத்தி**

***மடத்தகு கிழமை உடைமையானும்*”** (தொல்.,பொருள்..,கற்.,நூ.எ:156.,வ.ள்:1-2) எனும் கூற்று உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 299) அக்காலப் பெண்கள் தங்களுக்கு உரிய மடன் என்னும் பண்பால் அடங்கி வாழ்ந்துள்ளனர். சமூகம் விதித்த எல்லைக் கோடுகளுக்குள் தங்களை விதித்துக் கொண்ட இயல்பினராகவும் விளங்கியுள்ளனர்.

**1.3.5.7. சங்கச் சமூகத்தில் பரத்தமை ஓர் அங்கம்**

சங்ககாலச் சமூகத்தின் வளர்ந்த நிலையில் பரத்தமை ஒழுக்கமும் பரந்து காணப்படுகிறது. செல்வ வளமும், செழிப்பும் உள்ள சமூகத்தில் இப்பரத்தையர் ஒழுக்கமும் மலிந்து காணப்படுகிறது. “சிறந்த ஆடையுடன் கவர்ச்சியான இழைகளை அணிந்து ஆடலிலும் பாடலிலும் சிறந்து விளங்கினர். அக்காலத்தப் பொதுமகளிர்” என்று கூறப்படுகிறது. (சு. வித்தியானந்தன்,,1954: 172) இம்மகளிர் விழாக்கள் நடக்கும் இடங்களில் அதிகமாகக் காணப்படுவர் என்று சங்கப் பனுவல்கள் உணர்த்துகின்றன. இத்தகைய பரத்தையர் வழிப் பிரிந்து செல்லுதல் என்பது சங்க கால நானிலத்தவர்க்கும் உரியது என்று கூறப்படுகிறது. இதனால் அக்காலச் சமூகமே இவ்வொழுக்கத்தை ஆதரித்துள்ளமை புலனாகிறது. இதனைப்,

''**பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே**

**நிலத்திரை இன்று அஃது என்மனார் புலவர்**''(தொல்.,பொருள்.கள.,நூ.எ: 220., வ.எ்:1-2) என்றும், (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 220)

''**பூம்பின் புறப்பாடு ஈராறு நாளும்**

**நீத்து அகன்று உரையார் எனமனார் புலவர்**'' (தொல்.பொருள்.கற்.,நூ.எ: 185.,1-2) எனும் கூற்றும், உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 311) தலைவிக்குப் பூப்பு தோன்றிய பன்னிரண்டு நாட்களும் அவளைப் பிரிந்து தங்குதல் இல்லை. எனில் தலைவியின் பூப்பு காலத்தின் முன்னோ அல்லது பின்னோ தலைவன் பரத்தையர் வழிச் செல்வான் அல்லது செல்லலாம் என்று உணர்த்துகிறது. எனவே சங்ககாலச் சமூகமே பரத்தமைக்கு வழிவகை செய்துள்ளது என்பதை அறியமுடிகிறது. இப்பரத்தையரின் இயல்பினைப் பற்றியும், செயல்பாடுகளைப் பற்றியும் மதுரைக்காஞ்சி விளக்குகின்றது. அதனைப்,

''**பகலுரு வுற்ற விரவுவர நயத்தோர்**

…………………………

……………………………

**ஆய்கோ லவிர் தொழ விளங்க வீசி**'' (மது.கா.,வ.எ்: 549-563)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 175-176) ''புணர்ச்சியை நெஞ்சினாலே விரும்பின மகளிர், காதல் மிக்க தம் காதற் கொழுநரைக் கூடும் பொருட்டு, ஆராய்ந்த நறுமணமுள்ள செங்கழுநீர் மாலைகளை அணிவர். அணிகளை அணிந்து கொள்வர். தன்னுடைய நீண்ட கூந்தலில் பூசிய நறுமணமுள்ள சந்தனத்தை உதிர்த்துவிடுவர். கத்தூரி, சந்தனம் போன்ற நறுமணப் பொருட்களை அரைத்து பூசிக் கொள்வர். மெல்லிய நூலில் நெய்த ஆடைகளும் அகிற்புகை மூட்டி மணக்கச் செய்வர் என்று உணர்த்துகிறது. மான் போன்ற கண்களை உடைய மகளிர் விளக்கினை ஏற்றுவர். பின்பு ஊரின் எல்லையாகிய இடமெல்லாம் விரும்பினோர்க்கு நோயைச் செய்யும் தன்மையுடன் இன்பம் துய்ப்பர். சங்ககாலச் சமூகத்தில் பரத்தமை ஒழுக்கம் என்பது ஓர் அங்கமாக வியங்கியுள்ளது.

### 1.3.5.8. ஆண்களின் ஒழுக்க மீறல்கள்

சங்ககாலச் சமூகத்தில் பரத்தமை ஒழுக்கம் என்பது ஓர் அங்கமாக விளங்கியது. அதற்குக் காரணமானவர்களாக ஆண்கள் முன்னிறுத்தப்படுகின்றனர். இலக்கணங்களும் இப்பரத்தமை ஒழுக்கத்தை வகுத்துரைத்துள்ளது. இதனால் பரத்தமை ஒழுக்கம் அங்கீகரிக்கப்பட்ட ஒரு செயல்பாடாக விளங்கியது. தலைவியின் மீது மிகுந்த அன்பு கொண்டவன் தலைவன் என்றாலும், அவன் பரத்தமை ஒழுக்கத்தை மேற்கொண்டவனாகவே பெரும்பாலும் காணப்படுகிறான். பல நேரங்களில் பரத்தையற் வழிப் பிரிந்த தலைவன் தலைவியை மறக்கின்ற நிலைக்கும் ஆட்பட்டவனாகக் காணப்படுகிறான். இத்தகைய சூழலில் தோழி அல்லது வாயில்கள் மூலம் தலைவியுடன் அவன் இருக்க வேண்டிய காலத்தை எடுத்துரைப்பவர்களாக அக்கால மக்கள் விளங்கினர்.

சங்ககாலச் சமூகத்தில் ஆண்களின் இத்தகைய ஒழுக்க மீறல்களுக்கு அடித்தளமாகப் பெண்களின் அடக்கமும் பணிவும் அமைகின்றது. சமுதாயம் பெண்களுக்கு எண்ணற்ற விதிகளை வகுத்து வைத்துள்ளமையும், ஆணின் ஒழுக்க மீறல்களை உருவாக்கும் காரணிகளாகின்றன.

பரத்தையிற் பிரிவில் தலைவன் ஒரு பரத்தையோடு மட்டுமே இருப்பதில்லை. அவன் அங்கிருந்து வேறொரு பரத்தையிடம் சென்றுவிடுகிறான் என்றும் சங்கப்பனுவல் உறுதிப்படுத்துகிறது.

இதனை, “**நகைநன் குடைலன் பாணநும் பெருமகன்**” (நற்.,பா.எ: 150.,வ: 1)

அக்காலச் சமூகத்தில் ஆணின் பரத்தமை ஒழுக்கம் என்பது ஒழுக்க மீறல்களாக அமைகின்றன. இதுபோலவே களவுக் காலத்தில் தலைவன் வரைவினைக் காலதாமதம் செய்வதும் அவனுடைய ஒழுக்கக் குறைபாட்டை வெளிப்படுத்துகிறது.

இதனை, “**முழுங்குதிரை கொழ்இய மூரீ யெக்கர்**

……………………………………….

……………………………………….

**நாணும் விட்டோம் அலர்கவிவ் ஊரே**” (நற்.,பா.எ: 15.,வ.ள்: 1-10)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (அ. நாராயணசாமிஐயர்.(உ.ஆ).,1952: 21) தலைவன் மணஞ்செய்து கொள்ளாது காலந்தாழ்த்துகிறான். தோழி அவனை நோக்கி “சேர்ப்பனே! நீ தலைவியின் நலத்தை உண்டு உணர்ந்தாய்.” ஆனால் இப்பொழுது அத்தன்மை இல்லாத

காரணத்தால் அலர் தோன்றியது. அவ்அலரால் யாம் நாணமழிந்து நின்றோம் என வருந்திக் கூறுகிறாள். இதனால் தலைவன் களவில் மட்டும் மனம் செலுத்துகின்றான் என்பதும், திருமணத்திற்குக் காலம் தாழ்த்துவதும் அவனின் ஒழுக்கக் குறைபாட்டை வெளிப்படச்செய்கிறது.

சங்ககாலச் சமூகத்தில் கட்டுப்பாடுகள் நிறைந்திருந்தாலும், அவை பெரும்பாலும் பெண்களுக்கே கட்டமைக்கப்பட்டுள்ளன. பரத்தமை ஒழுக்கம் என்பது சமுகத்தில் ஓர் அங்கமாக விளங்கக் காரணம், ஆண்களின் ஒழுக்கக் குறைபாடுகளே ஆகும். இதனால் களவின் மீது நாட்டம் கொண்டவர்களாக ஆண்கள் காணப்படுகின்றனர். வரைவினைக் காலதாமதம் செய்வதாலும், ஆண்களின் ஒழுக்கம் குறை உடையதாகவும், சீர்கேடு உடையதாகவும் விளங்குகிறது. இத்தகைய குறைபாடுகளுக்கும் சீர்கேடுகளுக்கும் அக்காலச் சமூகமே துணைகோடலாக அமைவதை அறியமுடிகின்றது.

**1.3.5.9. சங்ககால இல்லற மாண்பு**

சங்ககாலச் சமூகம் ஒருபுறம் கட்டுப்பாடுகளும் சீர்கேடுகளும் உடையதாக விளங்குகிறது. எனினும், மற்றொருபுறம் கடமையுணர்விலும், இல்லற மாண்பிலும் சிறந்து விளங்குகின்றனர்.

**1.3.5.9.1. ஆண்மகனின் கடமையுணர்வு**

சங்கச்சமூகத்தில் ஆண்களின் பங்கு மிகவும் இன்றியமையாதது. ஆண்கள் போரும், வீரமும், காதலும் கொண்டவர்களாக விளங்கினர். சங்ககாலத்தில் ஆண்கள் ஒழுக்கக் குறைபாட்டை ஏற்படுத்தினாலும், சமூகச் சீர்கேட்டை உண்டாக்கினாலும், இல்லறத்தில் மதிப்புடையவர்களாவும் விளங்கியுள்ளனர். தலைவியின் மீது மிகுந்த அன்பு கொண்டவர்களாகவும் விளங்குவதைச் சங்கப்பனுவல்கள் உணர்த்துகின்றன. இதனை,

“***வரையாது பிரிதல் கிழவோற்க்கு இல்லை***” (தொல்.பொருள்.கள.,நூ.எ: 139.,வ.எ்:1-3) எனும் கூற்றானது, உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 244)

தலைவன் திருமணம் செய்யாது ஓதல், பகை, தூது என்னும் மூன்றின் காரணமாகப் பிரிதல் இல்லை என்பதால், தலைவனின் கடமையுணர்வு புலனாகிறது. மேலும் தலைவன் வரைவினைக் காலநீட்டிப்புச் செய்தாலும் ஏமாற்றுதல் இல்லை என்பது பெறப்படுகிறது.

**1.3.5.9.2. பெண்ணின் இயல்பு**

அன்பும் கருணையும் கொண்ட பெண்ணின் இயல்பாகத் தொல்காப்பியம் முன்வைக்கிறது. இதனைச்,

''**செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்**

**அறிவும் அருமையும் பெண்பாலான**'' (தொல்.பொருள்.பொரு.,நூ.எ: 206.,வ.ள்: 1-2) என்னும் கூற்றானது, விளக்குகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 324) ''அடக்கம், அமைதி, நேர்மை, உண்மையினை வற்புறுத்தும் சொல்வன்மை, நல்லறிவு, பிறர் காணுதற்கு அருமை என்பன பெண்ணின் பண்புகள் ஆகும். இப்பண்புகளே ஒரு பெண் இல்லறம் பேணும் மாண்புடையவளாக விளங்க அடித்தளமாக அமைகிறது.

### 1.3.5.9.3. தாய் போன்றவள்

அடக்கம், அமைதி, அன்பு என பல்வேறு பண்புகளைக் கொண்ட பெண் தன் கணவனிடம் தாயைப் போன்றவளாக விளங்குகிறாள். இதனைத்,

''**தாய்போற் கழறித் தழீஇக் கோடல்**

**ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப**''(தொல்.பொருள்.கற்.,நூ.எ:171., வ.ள்:1-2) எனும் கூற்று, சுட்டுகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 305) தலைவனின் தவறான செயல்களைத் தாயைப் போல இடித்து, பின்பு தலைவனைத் தழுவிக் கொண்டு ஆதரிக்கும் தன்மை கொண்டவள் பெண் எனச் சிறப்பிக்கிறது.

### 1.3.5.9.4. தலைவனின் அன்பு மிகுதி

சங்ககாலச் சமூகத்தில் மக்கள் அன்பும் கருணையும் மிக்கவர்களாக வாழ்ந்துள்ளனர். காதல் அக்கால மக்களின் வாழ்வியலோடு இணைந்ததாகக் காணப்படுகிறது. தலைவன் பரத்தையிற் வழிச்சென்ற போதும்கூட மனைவியின் மீது அன்பு மிக்கவனாகக் காணப்படுகிறான். தலைவி ஊடல் கொண்ட காலங்களில் தலைவனின் முயற்சிகள் அவனின் அன்பினை மெய்ப்பிக்குமாறு விளங்குகின்றன. போருக்காகவோ அல்லது பொருளீட்டுவதற்கோ சென்று மீண்டு வரும்போது அவனின் வேகம் தலைவியின் மீது கொண்ட அன்பு மிகுதியை உணர்துகின்றது. இத்தகைய அன்பு மிகுதி கொண்ட தலைவனைக் குறித்து,

''.....................**விரைந்துவல் லெய்திப் பண்மான்**

.........................................................

.............................................

**நாணோடு மிடைந்த கற்பின் வாள்நுதல்**

**அந்தீங் கிளவிக் குறுமகள்**

**மென்றோள் பெறநசைஇச் சென்ற என்நெஞ்சே**'' (அகம்.,பா.எ: 9.,வ.ள்: 17-25)

எனும் வரிகள், புலப்படுத்துகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 37) வினைமுற்றி மீண்ட தலைவன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்கிறான். மிகவிரைந்து சென்று இல்லத்தில் காத்திருக்கும் தலைவியைக் காணத் தலைவன் விழைகிறான். அப்பொழுது தலைவனின் மனம் நாணொடு மிடைந்த கற்பினையும் அழகிய நெற்றியினையும் இனிய சொல்லினையும் உடையவளாகிய தலைவியை எண்ணுகிறது. அவளைத் தன் நெஞ்சம் அடைவதற்கு மிக விரைந்து செல்வதைத் தேர்ப்பாகனிடம் உரைக்கின்ற வார்த்தைகளினால் உணரமுடிகிறது. இதன்மூலம் தலைவனின் அன்பு மிகுதியும், அதனால் தலைவியைக் காண விழையும் வேகமும் புலனாகிறது.

1.3.5.10. மனையறம்

மனையறம் என்பது ஆண் பெண் இருவரின் அன்பான இல்வாழ்க்கை முறையை உணர்த்துவதாகும். இதனைப்,

***"பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது***

***மகிழ்வும் ஊடலும் ஊட லுணர்த்தலும்***

***பிரிவும் பிறவும் மருவிய தாகும்"*** (அகப்.கற்.,நூ.எ: 200.,வ.எ்: 1-3)

எனும் வரிகள் குறிக்கின்றன. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.,1948: 246) மனையறம் என்பது உள்ள மகிழ்ச்சியும் ஊடலும் ஊடல் உணர்த்தலும் பிரிவும் பிறவும் பொருந்தியது ஆகும். இவ்இல்வாழ்க்கையில் பரத்தையிற்பிரிவு முதல் பொருள்வயிற்பிரிவு என அனைத்தும் நிறைந்திருக்கும். இதனை,

***"இல்வாழ்க்கையே பரத்தையிற்பிரிவே***

***ஓதற் பிரிவே காவற் பிரிவே***

***தூதிற் பிரிவே துணை வாயிற் பிரிவே***

***பொருள்வாயிற் பிரிவென பொருந்திய ஏழும்***

***வளமலி கற்பின் கிளவித் தொகையே"*** (அகப்.கற்.,நூ.எ: 201.,வ.எ்: 1-5)

எனும் கூற்று புலனாக்குகிறது. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.(உ.ஆ).,1948: 247) அதுபோலவே இல்வாழ்க்கையில் அனைவரின் மகிழ்ச்சியும் இன்றியமையாதது என உணர்த்துகிறது. இதனைக்,

***"கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி***

***பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சியென்***

**நீங்கு நால்வகைத் தில் வாழ்க்கையே**'' (அகப்.கற்.,நூ.எ: 202.,வ.ள்: 1-3)

எனும் கூற்று உணர்த்துகிறது. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.(உ.ஆ).,1948: 248) இதனையேக்,

''**காமம் சான்ற கடைக் கோட் காலை**

**ஏமம் சான்ற மக்களொடு துவன்றி**

**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**

**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே**'' (தொல்.பொருள்.கற்.,நூ.எ: 190.,வ.ள்: 1-4)

எனும் கூற்றும், விளக்குகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 312) இல்லற வாழ்க்கையின் இறுதிக் காலத்து, பெருமை பொருந்திய மக்களுடன் நிறைந்து, அறத்தினை விரும்பிய சுற்றத்தோடு தலைவனும், தலைவியும் சிறந்ததாகிய செம்பொருளை இடைவிடாது நினைத்தல் மனையறத்தின் கடந்த காலப் பயனாகும் என்று உணர்த்துகிறது.

மனையறம் என்பது ஆண் பெண் என இருவர் மட்டும் சார்ந்து அமைவது அல்ல. இல்லறம் என்பது இல்லத்தில் இருப்போர், சுற்றத்தார் என அனைவரையும் சார்ந்து அமைகின்றது. அனைவரின் மகிழ்ச்சியையும் மையமாகக் கொண்டு விளங்குவதே சிறந்த மனையறம். இதனையே வள்ளுவமும்,

''**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**

**பண்பும் பயனும் அது**'' (திரு.கு.அதி.எ: 5.,கு.எ: 45)

என உணர்த்துகிறது. (மு. வரதராசனார்.(உ.ஆ).,1949: 11) அக்கால மக்கள் இல்லறம் போற்றும் பண்பினராகக் காணப்பட்டனர் என்பது பெறப்படுகிறது.

**1.3.5.10.1. ஊடலும் கண்டிப்பும்**

சங்கப்பனுவல்களுள் பெரும்பான்மையான பாடல்கள் ஊடலின் ஊடே செல்கிறது என்பது உண்மையாகும். அத்தகைய ஊடலும் ஊடல் நிமித்தமும் உரைக்கும் பாடல்கள் மூலம் தலைவி தலைவனைக் கண்டிக்கும் பாங்கு வெளிப்படுகிறது. இது ஒரு மனைவியின் கடமை என்பதைச் சங்ககால மக்கள் உணர்ந்திருந்தனர். தலைவன் பரத்தையற்வழிச் சென்றபோதும் தலைவி ஊடல் கொள்ளாத நிலையும் காணப்படுகிறது. இதனை,

''**அணிற்பல் அன்ன கொங்குமுதிர் முண்டகத்து**

……………………………………

**இம்மை மாறி மறுமை யாயினும்,**

**நீயா கியரென் கணவனை**

**யான்ஆ கியர்நின் னெஞ்சுநேர் பவளே**" (குறுந்.,பா.எ: 49.,வ.ள்: 1-5)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.,2007: 104) இப்பிறவி மாறி மறுபிறப்புக் கூடியவிடத்தும் நீயே என் கணவனாகக் கிடைக்க வேண்டும். யானே நினது காதலியாக வேண்டும். நம் விதியும் அங்ஙனமே கூட்டுவிக்க வேண்டும் என்று தலைவி கூறுகிறாள். சங்ககால மக்கள் இம்மை, மறுமையில் நம்பிக்கை வைத்திருந்தமையும், ஊடலன்றித் தலைவனின் அன்பிற்கு ஏங்கிய தலைவியின் பெண்மையும் உணர்த்தப்படுகின்றன. மேலும்,

"……………………………

**இவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி**

**யெவ்வூர் நின்றன்று மகிழ்நநின் தேரே**" (ஐங்.,பா.எ: 62.,வ.ள்: 3-4)

எனும் வரிகள், தலைவியின் ஊடலை விளக்குகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.,(உ.ஆ).,1961: 97) இது பரத்தையர் இல்லம் என்று தவறாமல் கருதி நின் தேரினை ஈண்டுக் கொண்டு வந்தாய் போலும், நீ நின் தேரினை மீண்டும் சேரிக்கே செலுத்துக" என்று வெகுண்டு கூறுகிறாள் தலைவி. இதன்மூலம் தலைவியின் ஊடலும், அவளின் கண்டிப்பும் வெளிப்படுகிறது.

**1.3.5.10.2. விருந்தோம்பல்**

விருந்தோம்பல் பண்பு தமிழர்களுக்கே உரியது. இதனைச் சங்கஇலக்கியங்களும் பெரிதும் உணர்த்துகின்றன. இல்லத்திற்கு வரும் விருந்தினரை முகமலர்ச்சியோடு வரவேற்று உபசரித்துள்ளனர் அக்கால மக்கள். சாதாரண மக்கள் என்றில்லாமல் மன்னரும் தம்மை நாடி வந்தவர்களை அகமும் முகமும் மலர வரவேற்றுள்ளனர்.

இதனை, "**விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே**" (குறுந்.,பா.எ: 210.,வ: 6)

எனும் வரியானது, சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 376) அக்கால மக்களிடம் தம் இல்லத்திற்கு வரும் விருந்தினரின் வருகையைக் காக்கை உணர்த்தும் என்ற நம்பிக்கை இருந்துள்ளது. அக்காக்கைக்குப் பலி கொடுக்கும் பழக்கமும் இருந்துள்ளது. காக்கை கரைந்தால் வீட்டிற்கு விருந்தினர் வருவர் எனும் நம்பிக்கை உணர்வு சங்ககால மக்களின் விருந்தோம்பல் பண்பினை விளக்குகிறது. காக்கை கரைந்து வருவிருந்தினை

உணர்த்துவதன் மூலம், பிரிந்து சென்ற தலைவன் மீண்டு வருவதாகவும் அவர்கள் நம்பினர் என்பதை உணர்த்துகிறது. சங்ககாலச் சமூகத்தில் மக்கள், அல்லாது மன்னரும் விருந்தோம்பல் பண்பினை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். கரிகாற்பெருவளத்ததான் தன்னை நாடி வந்த இரவலர்களுக்கு வேண்டுவன கொடுத்தான் என்று பொருநராற்றுப்படை உரைக்கிறது. இதனை,

''**எரி அகைந்தன்ன ஏடு இல் தாமரை**

…………………………………

**தூரவிடைத் தங்கலோ விலவே வரவிடைப்**'' எனும் (பொருந.,வ.எ்: 159-173)

இவ்வரிகளுள், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 84-88) ''காலின் ஏழடிப் பின்சென்று கோலின்'' எனும் வரியானது, தன் காலாலே ஏழடிப் பின்னே வந்து இரவலர்களை வழியனுப்பி வைத்தான் என்கிறது. விருந்தினர்களை உபசரிக்கும் முறையைச் சங்ககால மக்கள் தங்கள் பண்பாட்டின் வேரூன்றலாகக் கொண்டிருந்தனர். குதிரைகளும், குதிரைபூட்டிய தேரும் பரிசிலாகக் கொடுக்கும் பரந்த மனம் படைத்தவர்களாக அக்ககால மன்னர்கள் விளங்கினர். கரிகாலன் தன்னை நாடி வந்த இரவலர்களுக்குப் பொருளை மட்டும் கொடுத்தனுப்பாது, உண்ண அறுசுவை உணவும், இறைச்சி உணவும் பசியாற வழங்கியகினான் என்று உணர்த்துகிறது.

இதனைக், ''**கொல்லை உழுகொழு வேய்ப்பப் பல்லே**

**எல்லையு மிரவும் ஊன்றின்று மழுங்கி**'' (பொருந.,வ.எ்: 118)

எனும் வரிகள், மெய்ப்பிக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 68-69) கொல்லை நிலத்தே உழுத கொழுவைப் போன்று இரவும் பகலும் இறைச்சியை மென்று மென்று எம் பற்கள் முனை மழுங்கிவிட்டது என்றும், அதனால் இறைச்சி உணவுகளைப் புலவர்கள் வெறுத்தனர். இதன்மூலம் வந்த விருந்தினர்க்கு வரையாது வழங்கும் மனம் கொண்டவன் கரிகாலன் என்பதும், இரவலரின் பசியைப் போக்குவதே அவனின் தலையாய கடமையாகக் கொண்டிருந்தான் என்பதும் புலனாகிறது. இதனை,

''**வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**

**பருவந்து பாழ்படுத்ல இன்று**'' (திரு.கு.அதி.எ: 9.,கு.எ: 83)

எனும் குறளும் உணர்த்துகிறது. (மு. வரதராசனார்.(உ.ஆ).,1949: 18) இதன் வாயிலாக கரிகாலனின் வள்ளன்மை புலப்படுகிறது.

### 1.3.5.10.3. ஆற்றியிருக்கும் பெண்மை

முல்லை நிலத்தின் உரிப்பொருளாக ''இருத்தலும் இருத்தல் நிமித்தமும்'' கூறப்படுகிறது. தலைவன் பொருளீட்டவோ, தூது செல்லவோ அல்லது ஏதேனும் ஒரு வினையின் காரணமாகப் பிரிந்து செல்கின்றான். அவ்வாறு பிரிந்து சென்ற தலைவன் வரும் வரையிலும் தலைவி தன் கற்பு நெறியுடன் ஆற்றியிருக்கின்றாள். சங்ககாலப் பெண் தன் மனையறம் பேணுவதனைப்,

''**பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது**

***மகிழ்வும் ஊடலும் ஊட லுணர்த்தலும்***

***பிரிவும் பிறவும் மருவிய தாகும்***'' (அகப்.,கற்பு.,நூ.எ: 200.,வ.எ: 1-3)

எனும் கூற்று, விளக்குகிறது. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.,1948: 246) கற்பென்று சொல்லப்படுவது உள்ளத்தின் மகிழ்ச்சி, ஊடல், பிரிவு என்னும் அனைத்தும் பொருந்தியதே ஆகும். இதனால் சங்ககால மக்களின் வாழ்வில் ஆற்றியிருத்தல் என்பது கற்புடை மகளிரின் கடமையாக விளங்கியது. இதனைத்,

''……………***தமியள் நீந்தித்***

***தம்மூ ரோளே நன்னுதல் யாமே***'' (அகம்.,பா.எ: 24.,வ.எ: 9-10)

எனும் வரிகள், செப்புகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.,(உ.ஆ).,1944: 73) வினைமுற்றும் தலைமகன் தலைவியை எண்ணித் தன் நெஞ்சிடம் கூறுகிறான். அவன் தலைவியின் ஆற்றியிருக்கும் தன்மையை எண்ணி, ''நம் தலைவி தனியளாய் நீந்தித் தமது ஊரின் கண் உள்ளான்'' என்று கூறுகிறான். சங்ககாலப் பெண்கள் கணவன் வீடு திரும்பும் வரைத் தன் கற்பு நெறிபூண்டு ஆற்றியிருந்தனர்.

அக்காலப் பெண்கள் ஊடல் எனும் ஆயுதம் கொண்டு தலைவனைத் திருத்தியுள்ளனர். அவர்கள் விருந்தினர்களை முகமலர்ச்சியுடன் உபசரித்துள்ளனர். ஆற்றியிருத்தல் என்பது பெண்களுக்கே உரிய பண்பாக விளங்கியது என்பதை அறியமுடிகிறது.

### 1.3.5.10.4. கற்புநெறியின் உச்சநிலை

சங்ககாலப் பெண்கள் கற்புக்கடம் பூண்டு வாழ்ந்தனர். அவர்களுள் கணவனை இழந்த பெண்டிரைக் கைம்மை மகளிர் என்று கூறினர். இவ்வாறு கணவனை இழந்த பெண்கள்

(உடன்கட்டை ஏறுதல்) தீப்புகுதல் மற்றும் கைம்மை நோன்பு நோற்றல் என்ற வழக்கங்களைக் கொண்டிருந்தனர். சங்ககால மகளிரின் கற்பு நெறி உச்சத்தை அடைய அவர்கள் தம் உயிரைத் துச்சமாக மதித்துள்ளனர். தீப்பாய்தலை உடன்கட்டை ஏறுதல் என்பர். கணவனை இழந்த பெண்ணொருத்தித் தன் கணவனின் சிதையிலே விழுந்து தன் உயிரைப் போக்குவது ஒரு வகை. தனியே சிதை மூட்டி அதில் புகுந்து உயிரை மாய்த்துக் கொள்வது மற்றொரு வகை. இவ்வாறு உடன்கட்டை ஏறிய பெண்டிரைச் சதி என்று கூறுவர். சதி என்பது உடன் கட்டை ஏறின பெண்ணின் சிறப்புப் பெயர் என்று கூறப்படுகிறது. (க. காந்தி.,2008: 95-96) பெண்கள் தங்கள் கற்பு நெறியை உடன் கட்டை ஏறுதல் மூலம் மேலும் நெறிப்படுத்தியுள்ளனர்.

அதேவேளையில் சங்ககாலத்தில் பெண்கள் அனைவரும் உடன்கட்டை ஏறும் வழக்கம் கொண்டிருக்கவில்லை. சிலர் ''கணவன் இறந்ததும் உயிர்மேல் பற்றுக் கொண்டோ அல்லது சந்ததியினைக் காக்கவோ நினைத்துக் கைம்பெண்டிர்க்கு உரிய சில நடைமுறைக் கட்டுப்பாடுகளைக் கைக்கொண்டு உயிர் வாழ்ந்தனர். (க. காந்தி.,2008: 97) கைம்மை நோன்புடைய பெண்டிர் தங்களது அணிகலன்களைக் களைந்து வாழ்ந்துள்ளனர்.

இதனை, ''***வாழைப் பூவின் வளைமுறி சிதற***'' (புறம்.,பா.எ: 237.,வ: 11)

எனும் வரியானது, வளையலை நீக்கிய பெண்ணைக் குறிக்கிறது. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1951: 81)

''***இளையோர் சூடார் வளையோர் கொய்யார்***

……………………………………….

***வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை***'' (புறம்.,பா.எ: 242.,வ.எ: 1-5)

எனும் வரிகள், பூவணிதலைத் தவிர்த்தனர் என்று உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1951: 92)

சங்ககாலப் பெண்கள் இல்லறம் பேணும் மாண்பு உடையவர்களாகக் காணப்படுகின்றனர். கணவனை இழந்த பெண்கள் தன் உயிரை மாய்த்துக் கற்புநெறி பூண்டுக் காணப்பட்டனர். சில பெண்கள் ஏதேனும் காரணங்களுக்காக உயிர் வாழவேண்டிக் கைம்மை நோன்பு மேற்கொண்டனர். எனவே பெண்களின் கற்புநெறி உச்சநிலை அடைய இத்தகைய செயல்கள் துணைபுரிந்தன என்பதை இதன்மூலம் பெறமுடிகிறது.

1.4. சங்ககால அரசுமுறை உருவாக்கம்

சங்ககாலச் சமூகம் முடியுடை மூவேந்தர்களின் ஆட்சி நிறைந்த சமூகம் எனப் பெயர் பெற்றது. ஆயினும் குறுநில மன்னர்களும், வள்ளல்களும் ஆட்சி செய்துள்ளனர். மேலும் ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சார்ந்தவர்களுள் ஒருவன் தலைவனாக இருந்து அக்குழுவை வழிநடத்தவும் செய்துள்ளான். இதற்குக் காரணம், குலக்குழு அமைப்பில் ஏற்பட்ட பிழைப்புப் பொருளாதாரம் ஆகும். இதில் பல இடங்களுக்கும் சுற்றித் திரிந்து வேட்டையாடி, உணவு சேகரித்துப் பொருளீட்ட வேண்டிய நிலையே அவர்களை ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிலைபெறச் செய்தது. இத்தகைய சூழல் ஒரு குழுவில் ஒருவனைத் தலைவனாகக் கொண்டு செயல்படத் தொடங்கியது. இவ்வாறே முதன்முதலில் அரசுமுறை உருவாக்கத்திற்கு அடித்தளம் இடப்பட்டுள்ளது. இச்சூழலில்தான், ‘‘தலைவனின் குழுவைச் சேர்ந்தோர் உயர்ந்த தகுதியையும் மற்றவர்கள் வெவ்வேறு தகுதி நிலையைச் சேர்நத குழுவினராக இருப்பதால் அக்குழுவிற்குரிய தகுதியையும் பெற்றிருப்பர் என்று கூறப்படுகிறது.’’ (பக்தவத்சலபாரதி.,1990: 562)

இக்குழுவாழ்க்கை முறையிலிருந்து சங்ககாலச் சமூகத்தில் தலைமைத் தன்மை உருவானது. இதனை, ‘‘ஐந்திணை மக்களுள் ஆயர் தமக்கொரு தலைவனை அமைத்து அவனைக் கோ என்னும் பெயரால் அழைத்தனர். உழுதுண்டு வாழ்ந்தோர் தம் தலைவனை வேள் என அழைத்ததனர்.’’ (சு. வித்தியானந்தன்.,1954: 21) மக்களின் குழு வாழ்க்கை முறையில் உருவானதே தலைமைத் தன்மை என்பது உறுதியாக உணர்த்தப்படுகிறது. இப்படி உருவான தலைமைத் தன்மையே பின்னாட்களில் முடியாட்சிக்கு வித்திட்டது. இதனை வலியுறுத்துமாறு, பாணர்கள் இனக்குழு நிலையில் வாழ்ந்தவர்கள். இனக்குழுக்கள் அழிந்து பேரரசின் உருவாக்கம் நிகழ்ந்தபோது பாணர் மரபு அரசர்களைச் சார்த்திப் பேசப்பெற்றது எனும் துளசி. இராமசாமியின் கூற்று அமைகிறது. (2012: 806) இக்கூற்றின் வாயிலாகப் பாணர்கள் இனக்குழுச் சமூகத்தினர் என்பது புலனாகிறது. இத்தகையக் குழுச்சமூகத்திலிருந்து படிப்படியாக உருவானதே பேரரசுமுறை. இச்சங்ககாலச் சமூகத்தில் இனக்குழு வாழ்க்கை முறையிலிருந்து அரசுமுறை என்னும் தலைமைத் தன்மை உருவானது. மக்களும் அத்தலைவனுக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்தனர். இத்தகைய மாற்றத்திற்குக் காரணம் மக்களின் பொருளாதாரத் தேடலே என்பது பெறப்படுகிறது.

முடிவுரை

சங்ககால மக்கள் தாம் வாழ்ந்த நிலஅமைப்பிற்கு ஏற்றாற்போல் தம் வாழ்வை அமைத்துக்கொண்டனர். அவர்கள் வேட்டையாடியும், நிலத்தை உழுது பயிரிட்டும் உணவு உற்பத்தி செய்தனர்.

உணவுக்காக வேட்டையாடிய மக்கள் வேட்டையாடிய பொருளைப் பிறருக்கு வழங்கி மகிழ்ந்தனர். தம்மை நாடி வந்த இரவலரின் பசித்துயரைக் களையத் தம் கைப்பொருளை விற்றுக் கொடுத்து உதவினர்.

சங்ககால மக்கள் நடுகல் வழிபாட்டின் மீது மிக்க நம்பிக்கை கொண்டு விளங்கினர். தம் இல்லத்திற்கு விருந்தினர் வரவேண்டும் என்று நடுகல்லை வழிபடும் மனப்பான்மை கொண்ட மனைக் கிழத்தியாக அக்காலப் பெண்கள் காணப்பட்டனர்.

இரவலருக்கு உணவளிக்க உணவுப்பொருள் இல்லை என்றால், விதைக்கால்க வைத்திருந்த தினையை உணவாக்கி விருந்து படைத்தனர். சங்ககாலத்து இரவலரும் அவர்களுக்கு வழங்கும் இயல்புடையவர்களும் சமூகத்தில் இரண்டறக்கலந்து காணப்பட்டனர்.

தம்மை நாடி வந்தவரின் வறுமையைப் போக்குவதற்காகவே வள்ளல்கள் போரிட்டுப் பெரும்பொருள் பெற்றனர். போரில் பெற்ற செல்வம் அனைத்தையும் வாரி வாரி வழங்கி மகிழ்ந்தனர்.

சங்ககால மக்களின் குழுவாழ்க்கை முறையிலிருந்து உருவானதே தலைமைத் தன்மை. துலைவனை ஏற்ற குழுக்கள் அத்தலைவனின் கீழ் செயல்படத் தொடங்கியது. இதுவே முடியாட்சிக்கு வித்திட்டது எனலாம். இம்முடியாட்சியின் உருவாக்கம் போருக்கு வழிவகுத்தது.

முடிவில் இப்போரானது நாடுபிடிக்கும் உத்தியாக மாறிப்போனது. சங்கச்சமூகம் அரசுமுறைச் சமூகமாக மாற ஆரம்பித்தது. குழுவாழ்க்கை மன்னராட்சியின் கீழ் வாழும் மக்களின் வாழ்க்கையாக மாற்றம்கொண்டது.

சங்கச் சமூகத்தில் தாமும் ஒரு குழுவாக வாழ்ந்தவரே பாணர். அச்சமூகத்தின் மாற்றத்திற்குப் பாணரும் கட்டுண்டு கிடந்தனர். இவர்கள் இனக்குழு வாழ்க்கை முறையில் சமூகத்துடன் பிணைப்புண்டு வாழ்ந்தனர். ஆனால் அரசுமுறை உருவாக்கமானது பாணருக்கும் குழச்சமுதாயத்திற்கும் இடையே ஒரு நீண்ட வெளியை ஏற்படுத்தியது எனலாம்.

## இயல் : 2. இலக்கியங்களில் பாணர்

### 2.0. முன்னுரை

சங்ககாலச் சமூக அமைப்பில் பாணர் எனும் இசைவல்லுநர் இருந்தனர் என்பதை இலக்கண, இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன. அக்கால மக்களுடன் பாணர் கொண்டிருந்த உறவுநிலைகள் பற்றியும், அவர்களின் இசையறிவு பற்றியும் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. சங்கஇலக்கியங்களில் பாடப்பட்டுள்ள பாணர் பற்றிய செய்திகளை உறுதி செய்யுமுகமாக இலக்கணங்களும் பாணருக்குரிய நிலைகளை வரையறை செய்துள்ளன. மக்களின் அகவாழ்விலும், புறவாழ்விலும் பாணரின் பங்களிப்பினைத் தமிழ்மொழியின் இலக்கண, இலக்கியங்கள் விளக்குகின்றன. பாணர் அக்கால மக்களால் பல நேரங்களில் பாராட்டப் பெற்றபோதும், அவ்வப்போது ஏளனத்திற்கும், பழிச்சொல்லுக்கும் ஆளாக்கப்பட்டமையையும் சங்கஇலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. அதேபோன்று வள்ளல்களாலும், மன்னர்களாலும் பாணர் பாராட்டப்பெற்றதும், பரிசில் கொடுத்துப் புகழப்பட்டதும் சங்கஇலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன. இத்தகைய பாணர் பற்றிய நிலைக்களங்களை இலக்கண, இலக்கியங்கள் மூலம் ஆராய முற்படுவதாக இவ்வியல் அமைக்கப்படுகிறது.

### 2.1. இலக்கணங்களில் பாணர்

தமிழ்மொழியின் முதல் இலக்கணம் எனும் சிறப்பிற்குரியது தொல்காப்பியம். இத்தொல்காப்பியத்துள் பாண்மரபினர் பற்றிய பதிவுகள் காணக்கிடைக்கின்றன. இலக்கியங்களில் பாணர் இடம்பெறும் நிலையை உணர்த்துவதோடு, தலைவன், தலைவி, தோழி போன்றோரின் கூற்று நிகழுமிடங்களிலும் பாணர் இடம்பெறுகின்றனர். பாண் மரபினரான பாணர், கூத்தர், விறலியர் போன்றோரைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. தொல்காப்பியத்தைப் போன்றே அகப்பொருள் விளக்கமும் பாண் மரபினரைக் குறிப்பிடுகின்றது. புறப்பொருளை விளக்கும் இலக்கணமான புறப்பொருள் வெண்பாமாலையும் பாண் மரபினரைப் பற்றியும், பாணரின் செயல்பாடுகள் பற்றியும் விளக்குகின்றது.

#### 2.1.1. தொல்காப்பியம் சுட்டும் பாண் மரபினர்

தொல்காப்பியப் புறத்திணையில், பாடாண்திணை பற்றிக் குறிப்பிடும்பொழுது பாட்டுடைத் தலைவனைப் பாடுவது என்பது கடவுள் வாழ்த்தோடு பொருந்திவரும் எனக் கூறப்படுகிறது. இதனைக்,

“**கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற**

**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**

**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே**”(தொல்.பொருள்.புறத்.,நூ.எ: 85.,வ.ள்:1-3) எனும் கூற்றானது உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 138)

அக்கால மக்கள் தம் பாட்டுக்குரிய பாட்டுடைத் தலைவனாகப் பெரும்பாலும் மன்னர்களையே குறிப்பிட்டனர். அவர்கள் மன்னர்களைப் பாடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. மன்னரைப் பாடும் மக்கள் அவனின் புகழையும் பாடியுள்ளனர். அதே வேளையில் அவனின் வெற்றிக்குக் காரணமான பகை மன்னரை எண்ணி இரங்கற்பாடலும் பாடியுள்ளனர். அவ்வாறு பகை மன்னரின் அழிவுக்கு இரங்கிப் பாடுவதற்குக் கொற்றவள்ளை என்று பெயர். இதனைக்,

“**கொற்றவள்ளையும் ஓரிடத்தான**” (தொல்.பொருள்.புறத்.,நூ.எ: 86.,வ: 1)

எனும் வரி உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 139) இத்தகைய பாடல் பாடுவோரைத் தொல்காப்பியம் கூத்தர், பாணர், பொருநர், விறலி என நான்கு வகையினராகக் கருதுகிறது. அவர்கள் தாம்பெற்ற பெருவளத்தைப் பெறாதவர்க்கு எடுத்துக் கூறி அவரையும் பெறச் செய்வர். அதற்கு ஆற்றுப்படுத்துதல் என்று பெயர். இதனைக்,

“……**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**

**ஆற்றிடைம் காட்சி உறழத் தோன்றிப்**

**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறியுறீஇச்**

**சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்**…”

(தொல்.பொருள்.புறத்.,நூ.எ: 88.,வ.ள்:3-6)

எனும் கூற்றானது உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 146)

**2.1.1.1. தலைவன் கூற்றில் பாணர்**

கற்புக்காலத்தில் தலைவனின் கூற்று நிகழும் இடங்களில் பாணர் இடம்பெறுகின்றனர். பாணர் முதலியோர் கூற்றுக்கு, எதிர்பேசும்போது தலைவன் கூற்று நிகழும். இதனை,

“**ஏனை வாயில் எதிரொடு தொகைஇப்**” (தொல்.பொருள்.கற்.,நூ.எ: 144.,வ: 58)

எனும் கூற்றின் வழி அறியமுடிகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 248)

### 2.1.1.2. தோழி கூற்றில் பாணர்

தலைவன் கூற்றினைப் போன்றே தோழிக் கூற்று நிகழும் இடங்களில் பாணர் இடம் பெறுகின்றனர். தலைவன் பரத்தையிற் பிரிந்து சென்றவிடத்தோ, அல்லது வேறு காரணங்களால் தலைவியைக் பிரிந்தவிடத்தோ, தலைவியைக் காண விரைந்து தலைவியிடத்து வாயில் வேண்டுவான். அப்போது வாயிலாக வருபவன் தலைவனுக்காகப் பொய்மொழி கூறுவதுண்டு. தலைவனின் தவறுகளை மறைத்துப் பேசும் இவ்வாயில்களாகிய பாணர், கூத்தர், விறலியர் போன்றோரின் குறைகளை நீக்குமிடத்து தோழி கூற்று அமைகிறது. இதனைப்,

> "**பாணர் கூத்தர் விறலியர் என்றிவர்**
>
> **பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்**"

(தொல்.பொருள்.கற்.,நூ.எ: 148.,வ: 26)

எனும் கூற்றினால் உணரமுடிகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 278)

### 2.1.1.3. மக்களுடன் நெருங்கிப் பழகுபவர்

பாணர் அகநிலை மாந்தர்களுடன் நெருங்கிப் பழகும் பண்புடையவர்கள் ஆவர். இதனை, "***அகம் புகல் மரபின் வாயில்கட்டு உரிய***"

(தொல்.பொருள்.கற்.,நூ.எ: 150.,வ: 6)

எனும் தொல்காப்பியக் கூற்று உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 294) மேலும், மனைக்கண் பழகும் பாணர் முதலானோருக்கும் கூற்று நிகழும் என்றும் உணர்த்தப்படுகிறது.

### 2.1.1.4. கூத்தருக்குரிய கூற்று

கூத்தரின் கூற்றுக்களானது, முன்புள்ளோர் வரலாறுகளை எடுத்துரைத்தலும், மனை வாழ்க்கை நுகர்ச்சியைப் புகழ்தலும், தலைவன், தலைவியர் ஊடலைத் தணித்தலும், வாழ்க்கை உறுதிகளைக் காட்டலும், கேட்போர் அறிவினை மெய்ம்மையில் நிறுத்தலும், காரண காரியங்களோடு உணர்த்தலும் ஆகும். இதனைத்,

> "**தொல்லவை உரைத்தலும், நுகர்ச்சி ஏத்தலும்,**
>
> **பல்லாற்றானும் ஊடலின் தணித்தலும்**
>
> **உறுதிகாட்டலும், அறிவு மெய் நிறுத்தலும்,**
>
> **ஏதுவின் உணர்த்தலும், துணிவு காட்டலும்,**

**அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன**''

(தொல்.பொருள்.கற்.,நூ.எ: 166.,வ.எ்:1-5)

எனும் கூற்றானது உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 302)

**2.1.1.5. பாணரின் கூற்று**

பாணருக்கும் கூத்தருக்குமான கூற்றுக்களாகத், தன் இடம் பெயர்ந்து தலைவன் இருக்கும் இடம் சென்று கூறுதலும், அவ்விடத்து அவளது நிலை உரைத்தலும் என அமையும். இதனை,

''**நிலம்பெயர்ந்து உரைத்தல், அவள் நிலை உரைத்தல்,**

**அவர்நிலை உரைத்தல் கூத்தருக்கும் பாணருக்கும் யாத்தவை உரிய**''

(தொல்.பொருள்.கற்.,நூ.எ: 167.,வ.எ்: 1-2)

எனும் நூற்பாவானது உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 302) இங்ஙனம் பாணரின் கூற்றானது இடம்பெறுகிறது.

**2.1.1.6. வாயில்களாக வரும் பாண் மரபினர்**

பாண் மரபினருள், பாணன், பாடினி, கூத்தர், விறலியர் போன்றோர் வாயில்களாக வருவர். இதனைப்,

''……**பாணன், பாட்டி,**…………

**கூத்தர், விறலியர்**………………

**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப**'' (தொல்.பொருள்.கற்.,நூ.எ: 190.,வ.எ்: 2-4)

எனும் வரிகள், பகருகின்றன. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 312) பாணன், கூத்தர், விறலி போன்றோர் தலைவன் தலைவியர் வாழ்க்கையில் தொடர்புடைய வாயில்கள் என உணர்த்துகின்றன.

தலைவன், தலைவி, தோழி போன்றோருடன் அகவாழ்க்கையில் தொடர்புடைவர் பாண்மரபினர். இவர்கள் தலைவன், தோழியின் கூற்றுக்கு உரியவராகக் கருதப்படுகின்றனர். அதுபோல இவர்கள் அகவாழ்க்கையில் கூற்று நிகழ்த்துபவராவும் திகழ்கின்றனர். இதனைப்,

''**பாணன், கூத்தன், விறலி**……

…………………………………

…………………………………

**தொல்நெறி மரபின் கற்பிற்குரியர்**'' (தொல்.பொருள்.செய்.,நூ.எ: 491.,வ.ள்: 1-5)

என்னும் வரிகள் மெய்ப்பிக்கின்றன. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 495) பாணன், கூத்தன், விறலி போன்றோர் பழமையான நெறியுடைய கற்பின் கூற்றுக்கு உரியவர் ஆவர்.

தொல்காப்பியம் வாயிலாகப் பாண் மரபினரும் அக்காலச் சமூகத்தில் இணங்கி வாழ்ந்துள்ளனர். அவர்கள் தலைவன் தலைவியின் வாழ்க்கையில் பங்குகொண்ட கூற்றுகளாகவும், வாயில்களாகவும் விளங்கினர்.

சங்ககாலச் சமூக அமைப்பில் பாணர் வாழ்ந்தமையும், அவர்கள் இசையறிவு பெற்றிருந்தமையும், மக்களுடனும், மன்னருடனும் இணக்கமானவராக இருந்தமையும் தொல்காப்பியம் வழி அறியமுடிகிறது.

**2.2. அகப்பொருள் விளக்கம் உணர்த்தும் பாணர்**

தொல்காப்பியமே தமிழ் மொழியின் முதன்மையான இலக்கணம் என்று போற்றப்படுகிறது. ஆயினும், கற்றோரால் மட்டுமே எளிதில் புரிந்து கொள்ளும் இயல்பினைப் பெற்றது. எளியவரால் பொருள் புரிந்து கொள்வதில் கடினத்துவத்தை ஏற்படுத்துவதனை உணர்ந்த முன்னோர்கள் ஐந்து இலக்கணங்களுக்கும் எளிய முறையில் மேற்கோள்களுடன் கூடிய இலக்கணம் வகுத்தனர். அங்ஙனம் அகப்பொருளுக்கென இயற்றப்பட்டது அகப்பொருள் விளக்கம் எனும் நூலாகக் கருதப்படுகிறது. இவ்அகப்பொருள் விளக்கத்திலும் பாணரைப் பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன.

**2.2.1. ஊடலைத் தணிப்பவராய் பாணர்**

அகப்பொருள் பற்றிய இலக்கியங்களில் தலைவன் தலைவியருள் ஏற்படும் ஊடலைத் தணிப்பதற்கு எண்ணற்றவர் வாயில்களாக விளங்குவர். அவர்களுள் பாணர், கூத்தர், விறலியர், பாடினி போன்றோரும் உளர். தலைவன் பரத்தமையிற் பிரிந்தவழித் தலைவி ஊடல் கொள்வாள். பின் மீண்டும் தலைவியைக் காணவேண்டித் தலைவன் தன் இல்லம் வரும்போது பாணரை வாயிலாக விடுப்பான் என்று உணர்த்தப்படுகிறது. இதனைக்,

''**கொளைவல் பாணர் பாடினி கூத்தர்**

……………………………………

…………………………………

…………………**யென்றிவை ஊடல்**

**மருந்தாய்த் தீர்க்கும் வாயில்கள் ஆகும்**'' (அகப்.,நூ.எ: 68.,வ.ள்: 1-5)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.(உ.ஆ),1948: 39) தலைமகளுக்கு ஊடல் நீக்கும் வாயில்களாகப் பாணர், பாடினி, கூத்தர் போன்றோர் விளங்குவதைக் குறிக்கின்றது.

### 2.2.2. வாயில்களுள் பாணருக்குரிய செயல்

தலைமகளின் ஊடலைத் தீர்க்கின்ற வாயில்களுள் முதலாவதாகக் கூறப்படுபவர் பாணர். இவர்கள் வாயிலாக விடுக்கப்படும் காலங்களில், செய்யவேண்டிய செயல்களை,

**"வாயில் வேண்டலும் வாயில்நேர் வந்தலும்**

**சேயிலை ஊடல் தீர்த்தலும் போயுழி**

**அவனலந் தொலைவுகண் டழுங்லும் அவன. வுயிற்**

**சொல்லிய கூற்றெனச் சொல்லலுங் கிழவோன்**

**வரவு மீண்டுவந் தாவைக் குணர்த்தலும்**

**அணிநலம் பெற்றமை யறியான் போன்றவட்**

***பணிவொடு வினாதலும பாணற் குரிய*"** (அகப்.,நூ.எ: 95.,வ.ள்: 1-7)

எனும் வரிகள், புலப்படுத்துகின்றன. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.(உ.ஆ).,1948: 51) தலைவன் பொருட்டு தலைவியிடம் வாயில் வேண்டுதலும், வாயில் நேர்வித்தலும், தலைவியின் ஊடலைத் தீர்த்தலும், தலைவியின் நலந்தொலைவு கண்டு அழுங்குதலும், தலைவனிடத்துச் செல்லுதலும், சென்று தலைவனுக்குத் தலைவியின் நிலையை எடுத்துரைத்தலும், தலைவன் வரவினைத் தலைவிக்கு மீண்டுவந்து தெரிவித்தல் என்பன போன்றவற்றைப் பாணருக்குரிய செயல்களாகக் கருதுகின்றனர்.

### 2.2.3. விறலிக்குரிய செயல்கள்

பாண் மரபினரான விறலிக்குரிய செயல்களைக் குறிப்பிடுகின்றனர். இதனைச்,

**"செலவிற் றேற்றலும் புலவியிற் றணித்தலும்**

**வாயில் வேண்டலும் வாயில்நேர் வித்தலும்**

***தெரியிழை விறலிக்குயை வாலும்*"** (அகப்.,நூ.எ: 96.,வ.ள்: 1-3)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.(உ.ஆ).,1948: 51) தலைவன் செலவு மேற்கொண்டதால் வருந்தும் தலைவியைத் தேற்றலும், புலவியிற் தணித்தலும், வாயில் வேண்டலும், வாயில் நேர்வித்தலும் போன்றன விறலிக்குரிய செயல்களாகும்.

2.2.4. கூத்தருக்குரிய செயல்கள்

பாண் மரபினருள் ஒருவரான கூத்தருக்குரிய செயல்களாகச், செல்வத்தை வாழ்த்துதலும், நல்லறிவு எடுத்துரைத்தலும், கலனனி உரைத்தலும், காமநுகர்பு உரைத்தலும், சேய்மை செப்பலும், பாசறை மேற்சென்று உரைத்தலும், மீண்டு வரும் வரவு உணர்த்தப்படுவது போன்றன உணர்த்தப்படுகின்றன. இதனைச்,

“**செல்வம் வாழ்த்தலும் நல்லறிவு கொளுத்தலும்**
**கலனணி புணர்த்தலும் காமநுகர் புணர்த்தலும்**
**புலவிமுதிர் காலைப் புலங்கொள வேதுவிற்**
**றேற்றலும் சேய்மை செப்பலும் பாசறை**
**மேற்சென் நுரைத்தலும் மீண்டுவர உணர்த்தலும்**
**கூற்றரு மரபிற் கூத்தர்க் குரிய**” (அகப்.,நூ.எ: 97.,வ.ள்: 1-6)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.(உ.ஆ).,1948: 51) இத்தகைய பாணன் வாயிலாக வருவதைப்,

“**பாணன் முதலாப் பாங்கன் ஈறாப்**
**பேணிய வாயில்கள் பெரியோன் விடுத்துழ**
**மறித்தலும் விருந்தொடு வந்துழிப் பொருத்தல்கண்**
**பிறைவோன் மகிழ்தலும்**……………” (அகப்.,நூ.எ: 206.,வ.ள்: 1-4)

எனும் வரிகள், குறிக்கின்றன. (கா.ரா.கோவிந்தராச முதலியார்.(உ.ஆ).,1948:255) தலைவன் விடுக்கும் வாயில்களாகிய பாணரை மறுப்பதும் பரத்தையிற் பிரிவின்போது நிகழும் என்பது பெறப்படுகிறது.

2.2.5. கற்பின் கூற்றுக்கு உரியவர்கள்

கற்புக்கால வாழ்க்கையில் கூற்றுக்கு உரியவராக நற்றாய், கண்டோர், அமைவர். இதனை,

“**நற்றாய் கண்டோர் பாணன் கூத்தர்**
**விறலி பரத்தை அறிவரென் றெழுவரும்**
**அறுவரென் றவரும் ஆகிய அனைவரும்**
**குறைவறு கற்பிற் கூற்றிற் குரிய**'' (அகப்.,நூ.எ: 214.,வ.ள்: 1-4)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (கா. ரா. கோவிந்தராச முதலியார்.(உ.ஆ).,1948: 272) கற்புக் காலத்திலும் தலைவன் தலைவியருடனும், ஏனையோருடனும் பழகும் வாய்ப்பினைப் பெற்றவராகப் பாணர் விளங்கினர்.

பாணர் அக்காலச் சமுதாயத்தில் இன்றியமையாத இடம் பெற்றுள்ளனர். மக்களின் வாழக்கையோடு ஒன்றிய வாழ்வினை வாழ்ந்துள்ளனர். கற்பு வாழ்க்கை என்றாலும், களவு வாழக்கை என்றாலும் பாணரின் பங்களிப்பு முக்கியமானதாக அமைந்திருந்தது.

### 2.3. புறப்பொருள் வெண்பாமாலையில் பாணர்

அகஇலக்கியங்கள் சங்ககால மக்களின் அகவாழ்வைப் பிரதிபலித்தது போல், மக்களின் புறவாழ்க்கையான போர், வீரம், வெற்றி, படை, புகழ் போன்றவற்றை எடுத்து இயம்புவது புறஇலக்கியமாகும். புறத்திணைகளை இலக்கியமாகக் குறிக்கும் பாங்குடையது புறப்பொருள் வெண்பாமாலை. இது புறத்திணைகளையும், போரின் முறைகள், வீரச்சிறப்பு, வெற்றிவாகை பெற்றநிலை போன்ற அனைத்தையும் எடுத்தியம்பும் களமாக அமைகின்றது. அவ்வாறே மன்னர்களைப் புகழ்ந்து பாடிய பாணரும், அவர்கள் பரிசில் பெற்றநிலையையும் கூறிச்செல்கிறது.

#### 2.3.1. இசையை அளந்து பாடும் பாணர்

பாணர் என்றாலே பண் என்று பொருள்படும் அளவு இசையோடு இரண்டறக் கலந்தவராகக் கருதப்பட்டனர். அத்தகைய பாணர் இசையை அளந்து பாடுவதாகக் குறிப்பிடப்படுகிறது.

இதனை, “**நீடவும் குறிகவும் நிவப்பவும் தூக்கிப்**

**பாடிய புலவர்க்குப் பரிசில் நீட்டின்று**” (புறப்.வஞ்.கொ.எ: 48.,வ.எ்: 1-2)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 82) இசையை உச்சத்திலும், மந்தநிலையிலும், சமநிலையிலுமாகப் பண்ணிசைப்பதனைக் கொண்டு அவ்அறிஞர்களுக்கு மன்னர் பரிசில் நல்கினர்.

இசையை அளந்து பாடும் வல்லமை பெற்ற பாணர் அரசனின் பெருஞ்செல்வத்தையும் பாடியுள்ளனர். இதனைச்,

“**செங்கள த்துச் செழுஞ் செல்வம்**

**வெண்துறை யாழ்ப்பாணர் விரிம்பின்று**” (புறப்.பாடாண்.கொ.எ: 188.,வ.எ்: 1-2)

எனும் வரிகள், விளக்குகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 301) இசை விளங்கும் பாடலில் யாழை மீட்டிப்பாடும் பாணர்கள் போர்க்களத்தில் மன்னன் பெற்ற பெருஞ்செல்வத்தைப் பாராட்டி இசைத்துள்ளனர் என்பது புலனாகிறது.

**2.3.2. இறுதிக்கடன் செய்யும் பாணர்**

போர்களத்திற்கு வந்து மன்னனைப் பாடும் பாணர், அப்போர்க்களத்தில் வீரமரணம் அடைந்தவர்களையும் பாடுவர். வீரமரணம் அடைந்தவர்களைப் பாடியதோடு, அவர்களுக்கு இறுதிக் கடன்களைச் செய்யும் தொண்டுள்ளம் கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

இதனை, "**வெருவரும் வர் விளந்தோற் கண்டு**

**கருவிமாக்கள் கையற உரைத்தன்று**" (புறப்.கரந்.கொ.எ: 30.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், கூறுகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 54) அச்சம் தரும் வாட்போரில் இறந்தவர்களைக் கண்டு பாணர்கள் அவ்வீரர்களின் துன்பநிலையைக் கூறுவதைக் காட்சிப்படுத்துகின்றது. இப்பாணர் போரில் இறந்துபட்ட வீரர்களுக்கு இறுதிக்கடன் செய்துள்ளனர் என்பதை,

"**வென்கோட்ட களிறுஎறிந்து செங்களத்து~வீழ்ந்தார்க்குக்**

**கைவல்யாழ்ப் பாணர்கடன் இறுத்தன்று**" (புறப்.தும்.கொ.எ: 123.,வ.ள்: 1-2)

எனும் கொளு உரைக்கின்றது. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 208) யாழினை இசைக்கும் பாணர் இரத்தவெள்ளம் பெருகும் சிவந்த போர்களத்திடையே பகைவரின் யானையைக் கொன்று தாமும் இறந்து வீழ்ந்த, தும்பை வீரர்களுக்குச் செய்ய வேண்டிய இறுதிக்கடனைச் செய்து அவர்களுடைய புகழைப் பாடியுள்ளனர்.

இறுதிக்கடன் ஆற்றும் பாணர் விளரி எனும் பண்ணினைப் பாடுவர் என்பதைக்,

"**களரிக் கனல் முழங்கமுட்டி விளரிப்பன்**

**கண்ணினர் பாணர் களிறு எறிந்து வீழ்ந்தார்க்கு**

**விண்ணினர் செய்தார் விருந்து**" (புறப்.தும்.வெ.எ: 123.,வ.ள்: 2-4)

எனும் வரிகள், பகருகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 208) போர்களத்தில் பகைவருடைய யானையைக் கொன்று தாமும் இறந்து வீழ்ந்த தும்பை வீரர்களின் உடலுக்கு நெருப்பிட்டுக் புகழ்பாடல்களைப் பாணர் பாடியமை புலனாகிறது.

### 2.3.3. பாண்மரபினரின் கலை உணர்வும் பரிசும்

அக்காலச் சமூகத்தில் மக்கள் தங்களின் வெற்றியின் உற்சாகத்தை ஆடியும் பாடியும் கொண்டாடியுள்ளனர். அவ்வாறு தும்பைப்போர் நிகழ்த்தும்போது தும்பை மன்னனின் தேரின் பின்னே வீரக்கழலணிந்த வீரர்களோடு வெண்ணிற வளையணிந்த விறலியர் குரவைக் கூத்து ஆடிவருவர். இதனைக்,

"**கருங்கழல் மறவரோடு வெள்வளை விறலியர்**

**பெருந்தகை தேரின் பின்னாடின்று**" (புறப்.தும்.கொ.எ: 130.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 217) இதனையே,

"**கிளையாய்ந்து பண்ணிய கேள்வியாழ்ப் பாணும்**" (புறப்.தும்.வெ.எ:130.,வ: 1)

எனும் வரியும், மொழிகின்றது. (வ. த. இராமசுப்பிரமணியன். (உ.ஆ).,2009: 217) யாழிசையை எழுப்பிய பாண்மகளிரும் இசைப்பாடலுடன் ஆடலும் நிகழ்த்தியவராய் விளங்கினர். இதேபோன்று, வீரக்கழலணிந்த மன்னவன் தேரின் பின்னே தொடியணிந்த விறலியர் ஆடிவருவர். இதனை பின்தேர்க்குரவை என்று உணர்த்துகிறது. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 241) இதன் வாயிலாகப் போர்க்களத்தில் பாண் மரபினர் வெற்றி வாகை சூடிய தன் மன்னனின் தேரின் முன்னும் பின்னும் குரவைக் கூத்து ஆடியுள்ளனர் என்பது புலனாகிறது.

### 2.3.4. வேளாளரைப் பாடும் பாணர்

நாடோடியாக அலைந்து திரியும் பாண்மரபினர், தங்களின் வறுமையைப் போக்கிக் கொள்ள வேளாளரையும் வாழ்த்திப் பாடியுள்ளனர். இதனைத்,

"**தண்பணை வயல் உழவனைத்**

**தென்கிணைவன் திருந்து புகழ் விளந்தன்று**" (புறப்.வாகை.கொ.எ:170.,வ.ள்:1-2)

என்னும் வரிகள், குறிக்கின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 272) மருத நிலத்தில் கழனியிடத்து வேளாளனைத் தெளிந்த கிணை கொட்டுபவன் நல்ல புகழினைப் பாடினான்.

கிணைப் பொருநன் என்று வழங்குபவரும் பாண்மரபினர் ஆவர் என்பது குறிப்பிடத்தக்கது. பொருநருள் போர்க்களம் பாடுபவரும் உளர். ஏர்க்களம் பாடுபவரும் உளர். எனவே இக்கிணை கொட்டுவோன் பாண்மரபினன் என்பது குறிப்பிடத்தக்கது.

2.3.5. பாணரின் கலை உணர்வு போற்றப்படுதல்

மன்னரைப் புகழ்ந்து பாடுவதாலும், தங்களின் கலை உணர்வை ஆடல் மூலம் வெளிப்படுத்துவதாலும் அவர்கள் பாரட்டப்பெற்றனர். பெரும் பரிசில்கள் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றனர். அவ்வாறு யாழ் வாசித்து வெற்றி பெற்றதனைப்,

**"பாலை படுமலை பண்ணியதன் கூட்டம்**

**கோலம் செய் சீறியாழ் கொண்டபின் ~ வேலைச்**

**சுவை யெலாம் தோன்ற எழ்இயினாள் சூழ்ந்த**

**ஆவையெலாம் ஆக்கி அணங்கு"** (புறப்.ஒழிபு.,வெ.எ: 327.,வ.எ்: 1-4)

எனும் வரிகள், தெளிவுறுத்துகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 487-488) தெய்வப்பெண்ணை ஒத்த இவள் படுமலைப் பாலையையும் அல்லாத பிற பாலைகளையும் ஆக்கிச் சிறிய யாழைத் தன் கையில் கொண்டு திரிபாலைத்திறம் யாவும் அமுதச்சுவை தோன்றுமாறு அவையில், உள்ளோரைத் தன் வயத்தராக்கி வாசித்து வெற்றி கொண்டனள் என்று பாண்மரபில் உள்ள ஒரு பெண்ணை இசைவல்ல தெய்வமாகவே கருதியுள்ளனர். ஆடும் கலையில் வல்லவரான விறலியர் ஆடிப் பரிசில் பெற்றனர். இதனைக்,

**"கைகால் புருவம் கண்பாணி நடைதுக்குக்**

**கோய்பூங் கொம் பன்னாள் குறிக்கொண்டு~பெய்பூப்**

**படுகளி வண்டு ஆர்ப்பப் பயங்விளை நின்றாடும்**

**தொடு சுழல் மன்னன் துடி"** (புறப்.ஒழிபு.வெ.எ: 329.,வ.எ்: 1-4)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 489) அதேபோன்று பாடல்பாட வல்லாள் விறலியை,

**"வண்டுறையும் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்**

**வேண்துறையும் செந்துறையும் வேற்றுமையாக் கண்டறியக்**

**கின்னரம் போலக் கிளையமைந்த தீந்தொடை யாழ்**

**அந்நரபும் அச்சுவையும் ஆய்ந்து"** (புறப்.ஒழிபு.,வெ.எ: 330.,வ.எ்: 1-4)

என்னும் வரிகள், உணர்த்துகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன். (உ.ஆ).,2009: 490) விறலி பாடுவதிலும், ஆடுவதிலும், இசைக்கருவிகளை இசைப்பதிலும் வல்லமை பெற்றவளாக விளங்கினாள் என்பது மெய்ப்படுகிறது.

### 2.3.6. பரிசில் கேட்டுப்பெறும் நிலை

பாணர் தம் பரிசிலை உரிமையோடு மன்னரிடம் கேட்டுப் பெற்றுச் சென்றுள்ளனர். சில வேளைகளில், பிறர் தமக்குக் கொடுத்ததைப் போன்று கொடுக்க வெண்டும் எனவும் கேட்டுள்ளனர். இதனை,

> "**மண்ணகம் காவல் மன்னன் முன்னர்**
>
> **எண்ணிய பரிசல் இது என உரைத்தன்று**" (புறப்.பாடாண்.கொ.எ:177.,வ.ள்:1-2)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ)., 2009: 284) நாட்டைக் காக்கும் மன்னன் முன்னே நின்று தான் கருதி வந்த பரிசில், இ∴தே என்று உரைத்துள்ளனர்.

பாணர் சில சமயங்களில் தமக்குப் பிறர் வழங்கியது போன்று வழங்க வேண்டும் என்று வள்ளல்களிடம் உரிமையோடு கேட்டுப் பெறுவதும் உண்டு. இதனை,

> "**இன்னோர் இன்னவை கொடுத்தார் நீயும்**
>
> **அன்னோர் போல அவை எமக்கு ஈகென**
>
> **என்னோரும் அறிய எடுத்துரைத் தன்று**" (புறப்.பாடாண்.கொ.எ: 178.,வ.ள்: 1-3)

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 285)

பாண்மரபினர் தனக்குத் தேவையான பொருளை அக்கால மன்னரிடத்துத் துணிவுடனும், உரிமையோடும் கேட்டுப் பெற்றமை புலனாகிறது.

### 2.3.7. பாணர் ஆற்றுப்படுத்தல்

மன்னரிடம் தாம் பெற்ற பரிசில் போல், தம்மை போன்ற வேறு பாணரும் பெற எண்ணி அவர்களைப் பாண் மரபினர் ஆற்றுப்படுத்துவர். இதனைக்,

> "**கேண் ஓங்கிய வரை அதரிற்**
>
> **பாணனை ஆற்றுப் படுத்தன்று**" (புறப்.பாடாண்.கொ.எ: 197.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், விளக்குகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 312)

பாணர் மட்டுமன்று பாண் மரபினரான கூத்தரும் பாணரால் ஆற்றுப்படுத்தப்படுகின்றனர்.

இதனை, "**ஏத்திக் சென்ற இரவலன்**

> **கூத்திரை ஆற்றுப் படுத்தன்று**" (புறப்.பாடாண்.கொ.எ: 198.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(உ.ஆ).,2009: 313)

இத்தகைய பாணர் வாழ்ந்த முறைமையையும், அவர்கள் அக்காலச் சமுக அமைப்பில் பங்குகொண்ட விதத்தையும் புறப்பொருள் வெண்பாமாலை வாயிலாக உணரமுடிகிறது.

**2.4. இலக்கியங்களில் பாண் - பாணர் சொல்லாக்கம்**

பாண் - பாணர் குறித்தச் சொற்பதிவுகளைச் சங்கஇலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இவ்விலக்கியங்கள் பாண் குழுவினரைப் பாண், பாணன், பாணர், பாண்மகள், பாண்மகன், பாடினி, பாணி என்பன போன்ற சொற்களாகப் பதிவு செய்துள்ளன.

‘பாண்’ எனும் சொல் பாணர் குழுவினரையோ அல்லது ஒரு பாணனையோ குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

‘பாணர்’ என்பது பாண் குழுவினரையும், ‘பாணன்’ என்பது ஒரு பாணனையும் குறிக்க வழங்கப்பட்டுள்ளது.

‘பாண்மகன்’, ‘பாண்மகள்’ என்னும் சொற்களைப் பாணனின் மக்களைக் குறிக்க வழங்கியுள்ளனர்.

பாண் குழுவிலுள்ள பெண் மக்களைக் குறிக்க அதாவது, பாணனின் மனைவியைப் ‘பாணி’, ‘பாடினி’, ‘பாணிச்சி’ என்னும் சொற்களால் குறித்துள்ளனர்.

**2.4.1. சங்கஇலக்கியங்களின் பாணர் குடியும் சுற்றமும்**

சங்ககாலச் சமூகத்தில் கலையை மையமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் பாணர் என்று வழங்கப்பட்டனர். இவர்கள் பாடல் பாடுபவராகவும், இசைக்கருவிகளை இசைப்பவர்களாகவும் விளங்கினர். யாழ் வாசிப்போர் யாழ்ப்பாணர் எனப்பட்டனர். அவர்களுள் பெரிய யாழை உடையவர் பேரியாழ்ப்பாணர் என்றும், சிறிய யாழை உடையவர் சீறியாழ்ப்பாணர் என்றும் அழைக்கப்பட்டனர். பாடல் பாடுவோர் இசைப்பாணர் என வழங்கப்பட்டனர். மண்டைப் பாணர் என்போர் மண்டை யாழ்ப்பாணர் என வழங்கப்பட்டமையைக் க.காந்திதாசன் கூற்றின் வழி அறியமுடிகிறது. (2011: 50) இவர்களைத் தவிரப் பொருநர், கூத்தர், விறலியர், கோடியர், வயிரியர் போன்ற அனைவரையும் பாண் மரபினர் எனும் சொல்லால் வழங்கியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. (க. காந்திதாசன்.,2011: 47) இத்தகைய பாண்மரபினர் சிறுகுடியாக வாழ்ந்துள்ளனர்.

வேள்எவ்வி என்பவன் வேளிர்குலத் தோன்றலாவான். இவன் வேள்பாரியின் குடிக்கு முதல்வன் என்று கூறப்படுகிறது. இவன் பகைவரோடு போர் செய்து இறந்தான். இதனால் பாணர் சுற்றம் மிகவும் வருந்தித் தன் இசைக்கருவிகளை முறித்துவிட்டு அவனைப் பரவி

வருந்தின. அப்பொழுது அவனை “இரும்பாண் ஒக்கல் தலைவன்” என வாழ்த்துகின்றனர். இதில் பெரியபாணர் சுற்றத்திற்கு முதல்வன் எனப் பொருள் உணர்த்தப்படுகிறது. இதன்வழிப் பெரும்பாணர் எனப்படும் பெரிய யாழ்ப்பாணர் சிறு குடிகளாகத் தன் சுற்றத்தோடு வாழ்ந்துள்ளனர் என்பது தெளிவுறுகிறது.

பாணர் வாழிடத்தைச் சேரி அல்லது பாண்சேரி என்னும் சொல்லால் வழங்கியுள்ளனர். பாணர் மீன்பிடி தொழில் செய்தனர் என்றும், அவ்வாறு பெற்ற மீனை, மனையிடத்து மரங்கள் தோறும் திருத்தம் செய்து பதப்படுத்தியுள்ளனர். இதனால் பாணர் குழு வாழ்ந்த இடம் பாண்சேரி என வழங்கப்பட்டது. இதனைக்,

“**குருகு நரல மனைமரத்தான் மீன்சீவும் பாண் சேரியொடு**” (மது.கா.,வ.எ்:267-268) எனும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 109) மேலும்,

“**அழுந்துபட்டிருந்த பெரும்பாண் இருக்கையும்**” (மது.கா.,வ: 342)

எனும் வரியும், உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார், 2008 : 125) நெடுங்காலம் அடிமைப்பட்டிருந்த பெரியபாண்சாதியின் குடியிருப்பினையும் என்று பொருள் உணர்த்துவதால், பாணர் தலைமுறை தலைமுறையாக நீண்ட நெடுங்காலம் தங்களைக் குடியமைத்து வாழ்ந்துள்ளனர் என்பது புலனாகிறது. எனவே பாணர் சிறுகுடியாகவும், பல தலைமுறைகள் ஒன்று கூடி வாழ்ந்துள்ளனர் என்பதும் புலனாகிறது.

**2.4.2. பாணர், பாடினி, பாண்மகளின் உருத்தோற்றம்**

இசைப்பாடல் பாடியும், யாழிசைத்தும் பிற இசைக்கருவிகளை இசைத்தும் கேட்பவரை இன்புறச்செய்பவர் பாணர். ஆயினும் பாணர் வறுமையில் வாடுபவராகவும், தன்னைப் பேனிக்கொள்ளாதவர்களாகவும் காணப்படுகின்றனர். இதனைப்,

“**பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடிப்**” (புறம்.,பா.எ: 29.,வ: 4)

எனும் வரியானது, விளக்குகிறது. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1947: 84) பாணரின் பாறிய மயிரையுடைய கரிய தலையைக் குறிப்பதால், பொலிவிழந்த, வரண்டுபோன, சிக்கல் நிறைந்த அழகிழந்த மயிரினை உடையதாகப் பாணர் விளங்கியுள்ளனர். வறுமையில் உழன்ற பாணரின் உடம்பானது உரித்தது போன்ற, எலும்புகள் தெரியும்படி விலா புடைத்துத் தோன்றும் உருவத்தை உடையவராகக் காணப்பட்டனர். இதனை,

“**உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்**” (புறம்.,பா.எ: 68.,வ: 1)

எனும் வரி உணர்த்துகிறது. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1947: 174) இத்தகைய பாணர் அணிந்திருந்த உடையை,

"..........................**அரையது**

**வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்**

**ஒம்பி யுடுத்த வுயவற் பாண**" (புறம்.,பா.எ: 69.,வ: 2-4)

எனும் வரிகள், புலப்படுத்துகின்றன. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1947: 177) பாணர் தம் அரையில் கட்டிய ஆடையானது வேற்றிழை ஊடு போனதால், அதாவது கிழிந்த காரணத்தால் அதனை வேறு இழையால் தைத்தும், வியர்வையால் மிக்க நனைந்தும் காணப்படுகிறது என்று உணர்த்துகிறது. இதனையேச்,

"...........................**சீறியாழ்**

**சிதாஅ ருடுக்கை முதாஅரிப் பாண**" (புறம்.,பா.எ: 138.,வ: 4-5)

எனும் வரிகளும் உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1947: 291) மேலும், பாணரது தலை புலால் நாறும் தன்மையுடையது என்பதைப்,

"**புலவு நாறு மென்தலை தைவரு மன்னே**" (புறம்.,பா.எ: 235.,வ: 9)

எனும் வரியால் அறியமுடிகிறது. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1951: 77) இங்ஙனம், பாணரின் வறுமையுற்ற தோற்றப்பொலிவினைச் சங்கப்பனுவல்கள் காட்சிப்படுத்துகின்றன.

**2.4.2.1. பாடினி சாயல்**

பாண் மரபினருள் பாடினியின் சாயலைப்,

"**பாடினி மாலை யணிய**" (புறம்.,பா.எ: 319.,வ: 14)

எனும் வரியானது கூறுகின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 233) இதில், வினையிலிருந்து மீண்டு வரும் தலைவன் பாணனுக்கு நிறைய பொன்னால் செய்த தாமரைப் பூவைப் பரிசாக நல்குவான். அப்பரிசிலால், பாடினியானவள் பொன்னரி மாலை அணிந்து மகிழ்வாள். மேலும், பாடினி மயில் போன்ற சாயலை உடையவள் என்பதனைப்,

"**பெடைமயில் உருவின் பெருந்தகு பாடினி**" (பொருந.,வ: 47)

எனும் இவ்வரியானது உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 36) பாடினி மயிலைப்போன்ற சாயலை உடையவளாகவும், பொன்னரிமாலை அணிந்தவளாகவும் விளங்குவதை அறியமுடிகிறது.

2.4.2.2 பாண்மகள் உருவம்

பாண்மகளின் உருவத்தை,

"**முள்ளெயிற்றுப் பாண்மகளின்**" (ஐங்.,பா.எ: 47.,வ: 1)

எனும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 75)

"**அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்**" (ஐங்.,பா.எ: 49.,வ: 1)

எனும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 78)

"**அவ்வாங்கு உந்தி அஞ்சொல் பாண்மகள்**" (அகம்.,பா.எ: 126.,வ: 9)

எனும் இவ்வரிகள், சுட்டுகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 20) முள்போன்று கூரிய பற்களையும் உடையவளாகப் பாணச்சாதி மகள் விளங்கினாள் என்றும், அவள் அழகிய சிலவாகிய கூந்தலையும் அசைந்த நடையையும் உடையவளாகக் காணப்பட்டாள் என்றும் உணர்த்துகின்றன. அப்பாண்மகள் அழகிய வளைந்த உந்தியினையும் அழகிய சொற்களையும் உடையவளாகக் காணப்பட்டமையும் விளக்குகின்றன.

2.4.3. அகஇலக்கியங்களில் பாணர்

அகஇலக்கியங்களில் பாணர் பெரும்பாலும் தலைவன் தலைவியருள் தூது செல்பவராகக் காணப்படுகின்றனர். சில வேளைகளில் பரத்தையர் மற்றும் தலைவனுக்கு இடையேயும் தூது செல்பவராகவும் விளங்குகின்றனர். தூது செல்லும் போது பாணர் அவப்பெயருக்கும், இடர்பாடான சூழலுக்கும் ஆட்படுகின்றனர். எனினும், பாணர் பெற்றிருந்த கல்வியின் திறமும், இசையறிவினையும் சுட்டுகின்றன. மேலும், பாணர் வறுமையின் பிடியிலிருந்து மீளாதவர்களாகவும் காணப்படுவதை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

2.4.3.1. இசையறிவு பெற்றவர் பாணர்

'பாணர்' எனும் சொல்லிலேயே பாண் என்னும் சொல் புதைந்துள்ளது. பாண் என்னும் சொல் அடி, காலம், இன்னிசை, இசை, பாட்டு போன்ற பொருளைத் தருகிறது என்பதை க.கைலாசபதியின் கூற்றின் வழி அறியமுடிகிறது. (2006: 138) இதனைத்,

"**தெரிமருதம் பாடுப பணிகொள் யாழ்ப் பாணர்**" (பரி.திரட்டு.,பா.எ: 2)

எனும் வரியானது, சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 467) கேட்டோரைப் பிணித்துக்கொள்ளும் இயல்புடைய யாழினையுடைய பாணர்கள் ஆராய்ந்த மருதப் பண்ணினைப் பாடுவர். மேலும்,

"**தொல்லியல் புலவ நல்யாழ்ப் பாண**" (பரி.,பா.எ: 3.,வ: 86)

எனும் வரியும், குறிப்பிடுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 87) பாணரைப் பழைமையான இயலறி புலவன் என்றும், நல்லயாழ் வல்ல இசைப்புலவன் என்றும் உணர்த்துகின்றன. இதனால் யாழினினை இசைக்கும் நுண்ணறிவும் அதன் இயல்பினை அறிந்தவர்கள் பாணர் என்பதனைப்,

"**பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்**" (பரி.,பா.எ: 9.,வ: 73)

எனும் வரி, உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 200) இசைப்பாடல் பயின்றோரை அவ்விசைப் பாடலில் வல்லோர் வெல்வர் என்று குறிப்பர். பாணர் யாழினைத் தவிர தடாரி, முழவு, ஆகுளி, பாண்டில், கொம்பு, நெடுவாங்கியம், தூம்பு, குழல், தட்டை, எல்லரி, பதலை, பறை, துடி ஆகிய இசைக்கருவிகளைப் பெற்றிருந்தனர். (கே. பழனிவேலு.,2010: 39) இத்தகைய இசைக்கருவிகளைப் பாணர் பயன்படுத்திய காரணத்தால் அவர்கள் இசையறிவு பெற்றவர் என்று கூற இடமளிக்கிறது. ஆயினும் பாணர் யாழினைக் கொண்டே வகைப்படுத்தப்பட்டுள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. சிறிய யாழை வைத்திருப்போர் சீறியாழ்ப்பாணர் என்றும், பெரிய யாழை வைத்திருப்பவர் பேரியாழ்ப்பாணர் என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளனர். மேலும் மண்டைப் பாணர், இசைப்பாணர் (வாய்ப்பாணர்) என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளனர்.

பாணர் யாழினைத் தவிர மற்ற இசைக்கருவிகளையும் வாசித்துள்ளனர் என்பதைத்,

"**கன்றுயெறு வல்சிப் பாணன் கையதை**

**வள்ளுயிர்த் தண்ணுமை போல**" (நற்.,பா.எ: 310.,வ.ள்: 9-10)

எனும் வரிகளால் அறியமுடிகிறது. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 407) எனவே பாணர் கூர்த்த இசையறிவும் பல்வேறு இசைக்கருவிகளை வாசிக்கும் திறனும் பெற்றிருந்தனர் என்பது பெறப்படுகிறது.

**2.4.3.2. யாழிசைக்கும் பாணர்**

சங்கஇலக்கியங்களில் குறிப்பாக அகஇலக்கியங்களுள் யாழ் வாசிக்கும் பாணர் பற்றிய பாடல்களின் எண்ணிக்கை அதிகமாகக் காணப்படுகின்றன. இவ்யாழ்ப் பாணரின் யாழிசையானது ஒரு தலைவிக்கு ஏனைய நேரங்களில் மிக்க இனிமையுடையதாக இருக்கிறது என்றும், ஆனால் தலைவனைப் பிரிந்த வேளையில் யாழிசை துன்பத்தைத் தருகிறது என்பதை,

"**மென்பிணித் தம்ம பாணன தியாழே**" (ஐங்.,பா.எ: 410.,வ: 5)

எனும் வரியானது உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 657) பாணரின் கைகளைப்,

"..................**பாணர்**

**நயம்படு முரற்கையின் யாத்த**... " (ஐங்.,பா.எ: 407.,வ.எ்: 1-2)

எனும் வரிகளானது உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 652) இன்பம் பயக்கும் யாழிசையைப் பண்ணறிந்து வாசிக்கும் கைகளை உடைய பாணர் என்று பாராட்டியுள்ளனர். ஆனால் அதே வேளையில் பாணனின் யாழிசையைக் காட்டிலும் தலைவியின் மொழி இனிமையுடையதாக இருக்கும் என்பதைப்,

"**பாணர் நரம்பது மின்கிள வியளே**" (ஐங்.,பா.எ: 100.,வ: 4)

எனும் வரியானது உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 149) பாண் குழுவினர் தம் யாழை வாசிப்பதில் மிக்க ஆற்றல் உடையவர் என்பதனைக்,

"**கைவல் சீறியாழ்ப் பாண நமரே**" (ஐங்.,பா.எ: 472.,வ: 1)

என்னும் வரி உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 743) தலைவன் பொருட்டு வாயில் வேண்டி வந்த பாண்மகனைக் கண்ட தலைவி, தனக்குக் கோபம் வரவில்லை என்றும், வாயில் வேண்டி வந்த பாணன் மீது பேரன்பே தோன்றுகிறது என்றும் கூறுகிறாள். இதனைப்,

"**பெரிதுபுலம் பின்னே சீறியாழ்ப் பாண**" (ஐங்.,பா.எ: 475.,வ: 3)

எனும் வரியானது உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 747) இத்தகைய பாணர் யாழின் திறம் நன்கமைந்த நல்ல யாழினையேத் தம் கையில் வைத்திருப்பர் என்றும் கூறப்படுகிறது.

இதனைப், "**பண்ணமை நல்யாழ்ப் பாணொடு**" (அகம்.பா.எ: 346.,வ: 13)

எனும் பாடல்வரி உணர்த்துகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 105) அதுமட்டுமல்லாது பாணன் பரத்தையர் இல்லினின்றும் யாழிசைத்ததாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் அதேவேளையில் இப்பாணன் தலைவியைக் காண அவளின் இல்லிற்கு வருகிறான். அதனால், தலைவி கோபமுற்றுப் பாணனைப் பழிக்கின்றாள். அவன் வாயிலாக வருகின்ற தொழிய பாட்டைத் திருத்தக் கல்லாத வாயினையுடையவன் என்று தலைவி பழிப்பதனை,

"..........................**நின் பெண்டிர்**

**இல்லின் எழ்இய யாழ்த்தீஇக் கல்லாவாய்ப்**

**பாணன் புகுதராக் கால்**'' (கலி.,பா.எ: 70.,வ.ள்: 21-23)

எனும் வரிகள் விளக்குகின்றன. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 206) தலைவி, பரத்தையர் வீட்டிற்குச் சென்று, அங்கு வாசித்த யாழைத் தழுவிக் கொண்டுத் தன் இல்லிற்கு வந்தமையால் தலைவி கோபமுற்றாள். அக்கோபத்தால் பாணனைக் கல்லாதவன் என அவள் பழிக்கின்றாள். இத்தகைய பாணன் வாசிக்கும் யாழின் இசையால், முதிய ஒந்திப்போத்துத் தன் வருத்தம் நீக்கப்பெற்று, மீண்டும் யாமரத்தில் ஏறும் தன் தொழிலை மேற்கொண்டது. இதனை,

''**வேனில் ஓதி நிறம்பெயர் முது போத்துப்**

**பாண்யாழ் கடைய வாங்கிப் பாங்கர்**

**நெடுநிலை யாஅம் ஏறந் தொழில்**'' (நற்.,பா.எ: 186.,வ.ள்: 5-7)

எனும் வரிகள் மெய்ப்பிக்கின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 234) பாணன் வாசிக்கும் யாழிசையை அக்காலச் சமூகம் முழுமையாக அனுபவித்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. பாணனின் யாழிசையை இரசிக்கும் குணம் உடையவர்களாக அக்கால மக்கள் விளங்கினர். இதனைப்,

''**பாணர் முல்லை பாட**'' (ஐங்.,பா.எ: 408.,வ: 1)

எனும் வரியானது, சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 653) பாணர் முல்லைப் பண்ணிசைத்து தானும் இன்புற்றுப் பிறரையும் இன்புறுத்தி உள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**2.4.3.3. பறை வாசிக்கும் பாணர்**

பாணர் யாழைத் தவிர பிற இசைக் கருவிகளையும் பயன்படுத்தியுள்ளனர் என்பதைப்,

''………………………………**பாணர்**

**அயிரப்புக் கொண் டன்ன கொன்றையந் தீங்கனி**

**பறையறை கடிப்பின் அறையறையாத் துயல்வர**'' (நற்.,பா.எ: 46.,வ.ள்: 5-7)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (அ. நாராயசாமிஐயர்.,1952: 60) பாணர் பறை முழக்கும் குறுந்தடியைப் போல பாறையில் விழுமாறு கிளைகள் மிகத் துவண்டாடக் கொடிய காற்று வீசியது என்று கூறுவதன்மூலம், பாணர் பறை வாசித்துள்ளனர் என்பது பெறப்படுகிறது.

பாணர் தண்ணுமை எனும் பறைக் கருவியை இசைத்துள்ளனர். இதனைப்,

''…………..**பாணன் கையதை**

**வள்ளுயிர்த் தண்ணுமை போல**'' (நற்.,பா.எ: 310.,வ.எ்: 9-10)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 383) பாணன் கையிடத்ததாகிய பெரிதாக ஒலித்தலை உடைய தண்ணுமை வாச்சியம்போல என்று உணர்த்துவதால் பாணர் தண்ணுமையை இசைத்துள்ளனர் என்பது புலனாகிறது.

**2.4.3.4. தூதுரைக்கும் பாணர்**

அகஇலக்கியங்களில் தலைவன் தலைவியருள் ஏற்படும் ஊடலைத் தீர்க்கும் வாயிலாக வருபவர் பாணர். தலைவனின் பிரிவாற்றாமை கருதி தலைவி தன் துன்பத்தைப் பாணனிடம் கூறித் தூது அனுப்புகிறாள். அதுபோலவே வினைமேற்சென்ற தலைவன் திரும்பிவரக் காலதாமதம் ஆகின்றபொழுது, தலைவியின் பொருட்டுப் பாணனைத் தூது அனுப்பும் செய்தியும் உணர்த்தப்படுகிறது. மேலும், பரத்தையர் பொருட்டும் பாணர் தூது சென்றுள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**2.4.3.4.1. தலைவனுக்காகத் தூது செல்லல்**

சங்ககாலச் சமூகத்தில் காதலும் வீரமும் மனிதனின் அங்கமாக விளங்கியது. இக்காதலுக்காகத் தலைவன் தலைவியுள் ஏற்படும் ஊடலைத் தீர்க்கப் பாணன் தூது சென்றான் எனச் சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. தலைவன் பரத்தையிற் காரணமாகப் பிரிந்தபோதும், வினைமேற்சென்ற காலத்தும் தலைவிக்குத் தூது அனுப்பப் பாணனைப் பயன்படுத்துகிறான். தலைவனுக்காகத் தூது சென்ற பாணனைத் தோழி இடித்துரைப்பதும், தலைவி பழிப்பதும் உண்டு.

பாணன் ஒருவன் தலைவியிடத்துத் தூது செல்கிறான். அவனிடம் தோழி, தலைவன் பரத்தையிற் காரணமாகப் பிரிந்ததால் ''தலைவி, தலைவனின்றித் தன் பாவையை வைத்து விளையாடும் பொருட்டுக் கடற்கரைச் சோலையிடத்துச் செல்வோம்'' என்கிறாள். எனவே ''தலைவன் நமது பாக்கத்திற்கு வருதலால் யாது பயன்?'' எனப் பாணனிடம் வினவுகிறாள். இதனை,

''**இருங்கழி துழைஇய ஈர்ம்புற நாரை**

.......................................

....................................

**வண்டல் ஆயமொடு பண்டுதான் ஆடிய**

**ஈனாப் பாவை தலையிட்டு ஓரும்**

**மெல்லம் புலம்பன் அன்றியுஞ்**

**செல்வாம் என்னுங் கான லானே**'' (நற்.,பா.எ: 127.,வ.ள்: 1-9)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 159) மேலும்,

''**கருங்கோட்டுப் புன்னைக் குடக்கு வாங்கு பெருஞ்சினை**

………………………………………………

**பயன்தெரி பனுவல் பைதீர் பாண**'' (நற்.,பா.எ: 167.,வ.ள்: 1-6)

எனும் இவ்வரிகளும், பகருகின்றன. (அ. நாராயணசாமிஐயர்.,1952: 209) உன்னைத் தூதாக விடுத்தலினாலே நீ பெறும் பயனுக்குத்தக்கபடி கூறும் பனுவலை உடையவன் ஆனாய் எனத் தோழி பாணனைப் பழிக்கின்றாள். தலைவன் தரும் பரிசின் பயன் பொருட்டுப் பலவாறு தலைவனை உயர்த்தி பேசுகின்ற இயல்புடையவனாகப் பாணன் விளங்குகிறான்.

தூதாக வருகின்ற பாணனிடம் தகவலை நேரடியாகக் கூறாமல், பிறரிடம் கூறுவது போல அவன் கேட்குமாறு சொல்வதும் உண்டு. இதனைக்,

''**கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்**

**செய்த அல்லல் பல்குவ வையெயிற்று**

**ஐதகல் அல்குல் மகளிர் இவன்**

**பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே**'' (நற்.,பா.எ: 200.,வ.ள்: 8-11)

எனும் வரிகள், கூறுகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 251) திருவிழா நடப்பதனை ஊரார்க்குத் தெரிவிக்க வந்த குயவனிடம், தோழியானவள் நீ செல்கின்ற ஊரில் உள்ள ''மகளிரை அழைத்து இப்பாணன் கூறும் பொய்ம்மொழியை மெய்யெனக்கொண்டு பின்பு வருந்தாதீர் என்று இதனையுஞ் சொல்லிப் போவாயாக'' எனத் தோழி வெகுண்டு கூறுகின்றாள். தலைவன் மீது தலைவி கொண்ட ஊடல் மிகுந்த தன்மையைப் புலப்படுத்துகின்றன. பாணனின் வாய்ச்சொற்கள் யாவும் தலைவனின் செய்கையால் பொய்யாகவே காணப்படுகின்றது. அதே வேளையில் தூது வருகின்ற பாணனிடம் தலைவியின் அன்பினை எடுத்துக் கூறி, தலைவனுக்கு அதுவே நலம் பயக்கும் என்னும் அறிவுரையும் பகரப்படுகிறது. இதனை,

''**நன்றே பாண கொண்கனது நட்பே**

**தில்லை வேலி யிவ்வூர்க்**

**கல்லென் கௌவை யெழாஅக் காலே**'' (ஐங்.,பா.எ: 131.,வ.ள்: 1-3)

எனும் பாடல் உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 187) இதேபோன்று,

**பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்**

……………………………………

***காண்குவை மன்னாற் பாணவெந் தேரே***'' (ஐங்.,பா.எ: 477.,வ.ள்: 1-5)

எனும் பாடல், சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 750)

தலைவன் மன்னனுடன் போர்த்துணையாகச் சென்றுள்ளான். ஆனால் அவனால் உரிய பருவத்தில் மீண்டுவர இயலவில்லை. எனவே பாணனைத் தூது அனுப்புகின்றான். தலைவியின் மீது மிகுந்த அன்புடையவன் ஆதலால், ''அவளுடைய செயலற்ற நெஞ்சிற்கு உசாத்துணையாக நீ விரைந்து சென்று சிறிது பொழுது தங்குவாயாயின், ஆங்கு எம் தேர் வருதலைத் தவறாது காண்பாய். எனவே விரைந்து செல்க'' என்று உரைப்பதன்மூலம் தலைவனின் அன்புமிகுதி வெளிப்படுகிறது.

**2.4.3.4.2. தலைவன் மீது பற்று கொள்ளல்**

தலைவன் மீது மிகுந்த பற்றுடையவனாகப் பாணன் காணப்படுகின்றான். இதனால் தலைவியிடம் தூது சென்ற நிலையில், தலைவனைத் தலைவி இடித்துரைக்கின்றாள். எனவே வருத்தமுற்ற பாணன் தலைவியிடம், தலைவன் மேல் பழிகூற வேண்டாம் என வேண்டுகிறான்.

இதனை, ''***அம்ம வாழி பாண புன்னை***

**யரும்புமலி கான விவ்வூ**

***ரலரா கின்றவ ரருளு மாறே***'' (ஐங்.,பா.எ: 132.,வ.ள்: 1-3)

எனும் வரிகள், உரைக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 189) தலைவன் மீது பாணன் கொண்ட பற்றினை அறியமுடிகிறது.

**2.4.3.4.3. தலைவிக்காத் தூது உரைத்தல்**

சங்ககால மக்கள் வாழ்க்கையில், பாணன் தலைவியிடம் தலைவன் பொருட்டுத் தூது சென்றதைப்போல தலைவனிடம் தலைவிக்காகவும் தூது சென்றுள்ளான். தலைவன் பரத்தையிற் பிரிவின்போது பாணனைத் தூது அனுப்புகிறான். தூது வந்த பாணனை மீண்டும்

தலைவன்பால் தூது அனுப்புகின்றாள் தலைவி. அவ்வாறு தூது செல்கின்ற பாணனிடத்தில் தலைவி தன் மெலிவு உணர்த்துவதனைக்,

''**காண்மதி பாணநீ யுரைத்தற் குரியை**

**துறைகெழு கொண்கன் பிரிந்தென**

**விறைகே ழெல்வளை நீங்கிய நிலையே**'' (ஐங்.,பா.எ: 140.,வ.எ்: 1-3)

எனும் வரிகளால், சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 198) தலைவியின் நிலை உணர்ந்து தூது செல்ல விழைந்தான் பாணன். நிலையை அறியமுடிகிறது. இதுபோலவே ஐங்குநுறூற்றின் 478வது பாடல், ''வினைமேற் சென்ற (வேந்தர்க்கு உற்றுழிப் பிரிந்த) தலைவன் வினை முடிவுறாமையாற் தான் குறித்த பருவத்தே மீள இயலாதவனாய்க் காலம் நீட்டித்தனன்.'' அப்பொழுது ஆற்றாதவளாய்த் தலைவி பாணனைத் தலைவனிடத்துத் தூது விடுத்தாள். இதனை,

''**நீடின மென்று கொடுமை தூற்றி**

……………………………………

………………………………………

**முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே**'' (ஐங்.,பா.எ: 478.,வ.எ்: 1-5)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 751) அங்ஙனமே தலைவியின் அன்பு மிகுதியையும் பாணனின் இளகிய மனநிலையையும் உணர்த்துகின்றன. இக்கருத்தைச்,

''**சொல்லுமதி பாண சொல்லுதோ றினிய**'' (ஐங்.,பா.எ: 479.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் வரியும் வலியுறுத்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார். (உ.ஆ).,1961: 752)

#### 2.4.3.4.4. தூதுரைக்கத் தானே முன்வருதல்

சிலவேளைகளில் தலைவியின் பிரிவாற்றாமை நிலையைக்கண்ட பாணன், வருத்தம் தாங்க இயலாதவனாய்த் தானே முன்வந்து தலைவிக்காகத் தூது செல்கின்ற நிலையும் காணப்படுகிறது. இதனைப்,

''**பலர்புகழ் சிறப்பினுங் குருசி லுள்ளிச்**

………………………………………….

……………………………………….

**கைவல் பாணவெம் மறவா தீமே**'' (ஐங்.,பா.எ: 473.,வ.ள்: 1-5)

எனும் வரிகள், குறிப்பிடுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 745) தலைவன் ஆள்வினை மேற்கொண்டு வேற்று நாட்டில் உறைந்துள்ளான். இந்நிலையில் தலைவனிடம் செல்ல எண்ணுவதாகப் பாணன் கூறுகின்றான். அவ்வாறு கூறிய பாணனிடம் தலைவி, ''பாணனே! நீ அவர்பாற் சென்றுழி எம்முடைய இன்னா நிலையினை மறவாது அவர்க்கு உணர்த்துக! என்று கூறுகின்றான். மற்றும்,

''**அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக்**'' (அகம்.,பா.எ: 14.,வ: 1)

எனத்தொடங்கும் பாடலும் சுட்டுகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 48) பாணன் தானே முன்வந்து தூது செல்வதனை உணர்த்துகிறது. மேலும்,

''**மையறு சுடர்நுதல் விளங்கக் கறுத்தோர்**'' (ஐங்.,பா.எ: 474.,வ.ள்: 1-5)

எனத் தொடங்கும் பாடலும், அறிவிக்கின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 746) இதில், பாணன் தானே முன்வந்து தூது செல்வதனை உணர்த்துகிறது. அவன் தலைவனை இப்பொழுதே அழைத்து வருவேன் என்று கூறித் தலைவியின் பாராட்டினையும் பெறுகின்றான். ஆனால் சில வேளைகளில் தூதாக அனுப்பிய பாணன் வருமுன்னே, தலைவியின் அன்பு மிகுதியால் தலைவன் அவளைக் காண வந்துவிடுவதும் உண்டு. அவர்தம் ஊடல் தீர்ந்து இன்புற்று விளங்கும் தன்மையையும் காணமுடிகிறது.

பாணன், தலைவன் தலைவி இருவருக்கும் இடையில் நல்லதொரு தகவல் பரிமாற்றத்தைச் செய்கிறான் என்பதை அறியமுடிகிறது. மேலும், பாணனின் இன்றியமையாமையும் நன்கு புலப்படுகிறது.

**2.4.3.4.5. பரத்தைக்குத் தூது செல்லும் பாணர்**

சங்ககால மக்களுள், தலைவன் பரத்தையிற் பிரிவின்போது தலைவிக்குத் தூது அனுப்புவது போலவே, சில நேரங்களில் பரத்தைக்கும் தூது அனுப்புகிறான். அக இலக்கியங்களில் தலைவனின் இச்செயல் மிகவும் அரிதாகவே பேசப்படுகிறது. அதிலும் குறிப்பாக ஒரு பரத்தையிடம் இருந்துகொண்டு இன்னொரு பரத்தைக்குப் பாணனைத் தூது அனுப்புகிறான். இதனை,

''**நகைநன் குடையன் பாணநம் பெருமகன்**'' (நற்.,பா.எ: 150.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் மெய்ப்பிக்கின்றது. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 188-189) அதாவது பரத்தை ஒருத்தியைக் கலந்து பின்பு அவளைக் கைவிட்டு வேறொரு பரத்தையின்பால் சென்ற தலைவனை அம்முதற்பரத்தை நெருங்குதலும், அவளது வெகுளி தணிக்கும்படி அவன் பாணனைத் தூது விடுக்கிறான். இக்கருத்தினைச்,

"**சுடர்த்தொடி கோமகள் சினந்தென தெனெதிர்**" (அகம்.,பா.எ: 300.,வ: 1)

எனத்தொடங்கும் பாடல் உணர்த்துகிறது. (அ. நாராயணசாமி ஐயர்., 1952: 371) இதன் வாயிலாகத் தலைவன் பாணனைத் தலைவிக்கு மட்டுமல்லாது பரத்தைக்கும் தூது விடுத்துள்ளான் என்பதும், பாணனும் சிறிதும் தயக்கமின்றித் தலைவனின் கட்டளைகளைச் செவ்வனே செய்யும் இயல்பு உடையவனாகக் காணப்படுவதும் புலனாகிறது.

**2.4.4. அல்லல்படும் பாணர்**

பாணர் தலைவனுக்காகத் தலைவியிடமும், சிலவேளைகளில், பரத்தையிடமும் தூது செல்ல நேரிடுகிறது. இதனால், தலைவியாலும், பரத்தையாலும் பாணர் இன்னலுக்கு ஆளாகின்ற சூழல் உருவாகிறது.

**2.4.4.1. பாணன் பொய்யன் எனப் பழிக்கப்படுதல்**

தலைவன் பரத்தையிற் பிரிவிலிருந்து மீண்ட பொழுது, தலைவி ஊடியிருப்பதை அறிகின்றான். இதனால் பாணன் வாயிலாக வந்தபொழுது தலைவன் அஞ்சி அவன் பின்னே நின்றுகொள்கிறான். அப்பொழுது அத்தலைவனை நோக்கித் தோழி, நின்னுடைய பாணன் முழுப்பொய்யன். அவன் அங்ஙனமாகலின் நின்னாற் பிரியப்பட்ட மகளிர்க்கு உலகத்துள்ள பாணர் எல்லாம் கள்வர் போலவே காணப்படுவர் என்று பழிக்கிறாள். இதனைக்,

"**குருகுகொனக் குளித்த கொண்டை...**" (குறுந்.,பா.எ: 127.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் விளக்குகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 234) இதேபோன்று,

"..............................**நின்**

**பாணன் போலப் பலாபாய்த் தல்லே**" (ஐங்.,பா.எ: 47.,வ.ள்: 4-5)

எனும் வரிகளும், செப்புகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 76) பாணன் பொய்யன் என்று தலைவி பழிப்பவளாகக் காணப்படுகிறாள். மேலும்,

"............................. **நின் பாண்மகன்**

**யார் நலஞ் சிதையப் பொய்க்குமோ வினியே**" (ஐங்.,பா.எ: 49.,வ.ள்: 4-5)

எனும் வரிகளும் சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 79) பாணனைப் பொய்யன் என்று சங்கப்பனுவல்கள் பறைசாற்றுகின்றன.

**2.4.4.2. சூழ்ச்சிக்காரன் என்று பெயரெடுத்தல்**

பாணன் சூழ்ச்சிக்காரன் எனவும் தலைவியால் பழித்துரைக்கப்படுகின்றான். இதனைப்,

"**பைதல மல்லேம் பாண பணைத்தோ**" (ஐங்.,பா.எ: 135.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், குறிக்கின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 192) தலைவி பாணனை நோக்கி உன் பொல்லாத சூழ்ச்சியை நான் அறிவேன் என்று கூறுவதனால் பாணன் சூழ்ச்சிக்காரன் என வசைபாடப்படுவதை உணரமுடிகிறது.

**2.4.4.3. வசீகரித்தலில் வல்லவன் பாணன்**

பாணனைத் தலைவன் தூண்டிலாகப் பயன்படுத்துகிறான் என்பதைத் தலைவி, வஞ்சனையை மறைத்து வசீகரித்தல் தொழிலில் வல்லவன் பாணன் என்கிறாள். மேலும், அவனைத் தூண்டிலாகப் பயன்படுத்திப் பரத்தையரைத் தலைவன் அகப்படுத்தியதாகக் குறை கூறுகிறாள். இதனைப்,

"……………**பாண் தலையிட்ட பலவல் புலையனைத்**

**தூண்டிலா விட்டுத் துடக்கித்தான் வேண்டியார்**" (கலி.,பா.எ: 85.,வ.எ்:22–23)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (நச்சினர்க்கினியர்.(உ.ஆ).,1943: 250) இங்ஙனம் பாணன் தலைவியின் வசைக்கு ஆளாகிறான் என்பதும், தலைவன் மீதுகொண்ட பற்றின் காரணமாகக் குறைகூறப்படுகிறான் என்பதும் தெளிவாகிறது.

**2.4.4.4. எள்ளி நகைக்கப்படும் நிலை**

பாணன் பல நேரங்களில் எள்ளி நகைக்கப்படும் நிலைக்குத் தள்ளப்படுகின்றான். இதனைப்,

"**பண்பிலை மன்ற பாண இவ்வூ**

**ரன்பில கடிய கழறி**

**மென்புலக் கொண்கனைத் தாரா தோயே**" (ஐங்.,பா.எ: 138.,வ.எ்: 1-3)

எனும் பாடல் உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 195) முதலில் தலைவன் பாணனைத் தூது அனுப்புகிறான். ஆனால் பாணனுக்கு முன்னதாகவே தலைவன் தலைவியைக் காணச் சென்றுவிடுகிறான். இதனால் தலைவி ஊடலும் தீர்கின்றாள். இந்நிலை

அறியாத பாணன் மறுநாள் காலையில் தலைவியைக் காணவரும் பொழுது, அவள் பாணனை எள்ளி நகையாடுகிறாள். இதனையே

**நகையா கின்றே தோழி நெருநல்**…" (அகம்.,பா.எ: 56.,வ: 1)

எனத்தொடங்கும் பாடலும் உணர்த்துகின்றது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 151) பாணன் தலைவனுக்காகத் தூது செல்வதோடு மட்டுமல்லாமல் தலைவி மற்றும் தோழியால் பழிக்கப்படுவதையும் இதன் வாயிலாக உணரமுடிகிறது.

**2.4.5. பாணரின் நடுவுநிலைத் தன்மை**

பாணன் பொய்யன், சூழ்ச்சிக்காரன் என்றெல்லாம் பழிக்கப்பட்டாலும் அவனின் நடுவுநிலைத் தன்மையையும் சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. பாணன் சில நேரங்களில் தலைவன், தலைவியின் குறைகளை அவர்களிடமே சுட்டிக் காட்டுவதும், அவர்களுக்குப் புத்தி புகட்டுவதும் உண்டு. எனவே பாணனைப் பொய்யன் என்றும், சூழ்ச்சிக்காரன் என்றும் பழித்தமை எல்லாம் வெற்றுக் கோபத்தால் உருவான சொற்களே என்பதும் வெளிப்படுகிறது. எனவே பாணன், தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே மிகவும் நேர்மையுடன் நடந்து கொண்டுள்ளான். அத்துடன் பாணன் நடுவுநிலைமையோடு செயலாற்றியுள்ளான் என்றும் சங்கப்பனுவல்கள் குறிப்பிடுகின்றன.

வினைமேற் சென்ற தலைவன் ஒருவன் தான் கூறிச் சென்ற பருவத்துள் மீண்டு வரவில்லை. அதனால், தலைவியின் நிலை என்னாகுமோ? என்று பாணனிடம் தோழி கேட்கிறாள். பின் தலைவன் வரவினைக்கண்டு துன்பத்திலிருந்து தலைவி விடுபடுகிறாள். அதனால் நின் கண்ணி வாழ்வதாக! என்று பாராட்டுகிறாள். இதனை,

"**எவன்கொல் பாண உரைத்திசிற் சிறிதெனக்**

………………………………………

**துனிகொள் பருவரல் தீர வந்தாய்**

**இனிதுசெய் தனையால் வாழ்கநின் கண்ணி**" (அகம்.,பா.எ: 314.,வ.எ: 14-18)

எனும் வரிகள் விளக்குகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 34)

இதிலிருந்து பாணனின் கடமையுணர்வும் அவனின் நடுவுநிலைத் தன்மையும் வெளிப்படுகிறது. தலைவனுக்கு எல்லாமுமாக இருப்பவன் பாணன், பரத்தையிற் பிரிவுக்கும் துணை நிற்பவன் பாணன். ஆயினும் தலைவன் தலைவியருள் ஊடலைத் தீர்ப்பவனுமாக இருப்பதே அவனின் நடுவுநிலைத் தன்மை வெளிப்படக் காரணமாக அமைகின்றது.

நடுவுநிலைமை உடையவர் நடுவுநிலைமை இல்லாதவர் என்பது அவரவர்க்குப் பின் எஞ்சி நிற்கும் புகழாலும் பழியாலும் காணப்படும் என்பதைத்,

"**தக்கார் தகவிலர் என்பது அவரவர்**

**எச்சத்தால் காணப் படும்**" (திரு.கு.அதி.எ: 12.,கு.எ: 114)

எனும் குறளின் வழிப் புலனாகிறது. (மு. வரதராசன்.(உ.ஆ).,1949: 24) பாணனின் குறைகளும், புகழும் அவனின் செய்கையால் விளைகின்றன என்பது பெறப்படுகிறது.

**2.4.5.1. தலைவியின் குறைகளைச் சுட்டிக்காட்டுதல்**

பாணன் நடுவுநிலைமையோடு இருப்பவன் ஆதலால் தலைவியின் குறைகளைச் சுட்டிக்காட்டுகிறான். தலைவன் பிரிவினால் சிறிதும் பொறையின்றி வருந்தியிருந்த தலைவியை நோக்கிப் பாணன், இவ்வாறு பொறுமையின்றி வருந்துவது எம் பெருமாட்டிக்குத் தக்கதன்று என்று கூறுகிறான். இதனைக்,

"**காண்மதி பாண விருங்கழிப் பாய்பரி**" (ஐங்.,பா.எ: 134.,வ: 1)

எனத்தொடங்கும் பாடல், உணர்த்துகிறது. (பொ.வே.சோமசுந்தரனார்., உ.ஆ., 1961 : 191) இதனால் தலைவி என்மேற் குறைகூறித் திரிகின்ற பாண்மகனே! என்று விளிக்கின்றாள். இதன்மூலம் பாண்மகன் தலைவியின் பொறுமையற்ற தன்மையைச் சுட்டிக் காட்டிக் குறையை எடுத்துரைப்பதனை அறியமுடிகிறது.

**2.4.5.2. தலைவிக்குப் புத்தி புகட்டல்**

பாணன் தலைவியின் குறைகளைச் சுட்டிக்காட்டியது போலவே அவளுக்குத் தக்க சமயத்தில் புத்திபுகட்டவும் செய்கிறான். வினைமேற் சென்ற தலைவனின் பிரிவினைத் தாளாத தலைவியின் மெலிவு கண்ட பாணன், "வினை ஆடவர்க்குயிர் ஆதலால் அதன் பொருட்டுச் சிறிது பிரிந்து போய் மீள்வதற்குள் எம்பெருமாட்டி இங்ஙனம் மெலிதலும் ஊடலும் தகுதியாகுமோ? என்று வினவுகிறான். இதனை,

"**யாரினவன் செய்கோ பாண வானாது**" (ஐங்.,பா.எ: 133.,வ: 1)

எனத்தொடங்கும் பாடல் உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 190) இதன் வாயிலாகப் பாணன் தலைவிக்கு அறிவுரை பகருகின்றான்.

தலைவனின் பிரிவினை ஆற்றாது மெலியும் தலைவியைக் கண்ட பாணன், எம் பெருமாட்டியின் பிரிவாற்றாமை என்பது எம்பெருமானுக்கும் உளதன்றே! அவர் அதனை ஆற்றி

வினைமேற் கருத்தூன்றியிருக்க, நீவிர் ஆற்றியிருத்தலாகிய நுங்கடமைக்கண் நிற்றல் வேண்டாமோ? என்று அறிவுரை பகருகிறான். இதனைக்,

"**கருவி வானங் கார்சிறர் தார்ப்பப்**" (ஐங்.,பா.எ: 476.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 748) பாணன் தலைவியின் குறைகளைச் சுட்டிக்காட்டி அவளுக்கு புத்திபுகட்டுவதை இதன் வாயிலாக அறியமுடிகிறது.

**2.4.5.3. தலைவனுக்குப் புத்தி புகட்டல்**

பாணன் தலைவியின் குறைகளைச் சுட்டிக்காட்டி அவளுக்குப் புத்தி புகட்டியது போலவே தலைவனுக்கும் புத்திபுகட்டுகிறான். தலைவனின் பிரிவைத் தாளாத தலைவியின் நிலை கண்ட பாணன், தலைவன்பால் செல்கின்றான். அவ்வாறு தலைவனைக் காணப் பாசறைக்கண் சென்ற பாணன் தலைவனை நோக்கி, "அன்புடையாளை இவ்வாறு துன்புறவிடுத்து நீ பாசறைக்கண் தங்கியிருப்பது உன் தலைமைக்குத் தகவன்று" என்று கூறுகிறான். இதனை,

"**நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு**" (ஐங்.,பா.எ: 480.,வ: 1)

எனத்தொடங்கும் பாடல் விளக்குகின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 753-754) அதேபோல் பாணன் தலைவனிடம், தலைவியிமே நீ இவ்வாறு கருணையின்றி இருப்பாயானால், எளியேனாகிய எம்பால் எத்தகையவனாக இருப்பாயோ? நாங்கள் அறிகியோம். ஆகவே இப்பொழுதே சென்று எம்பெருமாட்டிக்கு அருள்க! என்று கூறுவதன் மூலம் தலைவனுக்குப் புத்திபுகட்டுவது புலப்படுகிறது.

**2.4.6. மீன்பிடித் தொழில் செய்யும் பாணர்**

பாண் சாதியினர் மன்னர்களையும் வள்ளல்களையும் பாடிப் பரிசில் பெற்று மட்டுமே வாழ்ந்திடவில்லை. அவர்கள் மீன் பிடித்தும் தங்கள் வாழ்வாதாரத்தைச் சமன் செய்துள்ளனர். அகஇலக்கியங்களில் பாணர் மீன் பிடித்து அதனை மருத நிலத்தவரிடம் பண்டமாற்றம் செய்து நெல்லைப் பெற்றுள்ளனர். அவர்கள் கடலில் சென்று மீன் பிடித்ததாகக் கருதப்படவில்லை. குளம், ஆறு போன்ற சிறு சிறு நீர்த் தேக்கங்களில் கிடைக்கும் மீனினைத் தூண்டிலால் பிடிக்கின்ற பழக்கம் உடையவராகக் காணப்படுகின்றனர். இம்மீன்பிடித் தொழிலைச் செய்தவர்களாகப் பாண்மகள், பாண்மகன் என்னும் பாண்மரபினரே பெரும்பாலும் குறிப்பிடப்படுகின்றனர்.

கயிற்றினைக்கொண்ட நுண்ணிய தூண்டிற் கோலால் மீனைப்பிடிக்கும் பாண்மகள், புனலை அடுத்த கரையில் அகப்படுத்திய வரால் மீனை வஞ்சிமரத்தின் விறகினாற் சுட்டு, அதனைப் பன்னாடையால் அரிக்கப்பெற்ற கள்ளையுண்டு களித்திருக்கும் தன் தந்தைக்கு உண்ணக் கொடுத்துள்ளாள். இதனை,

"**நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்**" (அகம்.,பா.எ: 216.,வ: 1)

எனத்தொடங்கும் பாடல் உணர்த்துகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.,1944: 226) அக்காலப் பாணரின் குடும்பவாழ்வில் பெண்கள் பொறுப்புணர்வு மிக்கவர்களாகக் காணப்படுகின்றனர்.

பாண்மகள் தான் பிடித்த மீனை மருதநிலப் பெண்ணிடம் கொடுத்து அதற்கு விலையாக நெல்லும் பயறும் பெற்றாள் என்பதை,

"**முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த....**" (ஐங்.,பா.எ: 47.,வ: 1)

என்னும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.1961: 71)

"**அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்.....**" (ஐங்.,பா.எ: 49.,வ: 1)

எனும் இவ்வரிகள், உரைக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.1961: 79) அதுபோன்று, வலைவீசி மீன்பிடிக்கும் பாணனின் மகள் வரால் மீனுக்கு விலையாக உழவன் மனைக் கிழத்தியிடம் கூடை நிறைய வெண்ணெல்லைப் பெற்றுள்ளாள். இதனை,

"**வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்**" (ஐங்.,பா.எ: 48.,வ: 1)

எனத்தொடங்கும் பாடல், உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 77) இதன்மூலம், பாண்சாதியினருள் ஆடவர் வலை பின்னுவதில் வல்லவர்களாக விளங்கினர். பெண்கள் தூண்டில் கொண்டும், வலைவீசியும் மீன்பிடித்துள்ளனர் என்பதும் புலனாகிறது. மேலும், பாணர் மீன்பிடித்தல் தொழிலில் வல்லவர்களாகவும் வலைத்தொழிலில் சிறந்தவர்களாகவும் விளங்குவதோடு, அவர்கள் பண்டமாற்றம் செய்யும் முறையிலும் சிறந்து விளங்கினர் என்பதை உணரமுடிகிறது.

### 2.4.7. இலக்கியங்கள் உணர்த்தும் மண்டைப் பாணர்

பாணரின் ஒரு பிரிவினராக மண்டைப்பாணரைக் குறித்துள்ளனர். ஆயினும் சிலர் மண்டைப் பாணர் என்பதற்கு மண்டையாழ்ப்பாணர் என்றும் பொருள் உரைக்கின்றனர். வேறு சிலர் மண்டைப் பாணர் என்பதில் 'மண்டை' எனும் சொல்லுக்குப் பிச்சைப்பாத்திரம் என்று

பொருளுரைப்பதும் குறிப்பிடத்தக்கது. “வாய்ப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் (மண்டை – பிச்சைபாத்திரம்) என மூவகையாகப் பகுத்தனர்.” (க. கைலாசபதி.,2006: 138)

பாணர் தாம் பிடித்த பச்சை மீனைப் பெய்து வைத்த மண்டையைப் போன்று என்று மண்டையைக் கலனாகப் பயன்படுத்தியுள்ளனர். இதனைப்,

“**பாணர் பசுமீன் சொரிந்த மண்டை போல**” (குறுந்.,பா.எ: 169.,வ: 4)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 304)

வறுமையுற்ற யாழ்ப் பாணரது ஏற்கும் மண்டை என்று கூறுவதன் வாயிலாகப் பாணர் தம் கைகளில் இரப்பதற்கென்று ஒரு பாத்திரம் போன்ற பொருளைக் கொண்டிருந்தனர் என்பது பெறப்படுகிறது. இதனை,

“**இலம்படு புலவர் மண்டை**” (புறம்.,பா.எ: 155.,வ: 6)

எனும் வரியானது உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 328) இதுபோலவே, பாணருடைய மண்டைகள் நிரம்பக் கள்ளினை வார்த்துள்ளனர். இதனைப்,

“**பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்**” (புறம்.,பா.எ: 115.,வ: 2)

எனும் வரியானது எடுத்துரைக்கின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 251)

இதன்மூலம் யாழிசைக்கும் பாணர் கையில் மண்டை எனும் பொருள் இருந்தது என்றும், அப்பொருளை உணவுக்கு வேண்டிய கலனாக மட்டும் பயன்படுத்தினர் என்பதற்குச் சான்றுகள் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. எனவே யாழின் வடிவமே மண்டை போன்ற அதாவது அகன்ற பாத்திரம் போன்ற அமைப்பினைக் கொண்டிருக்க வேண்டும். இம்மண்டை போன்ற அமைப்பானது யாழின் அடிப்பகுதியாகவும், அதன் மேற்பகுதியில் யாழின் நரம்புகள் உள்ள உறுப்பானது பொருத்தப்பட்டிருக்க வேண்டும் என்பதும் உணரப்படுகிறது. யாழின் ஒரு வகையே மண்டையாழ் என்பதும் அதனைப் பயன்படுத்துவோர் மண்டையாழ்ப் பாணர் எனவும் வழங்கப்பட்டுள்ளனர் என்பதும் தெற்றென அறியமுடிகிறது.

அதனைப் பிச்சைப்பாத்திரம் என்னும் சொல்லால் விளக்க முயற்சிப்பது பாணரின் வறுமையைக்கூற எடுத்தாளப்பட்ட சொல்லாகவே ஏற்க இடமளிக்கிறது. காரணம், அவர்கள் வள்ளல்களிடமும் மன்னர்களிடமும் புகழ்ந்து பாடியும் தம் திறமையை வெளிக்காட்டியும் பரிசில் பெற்றனரே அன்றி, அவர்கள் எந்தப் பொருளையும் பிச்சைப் பொருளாக ஏற்கவில்லை என்பதைச் சங்கஇலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

எனவே மண்டையாழினைக் கொண்டு பண்டமாற்று முறையில் பொருட்களை விற்கவும், வாங்கவும் செய்தனர் என்பது புலனாகிறது. ஏனெனில், பாணர் கூட்டம் ஒரு நிலையான வாழ்வாதாரத்தைப் பெறாத காரணத்தினால், அவ்வாறான பெட்டி போன்ற அல்லது ஒரு கூடை போன்றதொரு பொருளைப் பயன்படுத்தியுள்ளனர். அவர்கள் அப்பாத்திரத்தில் யாழினையும் சேர்த்துப் பொருத்திப் பயன்படுத்தியமை அவர்தம் மதிநுட்பத்தை புலப்படுத்துகிறது.

### 2.5. புறஇலக்கியங்களில் பாணர்

அகஇலக்கியங்களில் பாணரின் செயல்பாடுகள் அனைத்தும் தலைவன் தலைவியரின் வாழ்வியலோடு இணைந்து காணப்பட்டன. அதுபோல புறஇலக்கியங்களில் இப்பாணர் கூட்டம் வள்ளல்களுடனும், மன்னர்களுடனும் இணக்கமான உறவினைப் பெற்றிருந்தனர். பாணரின் வறுமை வாழ்வும் அதனால் தாம் கற்ற கல்வியை வெறுக்கின்ற நிலையையும் புறஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. மன்னர் மற்றும் வள்ளல்களுடன் கொண்ட இணக்கமான உறவால், பிரிவினைத் தாழமுடியாதவர்களாகவும் காணப்படுகின்றனர்.

#### 2.5.1. பாணர் பெற்ற பரிசில்

பாணரின் நிலையில்லாத வாழ்க்கைச்சூழல் அவர்களை இரந்துண்ணும் நிலைக்கு இட்டுச் செல்லுகின்றது. அவர்களின் இசைத்திறனும், இசைக்கருவிகளை இசைக்கும் திறனும் மன்னர்களையும், வள்ளல்களையும் பெரும்பரிசில்களை வழங்கச் செய்துள்ளது. பாணருக்குக், “கன்றுடனே கறைபொருந்திய அடியையுடைய யானையை அணியணியாகச் சாய்த்து கொடுக்கும்” பண்பினராக வள்ளல்களும் மன்னர்களும் விளங்கினர் என்பதைப் புறநானூற்றின் 135வது பாடல் உணர்த்துகின்றது. யானைகளை வரிசைவரிசையாக வழங்கியதோடு அல்லாமல் குதிரைகளையும், குதிரைகள் பூட்டப்பட்ட தேரினையும் கொடுத்துள்ளனர். புறநானூற்றின் 233வது பாடலும், பாணர்க்கு யானைகளைப் பரிசாக வழங்கியமையை விளக்குகிறது. அதுபோலப் புறநானூற்றின் 127வது பாடலில், பாணர்க்கு வேள்ஆய் என்பான் தன்னிடமிருந்த யானைகளை வழங்கினான் என்று உணர்த்துகிறது.

##### 2.5.1.1. பொன்பூவும், பொன்னரிமாலையும்

அக்காலச் சமுதாயத்தில் வள்ளல்களும் மன்னர்களும் பாணர் சுற்றத்திற்குப் பொன்னாலான தாமரைப் பூவினைப் பரிசாக வழங்கியுள்ளனர். பாண் சுற்றத்தாருள் பெண்களுக்கு அப்பூக்களால் தொடுத்த பொன்னரிமாலையைப் பரிசாக வழங்கியுள்ளனர்.

புறக்கொடையைப் பெற்ற வலிய வேந்தன் வீரத்தைப் பாடிய பாடினியும் தோற்றப் பொலிவையுடைய சிறந்த பல கழஞ்சால் செய்யப்பட்ட நன்மையையுடைய அணிகலத்தைப் பெற்றாள். இதனை,

"**இழைபெற்ற பாடினிக்குக்**

……………………………

**ஒள்ளழல் புரிந்த தாமரை**

**வெள்ளி நாராற் பூப் பெற் றிசினே**" (புறம்.,பா.எ: 11.,வ.எ: 14-18)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 32) பாட்டில் வல்ல பாணனும் தழலின்கண்ணே ஆக்கப்பட்ட பொற்றாமரையை வெள்ளி நாரால் தொடுத்த பூவைப் பரிசாகப் பெற்றான் என்பதைப்,

"**பாணர் தாமரை மலையவும்**" (புறம்.,பா.எ: 12.,வ: 1)

எனும் வரி விளக்குகின்றது. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 33) இதுபோலவே பொற்றாமரையைச் செய்த முறையினையும், அதனை மாலையாகத் தொடுத்த அழகினையும்,

"**அழல் புரிந்த வடர்தாமரை**

**ஐதடர்ந்த நாற்பெய்து**

**புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல்**

**பாறுமயிருந் தலைப்பொலியச் சூடிப்**" (புறம்.,பா.எ: 29.,வ.எ: 1-4)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 84) எரியாலாக்கப்பட்ட தகடாகச் செய்த நூலின் கண்ணேயிட்டு அலங்கரித்த தொழிலாற் பொலிந்த பொன்னால் இயன்ற நறிய மாலையைப் பாணர்க்குப் பரிசாக வழங்கியுள்ளனர்.

பகைவரை வென்ற மன்னன், அப்பகை படையின் யானை படையிலிருந்து பெறப்பட்ட பட்டத்தினைக் கொண்டு பாணர் சுற்றத்திற்குப் பொன்னாலான தாமரைப்பூவைப் பரிசாக வழங்கியுள்ளனர். இதனை,

"**ஒன்னார் யானை யோடைப் பொன்கொண்டு**

**பாணர் சென்னி பொலிய**" (புறம்.,பா.எ: 126.,வ.எ: 1-2)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 270) இதனை வலியுறுத்துமாறு,

"**பாணன் சூடிய பசும்பொற் றாமரை**" (புறம்.,பா.எ: 141.,வ.ள்: 1)

எனும் வரியும் அமைந்துள்ளது. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 297)

இதன்மூலம் அக்காலத்தில் பாணரின் திறமைக்கு மன்னரும், வள்ளல்களும் வாடாமலராகிய பொற்றாமரையைப் பரிசாக வழங்கியுள்ளமை புலனாகிறது. இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில், புறநானூற்றின் 302 வது பாடலும், பதிற்பத்தின் 4, 5, 6, 7 மற்றும் 8 ஆம் பாடல்களும் அமைந்துள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.

**2.5.2. பாணனின் ஆற்றுப்படுத்தும் இயல்பு**

ஆற்றுப்படுத்துதல் என்பதே ஒருவன் இன்னொருவனுக்கு வழிகாட்டுல் என்பதாகும். அவ்வாறு பரிசில் பெற்று வரும் பாணர், பரிசில் பெறஇருக்கும் பாணருக்கு வழிகாட்டுவதும், பரிசில் பெற்ற பாணரிடம் பெற நினைக்கும் பாணர் கூட்டம் விசாரிப்பதும் ஆற்றுப்படுத்துதல் என்று வழங்கப்படுகிறது.

பரிசில் பெற்று வரும் பாணர் சுற்றத்தினைக் கண்ட மற்றொரு பாணர் கூட்டம், "பாணர்களே! பண்ணன் மனையிலுண்டாகும் ஊனொலி அரவம் கேட்கிறது. எறும்பொழுக்குப் போல இளஞ்சிறார்கள் சோறுடைக் கையினராய் வேறு வேறாகப் போவதையும் காண்கிறோம். எனவே பசிப்பிணி மருத்துவனாகிய பண்ணனது மனை அணித்தோ? சேய்த்தோ? எனப் பண்ணன் எனும் குறுநில மன்னனின் மனை எங்குள்ளது என்று ஏக்கத்துடன் பாணர் கேட்டுச் செல்லுகின்றனர். இதனை,

"**யான் வாழ நாளும் பண்ணன் வாழிய**" (புறம்.,பா.எ: 173.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் அறிவிக்கிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 374) பரிசில் பெற்று வரும் பாண் கூட்டத்தைக் கண்டு கேட்போரும் ஆற்றுப்படுத்தியுள்ளனர். சிலவேளைகளில், பரிசில் பெற்றவர் பெறாதாரைக் கண்டு தாமே ஆற்றுப்படுத்துவதும் உண்டு என்பது பெறப்படுகிறது.

**2.5.3. புலவரால் ஆற்றுப்படுத்தப்படும் பாணன்**

பாணரின் வறுமை நிலையை உணர்ந்த புலவர் மரபினர் அவர்களை ஆற்றுப் படுத்துகின்றனர் என்பதை,

"**உடும்புரித் தன்ன வென்பெழ மருங்கிற்**" (புறம்.,பா.எ: 68.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 147) பசியால் வாடிய பாணர் கூட்டத்தைக் கண்ட புலவன் ஒருவன் ஆற்றுப்படுத்துகிறான். பாணரின்

மிக்க பசியினைத் தீர்ப்பார் யாரையும் காணாத நிலையில், அவர்களின் பசியைப் போக்குவதே அவர்களுக்கு ஈயும் முதல் பரிசு என்றெண்ணிக் கூறுகின்றான். இங்கே என்ன செய்கின்றாயோ பாண! எனக் கேட்டு, அவனிடம் சோழன் நலங்கிள்ளியின் வள்ளன்மையை எடுத்துரைத்துப் பின், நீ பிறன்வாயிலை நினையாதவாறு உனக்கு அளிப்பான். அவன்பால் செல்வாயானால், செல்வமுடையவன் ஆவாய் எனக் கூறுகின்றான். அதேபோன்று,

"**தேஎந் தீந் தொடைச் சீறியாழ்ப் பாண**" (புறம்.,பா.எ: 70.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலும், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947:180) "தேன் போல இனிய நரம்புத் தொடை பொருந்திய சிறிய யாழையுடைய பாண!" நின் விறலியோடு "மெல்ல மெல்ல நடந்து செல்வையாயின், செல்வத்தையுடையை ஆவை" என்று சோழன் குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளி வளவனிடம் செல்ல வேண்டி ஆற்றுப்படுத்துவதை அறியமுடிகின்றது.

### 2.5.4. மீண்டும் மீண்டும் செல்லும் வழக்கம்

பாணர் தம் சுற்றத்தோடு ஓரிடத்தில் நிலையான ஒரு வாழ்வியலைப் பெற்றாரில்லை. எனவே அவர்கள் நாடோடி வாழ்வியலையேக் கொண்டிருந்தனர். இத்தகைய வாழ்க்கைச் சூழலால் பாணர் தம் சுற்றத்தோடு வறுமையில் வாடுபவராகவே காணப்பட்டனர். பாணர் வறுமையில் வாடிய காரணத்தால், தம் சுற்றத்தோடு மன்னர்களையும், வள்ளல்களையும் காணச்செல்வது வழக்கம். இருப்பினும் அவர்கள் தம் வறுமை காரணமாக எந்த மன்னன் அல்லது வள்ளல் வரையாது வழங்குகின்றானோ அவனையே மீண்டும் மீண்டும் சென்று பார்க்கும் வழக்கம் உடையவர்களாகக் காணப்பட்டனர். இதனை,

"**ஆனினங் கலித்த வதர்பல கடந்து**............" (புறம்.,பா.எ: 138.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 291) அதுபோலவே,

"..................**நின் இறை**

**மாறி வாரென மொழியலன் மாதோ**" (புறம்.,பா.எ: 138.,வ.ள்: 6-7)

எனும் வரிகளும், கூறுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 291) "நின்னடைய தலைவன் இப்பொழுது போய்ப் பின்னொரு நாட் பரிசிற்கு வாவென்று சொல்லான்" என்றுரைக்கின்றான். எனவே "நீ அவன்பாற் பரிசில்பெற்று வருவதனால்

நின்னைப் பழைய பாணன் என்று அறிவார் யார்?" எனக் கேட்பதன் வாயிலாக பாணன் ஏற்கனவே நாஞ்சில் வள்ளுவன் என்பானைக் காணச் சென்றுள்ளான் என்பது புலனாகிறது.

**2.5.5. அரசன் - இறைவன் எனும் வழக்கம்**

'இறை' என்னும் சொல்லுக்கு இறைவன் என்று மட்டும் பொருள் உணர்த்தாது, அரசன் என்று பொருள் உணர்த்தப்பட்டுள்ளமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன. ஏனெனில், பாணரின் பசிப்பிணிக்கு மருத்துவனாகவும், பசிக்குப் பகைவனாகவும் விளங்குகின்ற காரணத்தால், அரசன் இறைவன் என்று போற்றப்படும் நிலையை எய்துகிறான். இதனைப்,

"..........***பாண் பசிப் பகைஞன்***" (புறம்.,பா.எ: 180.,வ: 7)

எனும் வரி, உரைக்கிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 393) ஈர்ந்தூர்கிழான் கோயமான் என்பான் பாணரின் பசிக்குப் பகைவன் எனப் பாராட்டப்படுகின்றான். மேலும், அரசன் இறைவனாகப் போற்றப்பட்டான் என்பதை,

"....................***நின்னிறை***

***மாறி வாரிவென மொழியலன்***" (புறம்.,பா.எ: 138.,வ: 6-7)

எனும் வரிகள், மொழிகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 291) நாஞ்சில் வள்ளுவன் இறைவனாகப் பாணரால் போற்றப்பட்டுள்ளான். இதுபோன்று,

"***பசிப்பிணி மருத்துவ னில்லம்***" (புறம்.,பா.எ: 173.,வ: 11)

எனும் வரியானது, குறிக்கின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 374) குறுநில மன்னன் பண்ணன் என்பான் பசிப்பிணி போக்கும் மருத்துவனாகப் போற்றப்பட்டுள்ளான். இதன்மூலம் அக்கால மன்னர்களும், வள்ளல்களும் பசியால் வாடிய இரவலர்களுக்கு முதலில் உணவிடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர் என்பதை,

"***ஊன் சோற் றமலை பாண் கடும் பருத்தும்***" (புறம்.,பா.எ: 33.,வ: 14)

எனும் வரி, உணத்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 93) சோழன் நலங்கிள்ளி தன்னை நாடி வந்த பரிசிலர்க்குத் "தசையோடு கூடிய பெருஞ் சோற்றுத் திரளையை" பாண் சுற்றம் உண்ணுமாறு வழங்கினான்.

குளமுற்றத்ததுத் துஞ்சிய கிள்ளிவளவன் வரகரிசிச் சோறும் அதில் பாலும் தேனும் கலந்து, குறிய முயலின் கொழுப்பு நிறைந்த சூடான இறைச்சியோடு தன் பாண் சுற்றத்தோடு உண்ண வழங்கினான். இதனைப்,

"**புறவுக் கருவன்ன புன்புல வரகின்**

**பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்**

**குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலோடு**

…………………………………

***அமலைக் கொழுஞ் சோறார்ந்த பாணர்***" (புறம்.,பா.எ: 34.,வ.எ்: 9-14)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.உ.ஆ).,1947: 96) இதனை வலியுறுத்துமாறு,

"***ஆசாகெந்தை யாண்டுளன் கொல்லோ***" (புறம்.,பா.எ: 235.,வ: 16)

எனும் வரியும் விளக்குகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 77)

அக்கால வள்ளல் பெருமக்கள் பாணர் கூட்டத்திற்கு உண்ண உணவும், பொன்னும் பொருளும் என செல்வம் பலவற்றையும் வரையாது வழங்கியுள்ளனர். எனவே பாணரின் யாழிசைக்கும் பாடலின் இனிமைக்குக் கிடைக்கின்ற முதல் பரிசாக உணவினைப் புகழ்ந்துள்ளனர். இதனாலேயே பாண் கூட்டம் தன்னைப் புரந்த வள்ளல்களையும், மன்னரையும் இறை என்று போற்றினர் என்பது புலனாகிறது.

**2.5.6. கள்ளுண்ட மன்னருடன் பாணரும்**

அக்கால மக்களுள் போரும் - வெற்றியும் இரண்டறக் கலந்த ஒன்று, என்று கூறுமளவு போர் என்பது மக்கள் வாழ்வில் பின்னிக்கிடந்தது. அதுபோல பகைவனை வென்ற வெற்றிக் களிப்பினைக் கள்ளுண்டு மகிழ்ந்திருந்தார்கள். இதனைக்,

"***கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்திக்***" (புறம்.,பா.எ: 316.,வ: 1)

எனும் வரி, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 228) பகை வேந்தன் போரில் இறந்துவிடுகிறான். வெற்றியடைந்த வேந்தனுடன் அவனுடைய படைத்தலைவனும் இன்னும் பிற சான்றோர்களுமாகக் கள்ளினை உண்டு மகிழ்ந்துள்ளனர். அவர்களுடன் பாணரும் உடனிருந்தனர் என்பதை,

"***அவனெம் மிறைவன் யாமவின் பாணர்***" (புறம்.,பா.எ: 316.,வ: 4)

எனும் வரி உணர்த்திச் செல்கிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 228) பாணர் போர்க்களத்தில் காணப்படுவது போன்று தம் மன்னனின் வெற்றியிலும் பங்குகொண்டனர் என்பதை அறியமுடிகிறது.

### 2.5.7. பாண் கடன்

பாணர் கூட்டம் புரவலர்களிடம் பரிசினைப் பெறுவதற்காக மட்டுமே செல்வதில்லை. அவர்களின் மீது கொண்ட அன்பும் மரியாதையுமே பாணரை மீண்டும் மீண்டும் செல்லத் தூண்டுகிறது. பாணர் புரவலர்கள் மீது கொண்ட நட்பு, அப்புரவலனை இழக்கின்ற சமயத்தில் மிக்க துன்பத்தை உடையவர்களாகவும், அதனால் அவர்கள் தம்மை ஒப்பனை செய்துகொள்ளாதவர்களாகவும் காணப்படுகின்றனர். இதனைப்,

"**பாணன் சூடான் பாடினியணியாள்**" (புறம்.,பா.எ: 242.,வ: 3)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 92) இதில் பாண்டி நாட்டிற்கும் சோழநாட்டிற்கும் இடையில் ஒல்லையூர் எனும் நாடானது இருந்தது. இதனைக் காத்து வந்தவன் பெருஞ்சாத்தன் என்பவன் ஆவான். இவன் போரிலும், கொடைத் தன்மையிலும் மிக்க புகழுடையவனாக விளங்கினான். அவனை நாடி வரும் பரிசிலர்க்கு வரையாது வழங்கினான். அத்தகையவன் இயற்கை எய்திய பின் பரிசிலர்கள் மிக்க துன்பத்தை உடையவராயினர். இவ்வாறே பாணரும் வாடிய நிலையில், ஒல்லையூரில் பூத்த முல்லைப் பூவினைக் கண்ட புலவர், உன்னை வளையணிந்த இளைய மகளிரும் பறியார், இளைய வீரரும் சூடார். பாணனும் பறித்துச் சூடிக் கொள்ளான். பாடினியும் சூடாள். அவ்வாறிருக்க நீ தான் பூக்கலாகுமோ? என்று கேட்பதாக அமைகிறது.

இதன்மூலம் தம்மைப் புரக்கும் புரவலர் இறப்பின், புரக்கப்படும் மகளிரும் வீரருமே அன்றிப் பரிசிலராகிய பாணரும் பிறரும் கூடத் தம்மை ஒப்பனை செய்து கொள்ளமாட்டார் எனும் செய்தி புலப்படுகிறது. எனவே புரவலர்கள் இறந்தால் தம்மை ஒப்பனை செய்துகொள்ளாமல் இருப்பதைப் பாணர் தம் கடமையாக ஏற்றுள்ளனர் என்பதும் புலனாகிறது. இதனை மேலும் வலியுறுத்துமாறு,

"**பாணர் சென்னியும் வண்டு சென் றூதா**

**விறலியர் முன்கையுந் தொடியிற் பொலியா**" (புறம்.,பா.எ: 244.,வ.ள்: 1-2)

எனும் வரிகளும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 95-96)

"**பசித்தன் றம்ம பெருந்தகை யூரே**

……………………………….

……………..**வேந்து விழு முறினே**" (புறம்.,பா.எ: 318.,வ.ள்: 3-9)

எனும் வரிகளும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 231)

“**நெடுந்தகை கழிந்தமை அறியா**

**தின்னும் வருங்கொல் பாணரது கடும்பே**” (புறம்.,பா.எ: 264.,வ.ள்: 6-7)

எனும் வரிகளும் அமைகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 95-231) பாணர் கூட்டத்தைப் புரக்கும் புரவலர் இறப்பின் அவர்கள் மிக்கதுன்பத்தினை அடைவர் என்பதை உணரமுடிகிறது.

**2.5.8. பாணரின் ஊண் உண்ணும் பழக்கம்**

பாணர் சுற்றத்துடன் சேர்ந்து வள்ளல்களையும், மன்னர்களையும் காணச் செல்லும் போது, அவர்கள் வழங்கும் இறைச்சியுடன் கூடிய உணவினை ருசித்து உண்ணும் இயல்புடையவராக விளங்கினர். அவர்கள் தசையோடு கூடிய பெருஞ்சோற்றுத் திரளையைப் பாண் சுற்றத்தோடு சேர்ந்து உண்டனர். இதனை,

“**ஊன் சோற் றமலை பாண்கடும் பருத்தும்**” (புறம்.,பா.எ: 33.,வ: 14)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 93) புறவினது கருவாகிய முட்டை போன்ற புல்லிய நிலத்து வரகினது அரிசியைப் பாலின்கட் பெய்து அடப்பட்ட சோற்றைத் தேனொடு கலந்துண்டு, குறு முயலினது கொழுவிய சூட்டிறைச்சியைத் தின்ற என் சுற்றத்தோடு எனப் பாணன் கூறுகின்றான். இதனைப்,

“**புறவுக் கருவன்ன புன்புல வரகின்**

**பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்**

**குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலோடு**” (புறம்.,பா.எ: 34.,வ.ள்: 9-11)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 96) இதேபோல்,

“**யாமை புழுக்கிற் காமம் வீடவாரா**” (புறம்.,பா.எ: 212.,வ: 3)

எனும் வரியும், சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை. (உ.ஆ).,1951:32) மேலும், ஆமை இறைச்சியுடனே மதுவையும் உண்டு களித்தனர். ஆரல் மீனாகிய கொழுவிய சூடான இறைச்சியை அக்கால மக்கள் அழகிய கதுப்பகத்தே அடக்கி உண்டனர். அதியமான் நெடுமான் அஞ்சி தன்னை நாடி வந்த பரிசிலர்க்கு ஊன்சோறு வழங்கினான். இதனை,

“**என்பொடு தடிபடு வழியெல்லா யெமக்கீயு மன்னே**

……………………………………

**புலவுநாறு மென்றலை தைவருமன்னே**'' (புறம்.,பா.எ: 235.,வ.ள்: 6-9)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 76-77) இதன் வாயிலாகப் பாணர் இறைச்சி உணவு உண்ணும் பழக்கம் உடையவராக விளங்குது புலனாகிறது.

**2.5.9. பாணனின் வழிச்செலவின் இடர்நிலை**

பாணர் தம் சுற்றத்தோடு தன்னைப் புரக்கின்ற வள்ளலையும் மன்னர்களையும், காணச் செல்கின்ற வழியானது மிக்க இடர் தருகின்ற வழிப்பாதையாக இருந்துள்ளது. அவ்வாறு ஒரு பாண் சுற்றம் செல்லும் காலம், பகற்பொழுது நீளாமல் இரவுப்பொழுது நீண்டுள்ள காலம். விலங்குகள் குளிரால் வருந்தும் மாசித்திங்கள். அத்திங்களிலே பனிமிக்க அரிய வழிகளை நடந்து செல்ல நினைக்கிறான் பாணன். அவனின் மனம் மகிழ்ச்சி எய்துமாறு புல்லிய இருட்காலமாகிய விடியற்பொழுது கழிய, இருளிலும் பனியிலும் வருந்தும் வருத்தம் அகன்றொழிய, உலகமெங்கும் பரந்துள்ள இருள் நீங்கும் வண்ணம் ஞாயிறானது பலவாகிய கதிர்களைப் பரப்பி கீழ்த்திசையிலே தோன்றியது. இதனைப்,

''**பகல்நீ டாகா திரவுப்பொழுது பெருகி**

**மாசி நின்ற மாகூர் திங்கள்**

**பனிச்சுரம் படரும் பாண்மக னுவப்பப்**

**புல்லிருள் விடியப் புலம்புசே ணகலப்**

**பாயிரு ணீங்கிப் பல்கதிர் பரப்பி**

**ஞாயிறு குணமுதற் றோன்றி யாஅங்கு**'' (பதிற்.,6ம் பத்து.,பா.எ: 9.,வ.ள்: 1-6)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 278-279) இதன்மூலம் பாணர் தம் சுற்றத்தோடு நெடுந்தொலைவு சென்று, வழியில் ஏற்படும் துன்பங் களையும், பருவங்களால் உண்டாகும் இடரினையும் பொருட்படுத்தாது தம்மைப் புரப்பவரைக் கண்டு இரந்துண்டு வாழும் வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர் என்பது தெளிவாகிறது.

அதேபோன்று பாணர் சுற்றத்தைக் கண்ட புலவன், இவ்விடத்தே சிறிது இளைப்பாறிப் பின் செல்வீராக என்று கூறுவதுடன் கிள்ளிவளவனின் மனையைக் காட்டி, அங்கே நின் விறலியொடு மெல்ல மெல்ல நடந்து செல்வீராயின், செல்வமுடையவர் ஆகுவீர் என்று கூறுகிறான். இதனை,

''**இனிய காண்கிவட் டணிகெனக் கூறி**'' (புறம்.,பா.எ: 70.,வ: 4)

எனும் வரியும், (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 179)

**"இன்னகை விறலியொடு மென்மெல வியலிச்**

**செல்வையாயிற் செல்வை யாகுவை"** (புறம்.,பா.எ: 70.,வ.ள்: 15-16)

எனும் வரிகளும், புலப்படுத்துகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 180)

இதன்மூலம் பாணரது வழிச் செலவின் களைப்பும், அதனால் அவர்களை மெல்ல நடந்து செல்லச் சொல்வதும் புலப்படுகிறது. இது போலவே ஒரு பாணர் சுற்றம் பண்ணன் என்பானின் மனை தேடிச் செல்லுகின்ற வழியில் கண்ட மற்றொரு பாணரிடம்,

**"பசிப்பிணி மருத்துவனில்லம்**

**அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே"** (புறம்.,பா.எ: 173.,வ.ள்: 11-12)

என்று கேட்கிறான். (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 374) பாணர் கூட்டம் மிக்க தொலைவிலிருந்து வந்தமையாலும், பாணன் வரும் வழிப்பாதை உண்டாக்கிய துன்பத்தாலும், பண்ணனின் மனையிருக்கும் இடம் அருகிலோ அல்லது சேய்மையிலோ என்று கேட்டுத் தெரிந்து கொள்ள நினைக்கிறான். இரந்துண்டு வாழும் பாணர் சுற்றம், அவ்விரத்தற் பொருளைப் பெற நீண்ட நெடுந்தொலைவு நடந்து சென்றமையும், அதனால் ஏற்படும் வழிப்பாதையில் ஏற்படும் இடரினைச் சந்தித்து வருந்தியமையும் புலனாகிறது. இத்தகைய பல்வேறு இடர்பாடுகளைக் கடந்த பின்னரே பாணர் தம் சுற்றத்தோடு புரவலர் தரும் பரிசில்களைப் பெற்று மகிழ்ந்துள்ளனர்.

### 2.5.10. மன்னனைக்காண அழைக்கும் பாங்கு

பாணர் தம்மைப் புரக்கும் புரவலனைக் காண விழைதலும், அவரைக் காண மற்றொரு பாணரிடம், நீயும் வருகிறாயா? என அழைத்தலும் பற்றி இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன.

ஒரு விறலி மற்றொரு விறலியிடம், குணம் செயல்களால் உண்டாகிய புகழை உடைய ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் நம்மைப் பாதுகாத்தலை மேற்கொண்டு ஒழுகுவோன் ஆவான். அவனைப் பாணரது கையில் உள்ள யாழினால் குரலென்னும் நரம்பொடு புணர்த்த இனிய இசையில் தழிஞ்சி என்னும் துறை அமைந்த பாட்டினைப் பாடிச்சென்று கண்டு வருதற்குச் செல்வோம். வருதியோ? என்று கேட்கிறாள். இதனை,

**"ஓடாப் பூட்கை மறவர் மிடறப"** (பதிற்.,6ம் பத்து.,பா.எ: 7)

எனத் தொடங்கும் பாடல், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 270-271)

நன்கு கனிந்த கனிகளைக் கொண்ட மரத்தின் பழங்கள் வழிச் செல்வோருக்கு உணவாக அமைவதுபோல, சேரலாதனின் சேனை போரெனும் கொலைத் தொழிலை விரும்பும் இயல்பினை உடையது ஆகும். அதுபோலத் தானும் சாயினத்தானாயினும் (நறவென்னும் ஊரிடத்தே மகளிர் கூட்டத்திடையே இருந்தானாயினும்) உள்ளத்தால் பகைவரைப் பொரும் தொழிலையே விரும்புவனாவான். அதனால், நாம்சென்ற வழி நமக்குப் பகைப் புலத்தேபெற்ற அருங்கலன்களைப் பரிசிலாக வரையாது வழங்குவான். ஆகவே பாண்மகளே அவனைக் காண்பதற்குச் செல்லலாமோ? என்று கேட்கிறாள். இதனைக்,

"**கொலை வினை மேவிற்றுத் தானை தானே**" (பதிற்.,6ம் பத்து.,பா.எ: 10..வ:1)

எனத் தொடங்கும் பாடல், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 283-285)

பாணர் மன்னனைக் காணவிழையக் காரணம், அவன் நல்கும் பரிசில் பொருட்களே ஆகும். எனவேதான் பாண் கூட்டத்தின் பெண் மக்களும் இவ்வாறு தனித்து மன்னனைக் காணச் செல்லும் நிலையும், பிறரை உடன் அழைக்கின்ற நிலையும் உருவாகியுள்ளமை புலனாகிறது.

### 2.5.11. ஆற்றுப்படை நூல்கள் உணர்த்தும் பாணன் இயல்பு

ஆற்றுப்படை நூல்களுள் பாணரின் இயல்பினைத் தெற்றென விளக்குவதாக அமைந்தவை பெரும்பாணாற்றுப் படையும், சிறுபாணாற்றுபடையும் ஆகும். இந்நூல்கள் பாணரின் இயல்பினையும், அவர் புரவலனைக் காணச்செல்கின்ற நிலையினையும், பரிசில் பெற்று மீண்டும் வரும் தன்மையினையும், பரிசில் வழங்கிய மன்னனைப் புகழும் பாங்கும் உணர்த்துகின்றன.

#### 2.5.11.1. புரவலனைத் தேடிச்செல்லும் நிலை

சிறுபாணாற்றுப்படையில் பாணன் ஒருவன் மற்றொரு பாணனை நல்லியக் கோடனிடம் செல்லக் கூறி ஆற்றுப்படுத்துகிறான்.

பொற்கம்பி போன்ற முறுக்கடங்கிய நரம்பினது இனிய ஓசையை உடைய, சிறிய யாழை இடப்பக்கத்தே தழுவி நட்டபாடை எனும் பண் முற்றுப்பெற்ற இனிய பாலைப் பண்ணை இயக்குதலில் வல்ல பாணன் முறையறிந்து இயக்குகின்றான். அவன் வள்ளியோர் இன்மையால் பரிசிலர் இயங்காத இவ்வுலகத்தே பரிசில் தருவாரை விரும்பிச் செல்கிறான். வறுமை ஆற்றுப்படுத்தலாலே வழிநடந்த வருத்தம் தீர்ந்திருந்த மற்றொருவனைக் கண்டு, அறிவு வளர்த்தற்குரிய தொழிலையுடைய இரவலனே! என்று அழைக்கிறான். இதனைப்,

"**பொன் வார்த் தன்ன புரியடங்கு நரம்பின்**

……………………………………

***முனிவிகந் திருந்த முதுவாய் இரவல***'' (சிறுபாண்.,வ.எ்: 34–40)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1953: 15) பாணர் பரிசில் தருவாரை விரும்பிச் சென்றுள்ளனர். மேலும், அவர்கள் நீண்ட வழிப்பாதை நடந்த வருத்தம் தீர யாழிசைத்துக் கொண்டே சென்றுள்ளனர். இதனைப்,

“***பரிசிலை யொழித்த யாஅரைப் பாதிரி***

…………………………………

***தொடையமை கேள்வி இடவயிற் றழீஇ***'' (பெரும்பாண்.,வ.எ்: 4–16)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1953: 42) இதன்மூலம் பாணர் தம் யாழை இசைத்தபடியே புரவலரைக் காணச் சென்றுள்ளனர் என்பது புலனாகிறது.

**2.5.11.2. வழிகாட்டும் இயல்பு**

சிறுபாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவனாகிய நல்லியக் கோடனைக் காணச் செல்லுகின்ற பாணனுக்கு வழி கூறுமிடத்து, கடற்கரையின்கண் தாழை மலர்கள் அன்னம்போலப் பூத்திருக்கும், செருந்தி பொன்போல் பூத்திருக்கும். கழிமுள்ளி நீலமணி போல் மலர்ந்திருக்கும். புன்னை மரங்கள் மணற்பரப்பின்கண் பரவி நிற்கும். நல்லிசைப் புலவர் பாடுதற்கு மிகவும் பொருந்திய நெய்தல் நிலத்தின் வழியே ஊர்களையுடைய எயில்பட்டினத்தை எய்துவீர். மேலும் அங்குக் சென்றீர் என்றால், ஒட்டகம் உறங்கிக் கிடந்தாற் போன்று, கடல் கொணர்ந்து ஒதுக்கிய அகில்மர விறகாலே தீயினை எரித்துப் புகையை உண்டாக்குவர் நுழைச்சியர். பெருந் தோளையும், மதிமுகத்தையும், வேல் நோக்கையும் உடைய நுளைமகள் காய்ச்சிய கள்ளினை உண்டு மகிழ்ந்து கிடங்கிற் கோமானைப் பாடி, குழலோசையின் தாளத்திற்கேற்ப ஆடிய நும் விறலியரோடு, உலர்ந்து குழல்மீன் சூட்டையும் பெற்று உண்டு மகிழ்வீர் என்று வழிகாட்டியுள்ளனர். இதனை,

“***அலைதீர்த் தாழை அன்னம் பூப்பவும்***……'' (சிறுபாண்.,வ.எ்: 146–164)

எனும் வரியானது விளக்குகின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1953: 39) பாணருக்கு வழிகாட்டுவதன் வாயிலாக நல்லியக்கோடனைப் பற்றியும், அவனது எயில்பட்டினத்தைப் பற்றியும் உணரமுடிகின்றது.

#### 2.5.11.3. கல்வியை வெறுக்கும் அவலம்

இரந்துண்டு வாழும் பாணரின் வாழ்வில் வறுமை என்பது நிழலைப்போல அவர்களின் பின்னே வருகின்றது. இவ்வறுமை காரணமாகவே பாணரின் சுற்றம் தன்னைப் புரக்கின்ற புரவலனைத் தேடிச் செல்லத் தூண்டியது. உணவிற்காகவே காலம் முழுவதும் (நாடோடியாக) நிலையற்ற வாழ்வைப் பெற்ற பாணர் வெறுப்பின் காரணமாகத் தான்பயின்ற கல்வியையே வெறுக்கின்ற நிலைக்கும் தள்ளப்படுகின்றனர்.

பசிமிகுதியால் அழுகின்ற சுற்றத்துடனே ஓரிடத்தில் இராமல் பயனின்றி ஓடித்திரிதலைச் செய்யும் பொலிவிழந்த வடிவினையும், கற்ற கல்வியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையும் உடைய பாணனே! என்று அழைக்கப்படுகிறான். இதனை,

> "**வெந்தெறற் கனலியொடு மதிவலந் திரிதரும்**
> **தண்கடல் வரைப்பில் தாங்குநர்ப் பெறாது**
> **பொழிமழை துறந்த புகைவேய் குன்றத்துப்**
> **பழுமரந் தேரும் பறவை போலக்**
> **கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்**
> **புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண**!" (பெரும்பாண்.,வ.ள்: 17–22)

எனும் வரிகள், விளக்குகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 46) இதன்மூலம் பாணர் சமூகம் வறுமையின் பிடியில் உழன்றமையும், தன்நிலை மறந்த சூழலில் தான் கற்ற கல்வியை வெறுத்துள்ளனர் என்பதும் புலனாகிறது.

#### 2.5.11.4. பரிசில் பெற்றுவரும் பாணரின் நிலை

தொண்டைமான் இளந்திரையன்பால் சென்ற பாணர் சுற்றம் மிக்க பொருளைப் பரிசாகப் பெற்றதனால், தன்னுடைய வறுமைநிலை மாறி, தானும் பிறருக்குக் கொடுக்கும் வல்லமையுடன் திகழ்ந்தனர். ஒரு பாண்சுற்றம் பெரிய விற்கடம் மிக்க காட்டகத்தே ஆரவாரம் உண்டாகும்படி முகில் ஞெரேலென மழை பொழிந்தாற்போன்று தொன்றுதொட்டுப் பழம்பசியாலே வருந்தியது. அச்சுற்றத்தார் பிறர்க்குக் கொடுக்கக் கொடுக்கக் குறையாத அளவிறந்த செல்வத்தை அவ்வள்ளலால் வழங்கப்பெற்றனர். அப்பரிசிலோடு ஒப்பனை செய்யப்பட்ட குதிரைகளையும் யானைகளையும் வாரிக்கொண்டு அவ்வள்ளலின் ஊரினின்று இப்போது வந்தோம் எனக் கூறுகின்றனர். இதனைப்,

> "**பெருவறங் கூர்ந்த கானம் கல்லெனக்**

**கருவி வானம் துளிசொரிந் தாங்குப்**

**பழம்பசி கூர்ந்தவெம் இரும்பே ரொக்கலொடு**

**வழங்கத் தவாஅப் பெருவலி னெய்தி**

**வாலுளைப் புரவியொடு வயக்களிறு முந்துகொண்டு**

**யாமவ ணின்றும் வருதும்**'' (பெரும்பாண்.,வ.ள்: 23–28)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 48)

இதன்மூலம் பாணரின் ஆக்கமும் பரிசில் பெற்றதால் உண்டாகிய ஊக்கமும், மகிழ்ச்சியும் புலனாகிறது. அவர்கள் தான் பெற்ற பெருஞ்செல்வத்தைப் பிறருக்குக் கொடுக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கம் உடையவராக விளங்கியமையும் புலனாகிறது.

**2.5.11.5. மன்னனை வாழ்த்தும் பாங்கு**

பாணர் தம் வாடிய சுற்றத்தோடு தேடிச் செல்லும் புரவலர் வரையாது வழங்கிய பொருட்கொடையாலும், வயிறாறப் படைத்த ஊன் சோற்றுத் திரளை உண்ட களிப்பாலும் மனமகிழ்வு எய்தினர்.

தான் கூறுகின்றவற்றை உணரும் அறிவில்லாதார் மாட்டுத் தான் அறியாமைப் பட்டிருத்தலையும், தன்னை ஒத்த அறிஞர்மாட்டு நன்றாக அறிவுடையனாய்த் திகழ்ந்திருத்தலையும் உடையவன் நல்லியக்கோடன் என்று புகழுகின்றனர். பரிசிலரின் சிறப்பறிந்து அச்சிறப்பிற்குத் தக்க வழங்குதலையும், சிறப்பில்லா பரிசிலர்க்குக் கொடேன் என்று வரைந்து கொள்ளாது அவருக்குத்தக ஈதலையும் உடைய இயல்பினன் நல்லியக்கோடன் என்று புகழுகின்றனர். இதனை,

''**அறிவு மடம்படுதலும் அறிவு நன் குடைமையும்,**......

........................................

**பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த**'' (சிறுபாண்.,வ.ள்: 227–220)

எனும் வரிகளால், அறியமுடிகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 51)

**2.6. பக்தி இலக்கியங்களில் பாணர்**

சங்ககாலத்தில் வாழ்ந்த பாணர் பற்றிய தரவுகளைத், தொடர்ந்து பக்தி இலக்கியங்களிலும் பதிவுகள் காணப்படுகின்றன. பாணர் பக்திஇலக்கிய காலங்களில் இரந்துண்ணும் வாழ்வியலை பெற்றதாகக் காணப்படவில்லை. ஆயினும் அவர்கள் தங்களின் குலத்தொழிலான யாழிசைத்துப் பாடும் வழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். பக்தி இயக்க

காலங்களில் தமிழகத்துள் சைவம், வைணவம் என்னும் இருசமயக் கொள்கைகள் வேரூன்றி இருந்தன. எனவே சைவம், வைணம் என்னும் சயக்கொள்கைகளை வெளிப்படுத்துமாறும், இறைவனின் புகழை எடுத்து இயம்புவதாகவும் இப்பாணர் வாழ்க்கை அமைந்திருந்தன. அத்தகைய சைவ சமயத்துள் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் என்னும் சிவனடியார் குறிப்பிடப்படுவதைப் போல வைணவ சமயத்துள் பாணாழ்வார் என்னும் திருப்பாணாழ்வார் குறிக்கப்படுவதை அவ்வவ்இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

### 2.6.1. சைவசமய இலக்கியம் உணர்த்தும் பாணர்

சைவ சமயத்தின் சாரமாக விளங்குவோர் அறுபத்து மூன்று நாயன்மார்கள் ஆவர். அவர்களுள் ஒருவராகப் போற்றப்படுபவரே திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் என்பவர் ஆவார்.

#### 2.6.1.1. திருநீலகண்டர் - இருவர்: விளக்கம்

அறுபத்து மூன்று நாயன்மர்களின் சரிதத்தைப் போற்றுவது பெரியபுராணம் ஆகும். அதனுள் சுந்தரரே முதலாவதாக வைத்துப் போற்றப்படுகிறார். இவரை அடுத்து இரண்டாவதாகப் போற்றப்படுபவர் திருநீலகண்டநாயனார் என்பவர் ஆவார். ஆனால் இந்த நீலகண்டர் பாணர் மரபினர் அல்லர். இவர் தில்லையில் குயவர் குலத்திலே பிறந்தவர். அடியவர்களுக்குத் திருவோடு செய்து கொடுப்பதைப் பெரும்பேறாகக் கருதினார். இல்லறத்தில் ஈடுபட்டிருந்தவர். பின்னர் இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பட்டார் என்பதை பெரியபுராணம் விளக்குகிறது. (கீர்த்தி.,2014:25)

நாயன்மர்களுள் அறுபத்து ஒன்றாம் நாயன்மாராகப் போற்றப்படுவரே திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் ஆவார். இவர் பாணர் மரபினர். எனவே இவரை திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்று பெரியபுராணம் உரைக்கிறது. அதே வேளையில் முன்னவரைத், “திருநீலக்கண்டத்துக் குயவனார்க்கு அடியேன்” என்று சேக்கிழார் பேதம் காட்டி உரைத்தமையால் இவ்விருவரும் வேறுவேறானவர் ஆவர். இதன் வாயிலாக சைவ சமயத்துள் திருநீலகண்டர் என்னும் பெயருடைய இரண்டு அடியவர்கள் வாழ்ந்துள்ளனர் என்பது புலனாகிறது.

#### 2.6.1.2. ஆலய வாயிலில் நின்றுபாடிய பாணரின் இசைத்திறன்

திருநீலகண்டயாழ்ப்பாணர் சிவனின் மீது மிகுந்த பக்தி கொண்டவர். எனவே பல சிவத் தலங்களுக்கும் சென்று இறைவனைப் பாடினார். மதுரை ஆலவாய் பெருமான் ஆலய வாயிலில் நின்று பாடினார் திருநீலகண்டர். பாலையாய் நின்ற பதினான்கு வகையான பண்

பெறும்படிக் கருவியின் நரம்புகளை முறுக்கி பண்கள் பலவற்றுள்ளும், அக்காலத்துக்கு இசைந்த பண்ணிலே உள்ள நரம்புகளை கைவிரலின் அசைவினால் பலமுறையும் சோதித்து மீட்டினார். அவ்யாழில் நீண்ட கூந்தல் கொண்ட உமையம்மையை ஒருபாகம் கொண்ட இறைவனின் இசைப் பாட்டுக்களை யாழில் இடுவார். இதனை,

**"ஆலவாய் அமர்ந்தார் கோயில்**

**வாயிலை அடைந்து நின்று**

**பாலை ஏரெழு கோத்த**

**பண்ணில் கருவி வீக்கிக்**

**காலம் ஆதரித்த பண்ணின்**

**கைபல முறையும் ஆராய்ந்து**

**ஏலவார் குழலாள் பாகர்**

**பாணிகள் யாழில் இட்டார்**" (பெ.பு – 4221.,வ.ள்: 1-8)

எனும் வரிகள் விளக்குகின்றன. (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2006: 528) இதன்வழிப் பாணர் பண் வகையினையும் அதனைத் திருத்தமுற பாடும் இயல்பினையும் பெற்றிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### 2.6.1.3. பாணரைக் கோயிலுள் வரச்செய்தல்

பக்திஇயக்கக் காலச் சூழலில் சமூகத்தில் வருணப் பாகுபாடு நிலைபெற்றிருந்தது. அந்நான்கு வருணங்களில் நான்காம் வருணத்துள் ஒன்று பாணர் மரபு என்று குறிப்பிடப்படுகிறது. இப்பாண் மரபினர் கோயிலுள் நுழைய அக்காலத்தில் அனுமதி இல்லை. எனவேதான் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மதுரை ஆலவாய் அழகனின் ஆலய வாயிலில் நின்று பாடியுள்ளார். இதன்பொருட்டு இறைவன் சிவனடியார் அனைவரின் கனவிலும் தோன்றிப் பாணரைக் கோவிலுள் வரச்சொல்லிச் சென்றார். இதனை,

**"மற்றவர் கருவில் பாடல்**

**மதுரை நீடு ஆலவாயில்**

**கொற்றவன் திருவுள்ளத்துக்**

**கொண்டுதன் தொண்டர்க்கு எல்லாம்**

**அன்றைநாள் கனவில் ஏவ**

**அருட்பெறும் பாணனாரைத்**

**தெற்றினர் புரங்கள் செற்றார்**

**திருமுன்பு கொண்டு புக்கார்**'' (பெ.பு – 4222.,வ.ள்: 1-8)

எனும் வரிகள் விளக்குகின்றன. (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2006: 528) அக்காலச் சமூகம் வருணப்பாகுபாடு மலிந்த சமூகமாக விளங்கியுள்ளது.

**2.6.1.4. பாணருக்குப் பலகை கொடுக்கச் செய்தல்**

பாணர் இறைவனின் புகழைத் தன் யாழில் இசைத்துப் பாட, அதனைக் கேட்ட இறைவன் அசரீரி ஒலியாய் எழுந்து, பாணரின் பாடலின் இனிமையானது தரையில் யாழை வைத்துப் பாடுகின்றமையால், அதன் அதிர்வுகளால் பண்கெடுகிறது. எனவே பலகை இடுக! என்று கூறியதும், அதனை அங்குள்ள தொண்டர் நிறைவேற்றினர். இதனை,

''**அந்தரத்து எழுந்த ஓசை**

**அன்பினில் பாணர் பாடும்**

**சந்தயாழ் தரையில் சீதம்**

**தாக்கில் வீக்கு அழியும் என்று**

**சுந்தரப் பலகை முன்நீர்**

**இடும் எனத் தொண்டர் கிட்டார்**

**செந்தமிழ்ப் பாணனாரும்**

**திருவருள் பெற்றுச் சேர்ந்தார்**'' (பெ.பு – 4225.,வ.ள்: 1-8)

எனும் வரிகள் அறிவிக்கின்றன. (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2006: 530) பக்தி இயக்க காலத்தில் இறைவனே பாணரின் வாழ்வில் ஒளியேற்றினான் என்பதை அறியமுடிகிறது.

**2.6.1.5. வடதிசை வாசல் உருவாக்கிய இறைவன்**

இறைவன் மீது பற்று கொண்ட பாணர் திருவாரூர் சென்று அங்குள்ள இறைவனைக் கோயில் வாசலில் நின்று யாழிசைத்துப் பாடினார். இதனைக் கேட்ட இறைவன் பாணருக்காக வடதிசையில் ஒரு வாசலை உருவாக்கினார். அவ்வாயிலின் வழியாகவே பாணர் சென்று இறைவனை வணங்கினார். இதனைக்,

''**கோயில் வாயில் முன் அடைந்து**

**கூற்றம் செற்ற பெருந்திறலும்**

**தாயின் நல்ல பெருங்கருணை**

**அடியார்க்கு அளிக்கும் தண்ணளியார்**

**ஏயும் கருவியின் தொடுத்துஅங்கு**

**இட்டுப் பாடக்கேட்டு அங்கண்**

**வாயில் வேறு வடதிசையில்**

**வகுப்பப் புகுந்து வணங்கினார்**'' (பெ.பு – 4227.,வ.ள்: 1-8)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2006: 530-531) யாழ்ப்பாணர்க்கு இறைவன் செய்த அருளை இதன் வாயிலாக அறியமுடிகிறது.

**2.6.1.6. சம்பந்தரும் - பாணரும்**

சைவ சமயக் குரவர்களுள் முதன்மையாகப் போற்றப்படுபவர் திருஞானசம்பந்தர் ஆவார். அவரைக் காணவேண்டி திருநீலகண்ட யாழ்ப்பாணர், சீர்காழிக்குச் சென்றார். அங்கே ஞானசம்பந்தரைக் கண்டு அவருடன் இணைந்து சிவத்தொண்டு புரிந்தார். பின்னர் திருஞானசம்பந்தரின் பல பதிகங்களை யாழில் இசைத்துப் பாடி இறையருளைப் பெற்றார். பின்னர் திருஞானசம்பந்தரின் மணவிழா அன்று, திருநல்லூர்ப் பெருமணத்தின் போது அவருடனேயே இறைவனின் திருவடிகளை அடைந்தார். இதனை,

''**ஆழி ஆழும் திருத்தோணி**

………………………

**காழி நாடன் கவுணியர் கோண்**

**கமலபாதம் வணங்குதற்கு**

………………………

**வந்தார் சந்த இசைப் பாணர்**'' (பெ.பு – 4229.,வ.ள்: 1-8)

எனும் வரிகளாலும், (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2006: 531-532)

''**பானல் களத்தர் பெருமணத்தில்**

**உடனே பரமர்தாள் அடைந்தார்**'' (பெ.பு – 4230.,வ.ள்: 7-8)

எனும் வரிகளாலும் அறியமுடிகிறது. (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2006: 532)

சைவசமயத்து வளர்ச்சிக் காலத்தில் இத்திருநீலகண்ட யாழ்ப்பாணர் வாழ்ந்துள்ளார். அவரது காலத்தில், இறைவனால் பாணர் மரபினருக்கு வழங்கிய உரிமையும் வெளிப்படுகிறது. வருணப்பாகுபாடு மேலோங்கியிருந்த குலங்களுள் பாணர் மரபினரின் பெருமை பறைசாற்றப்பட்டமையும் அறியமுடிகிறது. இப்பாணர் திருஞானசம்பந்தர் காலத்து வாழ்ந்து

அவர் காலத்தே இறைவன் திருவடியும் சேர்ந்தார் என்பதும் அவரின் பக்திச் சிறப்பினை அறிய உதவும் சான்றாக அமைகின்றது.

### 2.6.2. வைணவ சமய இலக்கியம் உணர்த்தும் பாணர்

தமிழகத்தில் சைவசமய வளர்ச்சியினைப் போலவே வைணசமய வளர்ச்சியும் வீறுகொண்டு வளர்ந்தது. வைணவ சமய வளர்ச்சிக்குப் பெரிதும் வித்திட்டவர்கள் ஆழ்வார்களே ஆவர். கி.பி.ஆறாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு முடிய பன்னிரு ஆழ்வார்களின் காலமாக அமைகின்றது. ஆழ்வார்களின் வரவு வைணவ உலகின் மறுமலர்ச்சிக் காலமாக கருதப்படுகின்றது. (பாக்கியமேரி., 2008 : 330) இத்தகைய சூழலில் சைவசமயத்துள் வாழ்ந்த பாணர் போன்று வைணவ சமயத்துள்ளும் பாண்மரபினர் ஒருவர் காணப்படுகின்றார். அவர் திருப்பாணாழ்வார் என்று அழைக்கப் பெறுகின்றார். இவர் கி.பி. 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று கூறப்படுகிறது.

#### 2.6.2.1. பாணாழ்வார் பிறப்பும் வளர்ப்பும்

திருப்பாணாழ்வார், சோழ நாட்டிலுள்ள உறையூரில் கலியுகம், ஸ்ரீபராங்குசர் அவதராதி 243 துன்மதி வருடம், கார்த்திகை மாதத் திருவோணபட்ச துவிதியையில், புதன் கிழமையன்று ரோகிணி நட்சத்திரத்தில், திருமாலினது ஸ்ரீவத்ஸத்தின் அமிசராய் நெற்பயிரிடையே அவதரித்தார். இந்நாள் கி.பி.15.11.601 என்று திவான்பகதூர் சாமிக்கண்ணுப் பிள்ளையவர்களாலும், கி.பி.7.11.781 என்று மு. கோவிந்தசாமி அவர்களாலும் கணிக்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது. (தே. ந. ச. தேவராஜன்.(உ.ஆ).,2002: 827)

நெற்பயிரிடையே அவதரித்த திருப்பாணாழ்வார், உறையூரில் நாலாம் வருணத்தில், பாணர் குலத்தில் பிறந்த ஒருவரால் கண்டெடுக்கப்பட்டு வளர்க்கப்பட்டார். சிறுவயது முதலே அக்குழந்தைக்குத் தன்குல வழக்கமான யாழை மீட்டிப் பாடல் பாடுவதில் ஈடுபாடு உண்டாக்கிப் போதிய பயிற்சியும் தந்து ‘திருப்பாணர்’ என்று பெயரிலும் அழைத்து வரலாயினர். (தே. ந. ச. தேவராஜன்.(உ.ஆ).,2002: 827) பாணர் குலத்தவரால் வளர்க்கட்டவரே திருப்பாணர் என்பது புலனாகிறது.

#### 2.6.2.2. பாணாழ்வாரின் தாழ்வு மனப்பான்மை

பாணர் குலத்தினைச் சார்ந்தவராகிய திருப்பாணர் தம் தாழ்வு மனப்பான்மையால், திருவரங்கனைத் தரிசிக்க நினைத்தும், திருவரங்கத்தின் மண்ணைத் தனது காலால் மிதிக்கத் துணிவின்றி, தினமும் காவிரியின் தென்கரையில் நின்று, திருவரங்கக் கோயிலின் கோபுர

தரிசனத்தைக் கண்குளிரக்கண்டு அரங்கனின் பெருமையைப் பண்ணிசைத்துக் கேட்பவர்கள் அனைவரையும் தமது இசையால் மயக்கினார்.

**2.6.2.3. இறைவனின் கருணை பாணருக்குப் பெருமை**

சைவசமயத்து யாழ்ப்பாணரைப் போன்றே இப்பாணாழ்வாரும் இறைவனால் உய்வு பெறுகின்றார் என்பதை அவரின் வரலாறு உணர்த்துகிறது. காவிரிக் கரையில் நின்றுருகும் திருப்பாணரை உய்விக்கும் விதமாக இறைவன், லோகசாரங்கன் என்னும் அந்தணர் மூலம் அற்புதங்களை நிறைவேற்றுகிறான். ஒரு நாள் பாணர் காவிரிக் கரையில் நின்று பண்ணிசைத்துத் திருவரங்கனை எண்ணிப் பாடிக்கொண்டிருந்த வேளையில், லோகசாரங்க முனிவர் அங்கே பெருமானுக்குத் திருமஞ்சனத்திற்கு நீர் கொண்டு செல்ல வந்தார். அப்பொழுது அவர் வரும் வழியில் திருப்பாணர் தன்னை மறந்த நிலையில் பக்தியில் மூழ்கியிருந்தார். இதனால் கோபம் கொண்ட லோகசாரங்கன் பாணர் மீது கல்லை வீசினார். வீசிய கல் பாணரின் நெற்றியில் பட்டுக்காயம் ஏற்பட்டு உதிரம் கொட்டியது.

பாணரின் பெருமையை உலகறியச் செய்ய, பாணரின் வலியைத் தான் ஏற்றுக்கொண்டு பெருமான் அரங்கநாதன் தன்மேல் குருதி பெருகுமாறு செய்தார். உண்மைநிலை உணராத லோகசாங்கனின் கனவில் இறைவன் அன்றிரவு தோன்றி, தம்முடைய நல்லன்பராகிய ‘திருப்பாணரை’ இழிகுலத்தவர் என்று கருதாமல், முனிவரின் தோள்மீது சுமந்து தன்னுடைய திருமுன்பு கொண்டு வரும்படிச் கட்டளை இட்டார். (தே. ந. ச. தேவராஜன்.(உ.ஆ).,2002: 828–829) அதன்படியே திருப்பாணர் திருவரங்கனைக் கோயிலுள் சென்று கண்டு பத்து பாசுரங்கள் பாடினார். பின்பு அக்கணமே இறைவன் திருவடிகளில் இரண்டறக் கலந்தார். (தே. ந. ச. தேவராஜன்.(உ.ஆ).,2002: 830) பாணாழ்வார் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டதை இதன்வழி அறியமுடிகிறது.

**2.6.2.4. திருப்பாணரின் பாசுரம் உணர்த்தும் வாழ்த்து**

சங்ககாலப் பாணர் மரபினர் மன்னரையும், வள்ளல்களையும் வாழ்த்தியும், புகழ்ந்து பாடியும், பண்ணிசைத்தும் பொருட்செல்வத்தைப் பரிசாகப் பெற்றனர். அதுபோல திருப்பாணர் தம் பாசுரங்களால் திருவரங்கப் பெருமானை வாழ்த்தியும், தம்யாழில் பண்ணிசைத்தும் போற்றிப்பாடி அருட்செல்வத்தைப் பரிசாகப் பெற்றார். என்பதை,

**“அமலன் ஆதிப் பிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த**

**விமலன் விண்ணவர் கோன்விரை யார்பொழில் வேங்கடவன்”**

(பாசு.எ:1.,வ.ள்:1-2)

என்னும் வரிகளும், (எம். நாராயண வேலுப்பிள்ளை.(தெ.ஆ).,2000: 392-393)

''**உவந்த உள்ளத்தனா யுலக மரிந் தண்டமுற**

**நிவந்த நீள் முடியன் அன்று நேர்ந்த நிசாசரரை**'' (பாசு.எ: 2.,வ.ள்: 1-2)

என்னும் வரிகளும், (எம். நாராயண வேலுப்பிள்ளை.(தெ.ஆ).,2000: 393)

''**மந்தி பாய் வடவேங்கட மாமலை வானவர்கள்**

**சந்தி செய்ய நின்றான் அரங்கத் தரவின் அணையான்**'' (பாசு.எ: 3.,வ.ள்: 1-2)

என்னும் வரிகளும், (எம். நாராயண வேலுப்பிள்ளை.(தெ.ஆ).,2000: 393)

''**அண்டரண்ட பகிரண்டத் தொருமாநிலம் ஏழுமால்வரை, முற்றும்**

**உண்ட கண்டங்கண் பீரடியேனை யுய்யக் கொண்டதே**'' (பாசு.எ:6.,வ.ள்:3-4)

என்னும் வரிகளும், (எம். நாராயண வேலுப்பிள்ளை.(தெ.ஆ).,2000: 394)

''**ஆலமா மரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்**

**ஞாலமேழு முண்டாள், அரங்கத்து அரவின் அணையான்**''(பாசு.எ:9.,வ.ள்:1-2)

என்னும் வரிகளும், (எம். நாராயண வேலுப்பிள்ளை.(தெ.ஆ).,2000: 395)

''**கொண்டல் வண்ணைக் கோவலனாய் வெண்ணெய்**

**உண்டவாயன் என்உள்ளம் கவீர்ந்தானை,**

**அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக்**

**கண்ட கண்கள் மற்று ஒன்றினைக் காணாவே**'' (பாசு.எ: 10.,வ.ள்: 1-4)

என்னும் வரிகளும், உணர்த்துகின்றன. (எம். நாராயண வேலுப்பிள்ளை.(தெ.ஆ).,2000: 396) திருப்பாணாழ்வார் பாடிய பாசுரங்கள் யாவும் திருவரங்கப் பெருமானின் தோற்றப் பொலிவினையும், அருட்செயலையும் போற்றிப் புகழ்வதாக அமைந்துள்ளமையை இதன்மூலம் அறியமுடிகிறது.

**2.7. முடிவுரை**

சங்ககாலப் பாணரின் வாழ்க்கை நிலையைச் சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. இவ்இலக்கியங்கள் வாயிலாகப் பாணரின் செயல்பாடுகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் போன்றவற்றை அறியமுடிகிறது.

தொல்காப்பியமும் அதன்பின் எழுந்த பொருள் இலக்கண நூல்களும் பாணரைப்பற்றிய பதிவுகளை முன்வைக்கின்றன. இதனால் பாண்மரபினர் வாழ்ந்தமை புலனாகிறது. இப்பாணர் தலைவன் தலைவியரின் வாயில்களாகவும், கூற்றுகளாவும் விளங்குவதை இலக்கணங்கள் உணர்த்துகின்றன.

தலைவன் தலைவியரின் அகவாழ்வில் முக்கியஇடம் பிடிப்பவர்களாகப் பாணர் விளங்குவதைச் சங்கஇலக்கியங்களும் குறிப்பிடுகின்றன. இதன்மூலம் தலைவனுக்கும் தலைவிக்கும் பாணர் மிக்க நெருக்கமுடையவராகத் திகழ்ந்தமை புலப்படுகிறது.

அகஇலக்கியங்களில் பாணர் மக்களுடன் நெருங்கிப் பழகியவராக விளங்கியதுபோல், புறஇலக்கியங்கள் மன்னருக்கும் பாணருக்கும் உள்ள தொடர்பினை விளக்குகின்றன. பாணர் மன்னருடனும், வள்ளல்களுடனும் நல்ல நட்புடையவராக விளங்கினர்.

இந்நட்பின் காரணமாகத் தம்மைப் புரக்கின்ற வள்ளல்களின் வாழ்வில் ஏற்படும் இன்னல்களைக் களையவும் பாணர் முயற்சித்துள்ளனர் என்பதும் அறியப்படுகிறது.

காலப்போக்கில் பாண்மரபினர் அரசனை இறைவனாக எண்ணிய நிலைமாறி இறைவனைப் போற்றும் நிலைமைக்குத் தள்ளப்பட்டனர். காரணம், முடியாட்சியின் நாடுபிடிக்கும் கொள்கை, அதனால் போர், போரினால் பஞ்சம், பசி என்று நாட்டின்நிலை மாற மாற பாணரின் வறுமையைப் போக்க ஆளின்றியும், வழியின்றியும் போனது. ஆதலால் பாணர் இறைவனை எண்ணித் துதிப்பவர்களாகக் காணப்பட்டனர். இப்போக்கினைப் பக்தி இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

இலக்கண, இலக்கியங்களில் பாணரின் குழுவாழ்க்கைமுறை உணர்த்தப்பட்டது. காலமாற்றத்தின் விளைவால், பக்திஇயக்க காலம் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மற்றும் திருப்பாணாழ்வாரின் பக்திநெறியை புலப்படுத்துகிறது.

மன்னரின் அருளால் பாண்மரபினர் அக்காலத்தில் பொருளைப் பரிசாகப் பெற்றனர். பின்னர் இறைவனின் அருளால் அவர்கள் அருளைப் பரிசாகப் பெற்று, மீளாத் துயரிலிருந்து மீண்டு முக்தி பெற்றனர் எனப் பக்திஇலக்கிங்களால் அறியமுடிகிறது. எனினும், பாண்சமூகம் ஆண்டாண்டு காலமாக யாரேனும் ஒருவரைப் பொருளுக்காகவோ அல்லது அருளுக்காகவோ சார்ந்திருந்தனர் என்பது தெளிவாகிறது.

## இயல்: 3. பாணர் மரபின் உருவாக்கம்

### 3.0. முன்னுரை

மனிதகுலம் தோன்றிய பொழுது குழுக்களாக வாழ்ந்தான் என்று ஆய்வறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இம்மனித இனம் சிறு சிறு குழுக்களாக வாழ்ந்து வந்தமையே இனக்குழு வாழ்க்கைமுறை எனப்படுகிறது. இக்குழு வாழ்க்கை முறையில் தம்மை வழிநடத்திடும் ஒருவனையே அக்குழுவினர் தம் தலைவனாகக் கொண்டனர். அவனே இனக்குழுத் தலைவனாக விளங்கினான். அவனின் வழிகாட்டுதலின்படி அம்மக்கள்குழு செயல்பட்டது. இவர்கள் தம் வாழ்வின் தேவைகளுக்காக இடம்விட்டு இடம் பெயர்ந்து சென்றனர். அவ்வாறு இடம்பெயர்ந்து வேறு இடங்களுக்குச் சென்றபொழுதுதான் அங்கிருந்தவர்களால் தாக்கப்படுவதும், அவரவரின் இருப்பிடத்தைத் தக்கவைத்துக்கொள்ள முயற்சிப்பதும், காத்துக்கொள்வதுமாகப் போர் உருவானது. இத்தகைய மக்களினம் குழுவாக வாழ்ந்தமையையும், அம்மக்களினத்துள் பாண்மரபினர் உருவானதையும், அவர்களின் வாழ்க்கை நிலையையும் இவ்வியல் ஆராய்கின்றது.

### 3.1. இனக்குழுச் சமுதாயம் - விளக்கம்

மனிதஇனம் மண்ணில் தோன்றிய பின்னர், பரிணாம வளர்ச்சியால் உணவுக்காக வேட்டையாடவும், வேட்டையாடிய உணவினைப் பகிர்ந்து உண்ணவும் பழகியது. இவ்வளர்ச்சி நிலை மனித இனத்தைத் தேடலுக்கு இட்டுச்சென்றது. மனித இனத்தின் இத்தேடல் உணர்வே நாளடைவில் அவனின் பொருளுக்கான மற்றும் இடத்திற்கான உரிமையாக மாறின. இத்தகையத் தேடலுக்கு ஆட்பட்ட மனித இனம் சிறு சிறு குழுக்களாகப் பிரிந்து சென்றன. அக்குழுக்கள் தாம் சென்ற இடத்தின் வாழ்வாதாரத்தை மையமாகக்கொண்டு வாழத் தலைப்பட்டன. இவ்வாறு வாழ்ந்த மக்களினத் தொகுதியை இனக்குழுச் சமுதாயம் என்று வழங்கலாயினர்.

### 3.2. சங்காலச் சமூக அமைப்பில் இனக்குழு

இனக்குழுச் சமூகத்தினரின் வாழ்கை முறையானது வேட்டையாடி உணவு சேகரித்தலும், அதனைப் பங்கிட்டு உண்பதும் ஆகும். இத்தகைய வாழ்க்கை முறையைச் சங்ககால மக்களிடமும் காணமுடிகிறது. சங்ககாலத்திலும் மக்கள் வேட்டையாடி உணவு சேகரிக்கும் வழக்கம் உள்ளவர்களாகவே காணப்படுகின்றனர். மேலும் சங்ககாலத்தில் இத்தகு

வாழ்க்கை முறையை வேட்டுவர், கானவர், குறவர், எயினர் முதலான இனக்குழுவினர் கொண்டிருந்தனர். இத்தகைய இனக்குழுவினரை மூன்று வகையினராக மானிடவியலாளர்கள்

1. வேட்டையாடி உணவு சேகரித்தவர்கள் என்றும்,

2. வேட்டையாடி உணவு உற்பத்தி செய்தவர்கள் என்றும்,

3. வேட்டையாடி ஆநிரை கவர்ந்தவர்கள் என்றும் குறிப்பிடுகின்றனர். (பக்தவத்சல பாரதி., 2014: 56) வேட்டையாடி உணவு சேகரித்தவர்களை வேடர், பழையர் என்று அழைக்கப்பட்டனர். பழையர் குடிப்பெண்டிர் காட்டில் கிடைத்த பல்வேறு பூக்களைச் சேகரித்து அவற்றை மூங்கிற் குழாய்களில் வைத்துக் குன்றகச் சிறுகுடிகளின் தெருக்களில் சென்று பண்டமாற்றம் செய்துள்ளனர் என்பதைப்,

**"பைங்குழைத் தழையர் மகளிர்,**
**குணதிரள் நீர் அமை கடிப்பின் தொகுத்து**
**குன்றகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகும்**
***சீறூர் நாடு*"** (அகம்.பா.எ: 331.,வ.எ்: 5-8)

என்னும் வரிகள் மூலம் அறியமுடிகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 70-71) வேட்டையாடி உணவு சேகரித்த சமூகத்தைத் தொடர்ந்து மனித இனம் வேட்டையாடி உணவு உற்பத்தி செய்யும் இரண்டாம்கட்ட நிலைக்கு வளர்ச்சி பெற்றது. இத்தகைய வேடர்கள் காணக்குறவர், குன்றக்குறவர், புனக்குறவன், பல்கிளைக் குறவர், மலைஉறை குறவர், குடிக்குறவர், கானவன், சிறுகுடிக் கானவன், புனவன், நாடன், குன்றுவர் என்று பலவாறு அழைக்கப்பட்டனர். இவர்கள் மலைநிலத்தைப் பண்படுத்தியும், சமன்படுத்தியும் விவசாயம் செய்தனர். ஆயினும் இவர்கள் வேட்டைத் தொழிலையும் கைவிடவில்லை. இந்த வேட்டையானது உணவுக்கான வேட்டை என்ற நிலையிலிருந்து மாறி விவசாயத்தையும் அதன் உற்பத்திப் பொருட்களைக் காக்கும் பொருட்டுச் செய்த வேட்டை என்னுமளவில் நடைபெற்றன. சங்ககாலச் சமூக அமைப்பில் இத்தகைய இனக்குழுக்களை அடுத்துப் பின்வந்தோர் வேட்டையாடியும், ஆநிரை கவர்ந்தும், வணிகச் சாத்துக்களைக் கொள்ளையிட்டும் வாழ்ந்தனர். மேலும் இவர்கள் எயினர், ஆறலைக் கள்வர், மழவர், மறவர், வாள்குடி மறவர் என்றெல்லாம் இனங்காணப்பட்டனர். (பக்தவத்சலபாரதி.,2014: 56) சங்ககால மக்களின் வாழ்க்கைமுறையிலிருந்து அவர்கள் இனக்குழுச் சமுதாயத்தினர் என்பது புலனாகிறது.

### 3.3. இனக்குழுச் சமுதாயத்தின் தலையாய பண்பு

இனக்குழுச் சமுதாயத்தின் முக்கியத்தொழில் வேட்டையாடுதல் ஆகும். இனக்குழுச் சமூகத்தினர் வேட்டையாடித் தன் வாழ்வாதாரத்தை அமைத்துக் கொண்டனர். அவ்வாறு வேட்டையாடிக் கொணர்ந்த உணவினை அக்குழுவில் உள்ளோர் அனைவரும் பங்கிட்டு உண்டனர். இதனைக்,

**"கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை**

**தேகம்கமழ் கதுப்பின் கொடிச்சி கிழங் கொடு**

**காந்தன்அம் சிறுகுடிப் பகுக்கும்**" (நற்.பா.எ: 85.,வ.எ்: 8-10)

எனும் வரிகள், கூறுகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 107) கானவன் வேட்டையாடிய முள்ளம்பன்றியின் இறைச்சியைக் கொடிச்சி தம் சிறுகுடியினருக்கு மகிழ்ச்சியுடன் பகுத்துக் கொடுத்துள்ளாள். இதன்வாயிலாக, வேட்டைத் தொழிலும், பொதுவில் உண்பதும், பாதீடு, பண்டமாற்றம் போன்றவை இனக்குழுக்களின் தலையாய பண்புகளாக விளங்குகின்றமையை அறியமுடிகிறது.

#### 3.3.1. பகுத்துண்ணுதலும், பாதீடு செய்தலும்

முல்லைநிலைத் தலைவி ஒருத்தி வீட்டில் இருந்த குறைந்த அளவுடைய திணையரிசியைச் சோறு சமைத்தாள். ஆனால் அதை உண்பதற்குக் காத்திருந்தோர் மிகப் பரவலாக இருந்தார்கள். இருந்தாலும் அனைவரையும் வீட்டு முற்றத்தில் இருந்த பந்தலின் கீழ் வரிசையாக உட்கார வைத்து சமைத்த உணவை அனைவருக்கும் முறையாகத் தந்து உண்ணச் செய்தாள். இதனை,

"..................................**உள்ளது**

**தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்**

**நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்**

**இற்பொலி மகடூ**" (புறம்.பா.எ: 331.,வ.எ்: 6-9)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 259) இம்முறை அக்கால மக்களின் பகுத்துண்ணும் வாழ்கைமுறையை குறிக்கிறது. இத்தகைய பகுத்துண்ணும் முறையால் சங்ககால மக்களினத்தை இனக்குழு மக்களினம் எனலாம். கானவர்கள் வேட்டையில் கொண்டுவந்த ஆண்பன்றியை குறிஞ்சிநில மனையோள் தன்குடிமுறைக்குப் பகுத்துக்கொடுத்தாள். இதனைக்,

"..........................**கானவன்**

**வில்லில் தந்த வெண்கோட்டு ஏற்றைப்**

**புனையிருங் கதுப்பின் மனையோள் கெண்டிக்**

**குடிமுறை பகுக்கும்**......" (நற்.,பா.எ: 336.,வ.ள்: 3-6)

எனும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 414) பண்டைய குறிஞ்சி, முல்லைநில மக்கள் கிடைக்கும் பொருள் எதுவாயினும் அவற்றைப் பாதீடு செய்துகொள்ளும் வழக்கம் உடையவராக வாழ்ந்துள்ளனர் என்பது புலனாகிறது.

### 3.3.2. பண்டமாற்றம் செய்தல்

பண்டைச்சமூக மக்கள் தாம் வேட்டையாடிய பொருளானாலும், உற்பத்தி செய்த பொருளானாலும், கிடைத்த பொருளானாலும் அவற்றைப் பிற நில மக்களிடம் பண்டமாற்றம் செய்துள்ளனர். இவ்வாறு பண்டமாற்றம் செய்யக் காரணம், அதன்மூலம் உணவு உற்பத்தியை பெருக்க முடியும் என்று நம்பினர் சங்கச்சமூகத்தினர். எனவே தம்மிடம் இருக்கின்ற பொருளைக் கொடுத்துத் தமக்கு வேண்டிய பொருளைப் பெற்றுக்கொண்டு வாழ்ந்தனர். இதனைக்,

"**கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்**

**மான்றசை சொரிந்த வட்டியு மாய்மகள்**

**தயிர்கொடு வந்த தசும்பு நிறைய**

**ஏரின் வாழ்நர் பேரி லரிவையர்**

**குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்**

**முகந்தனர் கொடுப்ப வுகந்தனர் பெயரும்**" (புறம்.பா.எ: 33.,வ.ள்: 1-6)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 92-93) காணவர் வேட்டுவர் கொண்டுவந்த மானிறைச்சியைப் பெற்றுக்கொண்டு உழவர் மகளிர் அதற்குப் பதிலாக வெண்ணெல் கொடுத்துள்ளனர். இதுபோலவே பதிற்றுப்பத்தின் 30ம் பாடல், தொலைவில் வேட்டுவர் வேட்டையாடிய ஆமான் ஊனினையும், யானையின் தந்தத்தையும் கொடுத்துக் கடைத்தெருவில் கள்ளுண்டு களித்தனர் என்பதை உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 123-132) அதுபோல மலையுச்சியில் கிடைக்கும் தேனையும் நிலத்தில் விளைந்து கிடக்கும் கிழங்குகளையும் அகழ்ந்து அவற்றை நெய்தல் நில மக்களிடம் கொடுத்துப் பதிலியாக மீனையும் மதுவையும் பெற்று மகிழ்ந்தனர் என்பதைப்

பொருநராற்றுப்படையின் 214-215 பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 98) பகுத்துண்ணுதலும், பண்டமாற்று முறையில் பொருளைப் பெறுதலும் எல்லா வேட்டைச் சமூகங்களில் காணப்படுகின்ற பொதுமைப்பண்பு என்பதை அறியமுடிகிறது. மேலும்,

"**முளவுமாத் தொலைச்சிய முழுச்சொல் ஆடவர்**" (புறம்.பா.எ: 325.,வ: 6)

எனும் வரியானது சுட்டுகிறது. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1951: 246) வேட்டையில் கிடைத்த உடும்பின் இறைச்சியைக் குடியிருப்பில் உள்ள குடியினர் அனைவரும் கூறுபோட்டுப் பகிர்ந்து கொண்டனர். அம்மக்கள் தாம் வேட்டையாடிய உணவினைப் பகிர்ந்து உண்பதற்கென்றே சில மன்றங்களும் அச்சமூகத்தில் இருந்துள்ளன. இதனைப்,

"**புலம்பு கூட்டுண்ணும் புல்லென்மன்றத்து**" (நற்.பா.எ: 33.,வ: 3)

எனும் வரியானது உணர்த்திச் செல்கின்றது. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 43)

இத்தகையக் குழுவாழ்க்கை முறையைச் சங்ககால மக்கள் வாழ்ந்தனர் என்பதும், அவர்கள் வேட்டைத் தொழிலையே முதன்மையாகக் கொண்டு தங்கள் வாழ்வாதாரத்தை வளப்படுத்தினர். மேலும் அவர்கள் பகிர்ந்துண்ணும் வழக்கம் உடையவர்களாகவும், பண்டமாற்று முறையில் பொருட்களைப் பெற்றும் வாழ்ந்துள்ளனர். இதன்மூலம் சங்ககால மக்களின் வாழ்க்கை முறையானது இனக்குழு வாழ்க்கை முறையே என்று கூறுமாறு அமைகின்றது.

### 3.4. இனக்குழுச் சமுதாயத்தின் வழிபாட்டுமுறை

இனக்குழு மக்களின் வாழ்க்கைமுறையில், இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கங்களில் சிற்சில மாறுபாடுகள் காணப்பட்டாலும், மூதாதையர்கள் மீதுகொண்ட மதிப்பும், மரியாதையும் குறையாது காணக்கிடைக்கின்றது. வேந்தர் முடியாட்சிச் சமூக உருவாக்கத்தின் தோற்றுவாயாக அமைந்த இனக்குழுச் சமூகங்கள் முற்றிலும் அழிந்துவிடவில்லை. (ராஜ்கௌதமன்., 2006:109) ஏனென்றால், இனக்குழு மக்களிடம் காணப்பட்ட பழக்கவழக்கங்கள் பின்னர் தோன்றிய, மன்னர்களின் காலங்களிலும் காணப்பட்டன. போர்க்காலங்களில் வீரர்களின் வீரமணத்தை அடுத்து அவர்களை மதிக்கும்படியாக அவர்களுக்கு நடுகற்கள் எடுத்து வழிபடலாயினர். இவ்வழக்கமானது இனக்குழுச் சமூகத்தின் எச்சமாகும். இத்தகைய வழிபாட்டு முறைகளுள் நடுகல்வழிபாடு, பதுக்கைமுறை, ஈமத்தாழியில் அடக்கம் செய்யும்முறை, இனக்குழுத் தலைவன் இறந்தால் அவனுடன் சேர்ந்து அவனது உறவினர்களும் அடக்கமாக விரும்புதல் போன்றவையும் அடங்கும்.

### 3.4.1. நடுகல் வழிபாடு

நடுகல் வழிபாடு என்பது குறிஞ்சி மற்றும் முல்லை நிலப்பகுதிகளாகிய மலை, காடு சார்ந்த பகுதிகளில் நிகழ்ந்ததாகச் சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. ஏனெனில், பெரும்பாலும் வெட்சி, கரந்தைப் போர்களில் வீரமரணம் எய்திய வேடர் (அல்லது) வீரர்களுக்கே நடுகல் எடுத்து வழிபடும் வழக்கம் ஏற்பட்டதாகப் பாடல்கள் வழியே உணர்த்துகின்றன. இதனை,

"**அடலங் துப்பின்**………………

**குரவே தளவேகுருந்தே முல்லையென்**

……………………………………

……………………………………

**கல்லே பரவி னல்லது**

**நெல்லுடுத்துப் பரவுங் கடவுளு மாலவே**" (புறம்.பா.எ: 335.,வ.எ்: 9-12)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.,1957: 268) யானையால் விழுப்புண்பட்டு இறக்கின்ற வீரனுக்கு நடுகல் எடுத்து, அதில் அவ்விரனுடைய பெயரும் வீரச்சிறப்பும் பொறித்து அதனை வழிபடுதலன்றி, வழிபடும் கடவுள் வேறு இல்லை என்று நம்பினர். இந்நம்பிக்கையின் வழி இனக்குழுச் சமூகத்தினரின் நடுகல் வழிபாடு பற்றி அறியமுடிவதோடு, நடுகல் வழிபாடு என்பது ஆதிசமூங்களில் மனிதர்கள் இறந்தோரைக் கவனமாக, அடக்கம் செய்த முறைமையையும் உணரமுடிகிறது.

### 3.4.2. பதுக்கைமுறை

இனக்குழுவினரின் நடுகல் வழிபாடு போலவே பதுக்கை என்பதும் முன்னோரை அடக்கம் செய்யும் மற்றொரு முறையாகும். இதில், காட்டுப் பாதைகளில் பயணம் செய்தவர்களைக் குறிபார்த்து அம்பெய்துக் கொன்ற வேடர்கள் வழியோரத்தில் இறந்தோரைக் கிடத்தி, அவர்கள் மீது பருக்கைக் கற்களை அடுக்கி (வட்டவடிவில்) அமைத்த அடக்கத்தைப் புலவர்கள் பதுக்கை என்று அழைத்தனர். இதுவே இனக்குழுச் சமூகத்தினரின் இறந்தோரை அடக்கம் செய்யும் பதுக்கை முறையாகும். (ராஜ்கௌதமன்.,2006: 106) இதனைப்,

"**பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி**" (புறம்.பா.எ: 264.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், குறிப்பிடுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 134) இறந்தோரை பதுக்கை முறையில அடக்கம் செய்து அதில், அவரின் பெயர் பொறிக்கப் பெற்று அதற்கு மயிற்பீலியுடன் அழகிய மலர்களைத் தொகுத்துக்கட்டிய பூங்கொத்தினைச் சார்த்தி வழிபட்ட முறையினை விளக்குகிறது. 'தாழ்வயின் அடைத்தல்' (cist burial) என்பது நடுகல்லுக்கு முந்திய (menhir) பதுக்கை (stone circle) என்று கூறுவதன் வாயிலாகப் பதுக்கைமுறை என்பது இனக்குழுக்களின் செயல்முறைகளில் காலத்தால் முற்பட்டது என்பதையும் அறியமுடிகிறது. (ராஜ்கௌதமன்.,2006: 106) சங்ககால மக்கள் முன்னோர்களின் இறுதிக்கடனைப் பெருமையுறச் செய்தமை புலனாகிறது.

### 3.4.3. ஈமத்தாழி முறை

ஈமத்தாழி என்பது இறந்தோரை தாழியில் இட்டுப் புதைக்கின்ற ஒரு முறையாகும். இத்தகைய முறைக்கு இனக்குழுச் சமூகத்தினர் மிகுந்த முக்கியத்துவம் அளித்துள்ளனர். இதனைக்,

"**கலம் செய் கோவே! கலம் செய் கோவே!**" (புறம்.பா.எ: 228.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 63) தன்னுடைய இனக்குழுத் தலைவன் இறந்துபட்டமையால், மண்பானை செய்யும் குயவனிடம் இறந்த மன்னனை இட்டு அடக்கம் செய்யப் பெரிய தாழி வனையுமாறு இரவலர் வேண்டுகின்றனர். இனக்குழுவினர் தங்கள் முன்னோர் இறக்கின்ற வேளையில் அவர்களை மிகுந்த மதிப்புடன் தாழியில் இட்டு அடக்கம் செய்துள்ளனர். மேலும் இறந்த இனக்குழுத் தலைவன் உடலோடு தங்களது உடல்களையும் சேர்த்து அடக்கம் செய்யுமாறு ஈமத்தாழியை அகன்றதாக வனையுமாறு இரவலர்கள் கேட்கின்றனர். (ராஜ்கௌதமன்.,2006: 106-107) இது அக்கால இனக்குழுச் சமூகத்தினர், மூதாதையர் மீது கொண்ட அன்பும், மதிப்பும், அவர்களின் அளவற்ற நற்பண்பினை வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

### 3.4.4. பிற வழக்கங்கள்

தாழியிலிட்டு மூடியால் கவித்த ஈம வழக்கமும், குழியிலிட்டுக் கற்களால் மூடிய வழக்கமும், இடுகாட்டில் இரைந்த வழக்கமும் காணப்படுவது ஒருபுறமிருக்க, ஈமப்புறங்காட்டில், இறந்த வீரனைக் 'கால்கழிகட்டில்' எனும் பாடையில் கிடத்தி, 'தூவெள்ளறுவை' போத்தி அடக்கம் செய்யும் வழக்கம் உடையவராகவும் விளங்கினர். இதனை,

"**வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போலத்**" (புறம்.,பா.எ: 286.,வ: 1)

எனும் வரி உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 173) அதுபோல இறந்த மன்னன் சடலத்தைக் கிடத்தி, அது உண்பதற்காக உப்பில்லா ‘அவிப்புழுக்கல்’ எனும் உணவை இழிபிறப்பாளர் பின்பக்கம் பார்க்காமல் படைக்கும் வழக்கத்தை அக்கால இனக்குழுச் சமூகத்தினர் பின்பற்றியுள்ளனர். இதனை,

“**இருங்கட் லுடுத்தவிப் பெருங்கண் மாநிலம்**” (புறம்.பா.எ: 363.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலால் அறியமுடிகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 330)

இறந்தோரை அடக்கம் செய்வதும், இனக்குழுச் சடங்குகளில் துடி, கிணை, தடாரி முதலிய பறைக்கருவிளை முழக்கி மனவலிமையை உண்டாக்கியதும் தொல்சமூக அமைப்பில் இன்றியமையாத கௌரவமான வழக்கங்களாக இருந்துள்ளன. (ராஜ்கௌதமன்.,2006: 108-109) குழுச்சமூகங்களில் நிலவிய இனக்குழு வாழ்விற்கு இன்றியமையாத ‘பாதீடு’, பகிர்ந்துண்ணல் (sharing of food) என்ற வழக்கம் படிப்படியாக நிலக்கிழமை பூண்ட வேளாண் சமூகத்தின் ஈகை, பரிசில் (தானம்) என்று மாறியது. மேலும் மன்னர், வேந்தர்களைக் தேடி அலைந்த பாணர், புலவர் முதலானோர் இவர்களைப் புகழ்ந்தபோது, போர், வீரம் என்பவற்றுக்கு இணையாக அவர்களது செல்வம், ஈகை ஆகியவற்றைப் புகழ்ந்தார்கள். ‘செல்வத்துப் பயனே ஈதல்’, ‘ஈதல் இசைபட வாழ்தல்’ என்ற புதிய பெறுமதிகளை மன்னர்களிடம் வலியுறுத்தினார்கள். ‘ஓம்பா ஈகை’, ‘வரையா ஈகை’, ‘கொடைமடம்’ ‘வரிசையறிதல்’ என்றும் புகழ்ந்து பாடினார்கள்.

இனக்குழு மக்களின் குழுவாழ்கை நிலையின் மதிப்பும், பொருளாதார உயர்வும் அனைவராலும் மதிப்புமிக்கதாகப் போற்றப்பட்டது. (ராஜ்கௌதமன்.,2006: 113-114) அதுவே வேளாண்சமூகப் பொருளாதார வளர்ச்சி நிலையை நிலம் கவரும் வேந்தர்களின் எண்ணத்திற்கு வழிகோலியது. இதனால், மூவேந்தர் நெய்தல் நிலப்பகுதியையும் மருத நிலப்பகுதியையும் அடிப்படையாய்க் கொண்டு ஆளத்தொடங்கினர். மேலும் இயற்கை வளம் மிகுந்த மலைப்பகுதிகளும் இவர்களால் கவரப்பட்டன. பொருளாதரப் பெருக்கத்திற்கு அடிப்படையாய் அமையும் நிலப்பகுதிகள் எல்லாம் இவர்களின் ஆளுகைக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. “வேந்தன் மேய தீம்புனல் உலகமும்” (தொல்.பொருள்.அகத்.நூ.எ: 5.,வ: 1) எனத் தொல்காப்பியர் சுட்டியதைப்போல இவர்கள் தங்களை வேந்தர் எனக் குறிப்பிட்டுக் கொண்டது மருதநிலத் தலைவர்கள் என்பதன் அடிப்படையிலேயே ஆகும்.

இம்மருதநிலத் தலைவர்கள் தங்களை வேந்தர் என்று கருதினர். (பெ. மாதையன்.,2004: 21) இதனை இனக்குழுச் சமூகத்தின் எச்சங்களாக ஏற்கமுடிகிறது.

**3.5. இனக்குழுத் தலைவர்கள்- சிற்றூர் மன்னராதல்**

"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று இவ்வுலகத்து இயற்கை'' (புறம்-76) எனும் இவ்வரிகள் (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 193) சார்லஸ் டார்வினுடைய உயிர்களின் பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டினை நினைவூட்டுகின்றது. ஏனென்றால், இனக்குழுச் சமூகத்தில் தங்களை வழிநடத்துவோரைத் தலைவர்களாக ஏற்றுக்கொண்டுள்ளனர். இத்தலைவர்களே நாளடைவில் சீறூர் மன்னராக உயர்த்தப்பட்டுள்ளனர். மேலும் ஆரம்பகால வேடர்களின் இனக்குழுவுக்குள் இனக்கடமையாக இருந்த ஒரு வழக்கம், வேந்தரின் நிலக்கிழமை நாகரிகத்தில் பொருள் உள்ளவன் இல்லாதவனுக்கு வழங்கும் 'ஈகை'யாக மாற்றம் அடைந்தது. ஏனெனில், வேடனில் தொடங்கி வீரன், மறவன், நெடுந்தகை, சீறூர்மன்னன், புன்புலத் தலைவன், வேளிர், வள்ளல் எனப் படிப்படியாக நிலக்கிழமை முறையை நோக்கி வளர்ந்து இறுதியில் நானில தலைமைபூண்டு 'வெண்குடை நிழற்றிய'' வேந்தரின் ஒருமை அரசாட்சி முறையாக நிலைபெற்ற சமூக வரலாற்றை ஒருவாறு அனுமானிக்கலாம். (ராஜ்கௌதமன்.,2006: 102)

இதன்வழி இனக்குழுச் சமூகத்தின் எச்சத்தை அறியலாம். இத்கைய வேடர் இனக்குழுச் சமூகளிலிருந்து மட்டுமல்ல மலைப்பகுதிகளில் வாழ்ந்த வேட்டை - விவசாய இனக்குழுக்களிலிருந்தும் சிறு சிறு வேடர் தலைவர்களும் மலைநாட்டு மன்னர்களும் உருவானர்கள். (ராஜ்கௌதமன்.,2006: 103) இங்ஙனம் இனக்குழுத் தலைவர்களே சிற்றூர்களின் மன்னர்களாக மதிக்கப்பட்டனர் என்பதை அறியமுடிகிறது

**3.5.1. நள்ளி**

நள்ளி தனது இனக்குழுச்சமூக வாழ்வின் வழக்கப்படி வல்வில் வேடனாகக் காடுகளில் தொடர்ந்து மான் வேட்டையாடினான். காட்டில் எதிர்ப்பட்ட இரவலர் கூட்டத்தின் பசி போக்கியதை ஒரு புலவன் பாடியுள்ளான். தன்னோடு வேட்டையாடி வந்த இளையோர் வழி தப்பிய போது எதிர்வந்த இரவலர்களின் பசிதீர்க்க மான் கறியை விரைவாய்ச் சுட்டுத் தந்தான். பின்னும் 'பெறுதற்கரிய வீறுகால் நன்கலம் பிறிது ஒன்றில்லை காடு நட்டேம் என மார்பில் பூண்ட வயங்குகாழ் ஆரம் மடைசெறி முன்கைக் கடகமொடு ஈத்தனன், எனும் புறம்-

150ம் பாடலால் வேட்டைக்குழுத் தலைவன் ஆரமும் கடகமும் பூண்ட சிற்றூர் மன்னனாகக் காட்டு நாட்டில் உருவான சமூகப்படிநிலையை அறியமுடிகிறது. (ராஜ்கௌதமன்.,2006: 104)

### 3.5.2. வல்வில் ஓரி

நள்ளியைப் போலவே வல்வில் ஓரியும் கொல்லிமலைக் கிழவனாக உருவெடுத்த ஒரு வேட்டைக்குழுத் தலைவனே ஆவான். இதனைக்,

**"கொலைவன் யார்கொலிலா! கோலைவன் மற்றிவன்**

**விலைவன் போலான் வெறுக்கைநன்குடையன்**

..................................................

..........................**பயமலைக் கிழவன்**

**ஓரிகொல் கொல்லோ"** (புறம்.பா.எ: 152.,வ.ள்: 8-12)

எனும் இவ்வரிகள், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 321) வன்பரணர் கொல்லிமலையைச் சார்ந்த சுரத்திடத்தே பாண் சுற்றத்தோடு சென்று கொண்டிருக்கையில், வேட்டையின் காரணமாக அங்கு வந்திருந்த வல்வில் ஓரியைக் கண்டு பரிசில் பெற்றனர். ஓரி தன் வேட்டையின் போது, எய்த அம்பானது யானையைத் தாக்கிப் பின் புலியின் அகன்ற வாயினுள் புகுந்து ஊடுருவிச் சென்று கொன்று, வழியில் நின்ற கலைமானை மடித்து, அண்மையிலிருந்த காட்டுப் பன்றியை வீழ்த்தி அதன் அயலிருந்த புற்றில் கிடந்த உடும்பின் உடலில் தைப்புண்டு வீழ்ந்தது. மேலும், இதனைக்கண்ட வன்பரணர் இத்தனைச் சிறப்பமைந்த வில்லாளனாகிய இவன் ஒரு செல்வத் தோன்றலாகத்தான் இருக்கக்கூடும் என எண்ணித் தன் பாண் சுற்றத்துடனே அவனை வணங்கித் தலைவன் திருமுன் புகழ்ந்து பாடினர். அவ்வாறு வந்த இரவலருக்குத் தானெய்த மானின் தசையையும் மதுவையும் தன் மலையிற் கிடைக்கும் பொன்னையும் தந்து சிறப்பித்து அனுப்பினான் என்று உணர்த்துகின்றன. இதன்மூலம் வல்வில் ஓரி வேட்டையாடுதலைப் பொழுதுபோக்காவும் விளையாட்டாகவும் செய்துள்ளானே அன்றி, அவன் அதனைக்கொண்டு வாழ்வாதாரத்தைத் தேடியவனாகக் காணப்படவில்லை. எனவே வல்வில் ஓரி வாரி வழங்கிய வள்ளலாகக் கருதப்பட்டாலும் அவன் வேட்டைச் சமூகத்தினனே என்பது புலப்படுகிறது.

### 3.5.3. காரி

கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகக் கருதப்படுபவன் காரி. இக்காரியின்

புதல்வர்களை கிள்ளி வளவன் கொல்ல முற்பட்டதைக் கண்ட கோவூர்கிழார் பாடுகையில், “தமது பகுத்துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்” என்று குறிப்பிடுகிறார். (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 125) தம்முடைய பொருளை பகுத்துண்ணும் குளிர்ந்த நிழலை உடையவராய் வாழ்வாராது மரபினை உடையவன் காரி. காரியின் பகுத்துண்ணும் பண்பினைக்கொண்டு இவன் இனக்குழுச் சமூகத்தின் எச்சமாக விளங்குபவன் எனலாம். இவர்களைப் போலவே கீரஞ்சாத்தான் என்பனும் இனக்குழுத் தலைவனாக இருந்து பின் சிறூர் மன்னனாகப் போற்றப்பட்டுள்ளான். காரி தன் வேடர் வழக்கப்படி ஆநிரை கவரும் கொள்ளைப் போரில் இறந்து நடுகல்லாகியதையும், அவன் மனைவி கலன்நீக்கி, தலைமுடி மழித்துக் கைம்மை ஏற்றாள் என்பதையும்,

**“நிரையி வட்டந்து நடுகல்லாகிய**

**வேண்வேல் விடலையின்மையிற் புலம்பிக்**

**கொய்ம் மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய**

**கழிகல மகடூஉப் போல**

**புல்லென் றனையாற் பல்லணி யிழந்தே** (புறம்.பா.எ: 261.,வ.எ்: 15-19)

எனும் இவ்வரிகள் உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 128) இனக்குழுத் தலைவர்களே பின்னாட்களில், சிற்றூர் மன்னராக வளர்ச்சி அடைந்துள்ளனர். இதனை மெய்ப்பிக்கும் வகையில், மூதின் முல்லை, வல்லாண் முல்லை ஆகியன சீறூர் மன்னர்ச் சமுதாயம் சார்ந்தனவாகவே இருப்பதைப்போல வெட்சி கரந்தைத் திணைப் பாடல்களும் இச்சமுதாயம் சார்ந்தனவாகவே உள்ளன. திணை, துறை அமைப்பும் கூட இனக்குழுத் தலைவர், வேர்தர், குறுநில மன்னர் போன்றோரைச் சுட்டிகாட்டும் வகையில் வகைப்படுத்தவே பாடியுள்ளனர். (பெ. மாதையின்.,2004: 27) ஏனெனில் சமுதாய இயல்புக்கு ஏற்பத் தலைமை மாந்தர்களும் வேறுபட்டு இருந்தனர். குறிப்பிட்ட நிலப்பகுதி, அதற்கான தலைமை எனும் நிலைமாறி அரசு எனும் அமைப்பு உருவாகத் தலைப்பட்ட நிலையில், நானிலப் பகுதிகளையும் உள்ளிட்ட பிரதேச அமைப்பு உருவானதே இதற்குக் காரணமாகின்றது. (பெ. மாதையின்.,2004: 23) இனக்குழுத் தலைவர்கள் மெல்ல மெல்ல சீறூர் மன்னராக வடிவெடுத்தமை புலனாகிறது.

### 3.6. சீறூர் மன்னர் சமுதாயக்குடிகள்

நிலப்பகுதிகள் தோறும் தங்கி நிலைத்து வாழத்தலைப்பட்ட மனித சமுதாயம் ஆங்காங்கே இருந்த இயற்கைச் சூழல்களை அடிப்படையாகக்கொண்டு தமது வாழ்வை

அமைத்துக் கொண்டது. (பெ. மாதையின்.,2004: 10) அதுபோல சங்கச்சமூகத்தில் இனக்குழுவாக வாழ்ந்த மக்கள்தொகுதி தன்னுள் ஒரு தலைவனைக்கொன்டு விளங்கியது. இத்தலைவனே நாளடைவில் சிறிய ஊரின் தலைவனாகவும் மன்னனாகவும் உயர்த்தப்படுகிறான். இத்தகைய இனக்குழுச் சமூகத்தின் எச்சங்களைத் தாங்கி வாழ்ந்த சமூகதாயம் சீறூர்த் தலைவனோடும் தலைவியோடும் கொண்டிருந்த நேரடித் தொடர்பைக் காட்டும் பாடல்கள் வல்லாண் முல்லை, மூதின்முல்லை பாடல்களாக விளங்குகின்றன. இச்சீறூர் மன்னர் பற்றிய பாடல்களில்,

"**மக்கள் நுதலிய அகனைந் திணையும்**

**சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்**" (தொல்.அகத்.,நூ.எ: 57.,வ.ள்: 1-2)

என்று கூறிய தொல்காப்பியர் கூற்றின்படி, (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 70) சீறூர் மன்னர் பெயரும், அவன் தலைவியின் பெயரும் சங்கப்பாடல்களில் எவ்விடத்தும் குறிப்பிடப்படவில்லை. இவர்கள் இனக்குழுத் தலைவர் எனும் அடிப்படை நிலையை அடைந்தவராவர். ஏனெனில், "இனக்குழு வாழ்வுமுறை அழிந்து நிலவுடைமையாக மாறுகின்ற சூழலில் பழைய சமுதாயத்தின் எச்சங்களும் நிலவுவது இயல்பே. இனக்குழு அழிவு முழுமையாக இராமல் அரைகுறையாக இருந்தால் இனக்குழு மக்களின் சிந்தனைகள், நம்பிக்கைகள், பண்பாட்டு எச்சங்கள் அதற்கடுத்து உருவாகும் சமுதாயத்தில் எஞ்சி நிற்கும்" என்று கூறும் தேவிபிரசாத் சட்டோ பாத்யாயாவின் கருத்து சங்கப்பாடல்களிலும் பதிவு செய்யப்பட்டுள்ளது. (பெ. மாதையின்.,2004: 38-39) எனவே இனக்குழுச் சமுதாயத்தின் எச்சங்களைத் தாங்கிய சங்கச் சமுதாயமாகச் சீறூர் மன்னரின் சமுதாயங்கள் உள்ளன என்று கூறுவது ஏற்புடையதாகிறது.

**3.6.1. சீறூர் இயல்பு**

இனக்குழு வாழ்வுமுறை அழிந்து நிலவுடைமையாக மாறுகின்ற சூழலில் பழைய சமுதாயத்தின் எச்சங்களும் நிலவுவது இயல்பே. அவ்இனக்குழு அழிவு முழுமையாக இராமல் அறைகுறையாக இருந்தால் இனக்குழு மக்களின் சிந்தனைகள், நம்பிக்கைகள், பண்பாட்டு எச்சங்கள் அதற்கடுத்து உருவாகும் சமுதாயாத்தில் எஞ்சி நிற்கும். அவ்எச்சமாக விளங்குகின்ற சீறூர் மன்னர்களின் வாழ்க்கை முறையில் இனக்குழுவின் பரிமளிப்பைக் காணமுடிகிறது. எனவேதான் இனக்குழுச் சமுதாயத்தின் எச்சங்களைத் தாங்கிய சங்கச் சமுதாயமாகச் சீறூர்மன்னரின் சமுதாயங்கள் காணப்படுகின்றன.

சங்கஇலக்கியங்களில் ‘சீறூர்’ பற்றிய பதிவு 48 இடங்களில் இடம் பெற்றுள்ளது. (பெ. மாதையின்.,2004: 38-39) இவற்றில் இரண்டு சீறூர்கள் நெய்தல் நிலத்தில் உள்ளன. மற்ற சீறூர்கள் யாவும் குறிஞ்சி முல்லைத் திணைகளில் காணப்படுகின்றன. சீறூர் என்பது தொல்குடி மக்களின் வாழ்விடமாகும். அதற்கெனத் தனித்துவமான பண்புகள் உள்ளன. இனவரைவியலாளர்கள் இத்தகைய ஊர்களை “இயற்கை சார்ந்த ஊர்கள்” என்பர். நிலம், விலங்கு, தாவரம் ஆகிய மூன்றும் நெருக்கத்துடன் உறவாடும் சமூக முறையைக்கொண்ட ஊரே சீறூர் ஆகும். அதனால் அம்மூன்று இயற்கைக் கூறுகளையும் “துணைச் சமூக அமைப்பு” (para-social system) என்பார்கள். சங்கச் சமூகத்தில் குறிஞ்சி, முல்லை இரண்டிலும் சீறூர் வாழ்வென்பது இயற்கையை முழுவதுமாகச் சார்ந்தது எனலாம். மற்ற சமூகக் குழுக்களைச் சாராமல் நேரடியாக இயற்கையைச் சார்ந்தே வாழவேண்டிய தகவமைப்பு இதன் அடிப்படைப் பண்பாகும் என்று கூறுவதால், சீறூரின் இயல்பை உணரமுடிகிறது. (பக்தவத்சல பாரதி.,2014: 139) இதனைக்,

“**களிறு பொரக் கலங்கு கழன்முள வேலி**

**அரிதுண் கூவ லங்குடிச் சீறூரீர்**” (புறம்.பா.எ: 306.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், அறிவிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 211) களிறுகள் கலக்கியதால் உண்ணுதற்கு அரிதான நீரையுடைய நீர் நிலைகளையும் முள்ளையும் கழற்கொடியாலாகிய வேலி சூழ்ந்த அழகிய குடிகளையும் உடைய சீறூர் என்று உணர்த்துகிறது. மேலும்,

“**புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்**” (புறம்.பா.எ: 314.,வ: 4)

எனும் வரி, செப்புகிறது. (சு. துரைசாமிப் பிள்ளை. (உ.ஆ).,1951: 224) புல்லிய கொட்டையையுடைய நெல்லி மரங்கள் நிற்கும் புன்செய் நிலங்களை உடையது சீறூர். வேனிற்காலத்து மலரும் கோங்கினது பூவிடத்துள்ள கொட்டையைப் போன்ற விளைந்த அழகிய காதுகளையுடைய, கொல்லை வரப்பில் வாழும் எலியை அலைக்க, அவ்வெலியானது தழைத்தலைப் பொருந்திய வரகின் உயர்ந்த தோகையிடையே அவ்வெலி சென்று மறையும். அத்தகைய வன்புலமாகிய நாடு சீறூர். இதனைக்,

“**குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்டக்**

**கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்**

**வன்புல வைப்பி னதுவே சென்று**” (புறம்.பா.எ: 321.,வ.ள்: 5-7)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 238) அத்தகைய வன்புலத்துச் சிறுவர்கள் வரகு அரியும் இடத்து ஓடுகின்ற எலிகளைப் பிடிக்க வில்லை எடுத்து ஆரவாரம் செய்வர். அவ்வாறு ஆரவாரம் செய்யும் போது, அங்குள்ள கடுமையான மட்கலங்கள் உருண்டு உடையும்படியாக முயல்கள் பாய்ந்து செல்லும் என்று கூறப்படுகிறது. இதனை புறம்-322ம் பாடல் உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ)., 1951: 240) மேலும் சீறூர்ச் சிறார்கள் எலியை வேட்டையாட, உடைவேல மரத்தின் முள்ளை ஊகம் புல்லின் கோலில் செருகி அதை வளாரால் (வளையும் தன்மை கொண்ட இளங்கொம்பு) செய்யபட்ட வில்லில் வைத்துப் பயன்படுத்தினர் என்பதை புறம்-324ம் பாடல் விளக்குகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 1)

அத்தகைய புன்செய்நிலமானது நெல் விளையாத பூமி என்றும் புறம் - 328 ஆம் பாடல் உணர்த்துகிறது. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1951: 257) மேலும் சீறூர் மன்னரின் சீறூரானது, நாடிவருகின்ற பரிசிலர்க்குக் கொடுத்தலன்றிப் புரவு வரி செலுத்துதற்கும் ஆற்றாத வருவாயையுடைய சீறூர் ஆகும். சீறூர் ஒரு வன்புலச் சமுதாயமாகக் காட்டப்பட்டுள்ளது. புன்செய் நிலத்தைக்கொண்டு பெற்ற வருவாயைத் தன்னை நாடிவருகின்ற இரவலர்க்கு அளிக்கும் பண்பு கொண்டவனாகச் சீறூர் மன்னன் விளங்குகிறான். அச்சீறூரில் எலிகளை வேட்டையாடியதற்குக் காரணம் அங்குள்ள வளமையற்ற நிலையை உணர்த்துவதற்கே ஆகும். (பெ. மாதையன்.,2004: 23) இத்தகைய சமுதாய இயல்புக்கு ஏற்பத் தலைமைகளும் வேறுபட்டு இருந்தன என்று கூறுவதன்மூலம் இனக்குழு மக்களின் தலைமைத் தன்மை சமூகப் பொருளாதார நிலை கருதி மாற்றம் கொண்டுள்ள விதத்தை அறியமுடிகிறது.

**3.6.2. சீறூர்ச் சமுதாயமும் - நடுகற்களும்**

இனக்குழுச் சமுதாயத்தின் எச்சமாக விளங்குகின்ற சீறூர்ச் சமுதாயத்தினரிடம் நடுகல் வழிபாடு இன்றியமையாததாகக் காணப்படுகிறது. இதனை, வீரவணக்கம் என்றும், சங்க இனக்குழுச் சமுதாயத்தின் பெருவழக்குடைய முனைப்பான வழிபாட்டுமுறை என்றும் குறித்துள்ளனர். (பெ. மாதையன்.,2004: 43) இத்தகைய சமுதாயத்தில் ஆநிரைகளைக் கவரும்போது இறந்து பட்டவர்களுக்கு நடுகல் வைத்து வழிபடும் பழக்கம் இருந்துள்ளமையை இலக்கியங்களும் உணர்த்துகின்றன. மேலும் சீறூர் மன்னர் சமுதாயத்திலும் வீரமே சமுதாயநலம் பேணுதற்கான அடிப்படையாய் இருந்துள்ளது. இங்ஙனம் வீரமரணம் அடைந்தவர்களை அச்சமுதாயம் பெரிதும் மதித்து வந்துள்ளது. இதனை,

**“வில்லுமிழ் கடுந்தணை மூழ்கக்**

**கோல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே**'' (புறம்.பா.எ: 263.,வ.ள்: 7-8)

எனும் வரிகள், உரைக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 132) ஆயர் இனத் தலைவன் ஒருவன், தன்னினத்து மக்கள், பகைவர் தம் நிரைகளைக் கவர்ந்து சென்றுவிட்டமையைக் கூறக்கேட்டு விரைந்தான். அவன் பகைவரிடமிருந்து நிரைகளை மீட்டுக் கொணர்ந்தான். மீண்டும் பகைவர் போருடற்றவே அதில் அத்தலைவன் இறந்துபடுகிறான். அவ்வாறு இறந்த தலைவனுக்கு நடுகல் எழுப்பி, அதில் அவனது பெயர் பொறித்து, அவன் புகழையும் கூறி வழிபட்டனர் என்று ஒரு பாணனிடம் கூறுகிறான். இதில் அத்தலைவனாவன் ஆயர் இனத்தின் தலைவனாகக் குறிப்பிடப்படுவது முக்கியமானதாகும். இதனைப்,

''**பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி**

**மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியோ**

**டணிமயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்**

**தினிநட் டனரே கல்லுங் கண்றோடு**'' (புறம்.பா.எ: 264.,வ.ள்: 1-5)

எனும் வரிகள், செப்புகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 134) ஆநிரைகளைக் கவர்ந்து சென்ற பகைவரிடமிருந்து மீட்கும்பொழுது புண்பட்டு வீரமரணம் அடைகிறான் ஒரு தலைவன். அவ்வாறு தலைவன் இறந்த செய்தி அவனை நாடிச் செல்கின்ற இப்பாணருக்குத் தெரியுமோ தெரியாதோ? என்று ஒரு புலவன் வினவுகின்றான். இதுபோலவே புறம்-265ம் பாடலிலும் பண்ணன் எனும் தலைவனின் நடுகல்லைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதனை,

''**களிறுபொரக் கலங்கு கழனடமுள் வேலி**'' (புறம்.பா.எ: 306.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலில், சீறூரின் இயல்பு பேசப்பட்டுள்ளது. (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1951: 211) அச்சீறூரின் தலைவியானவள் நாளும் தவராமல் நடுகல்லைக் கைகூப்பித் தொழுது வழிபட்டாள் என்று குறிப்பதால், சீறூர்ச் சமுதாயம் நடுகல் வழிபாட்டினைப் பெருமதிப்புடையதாகக் கொண்டு விளங்கியுள்ளது. மேலும்,

''**நடுகற் பிறங்கிய வுவலிடு பறந்தலைப்**'' (புறம்.பா.எ: 314.,வ: 3)

எனும் வரியும், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 224) நடுகற்களால் உயர்ந்த தழைகள் உதிர்ந்த இடமாகச் சீறூர் சமுதாயம் காணப்பட்டது. மற்றும்,

''**ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்**

**கல்லே பரவி னல்லது**

**நெல்லுக்குத் துப்பரவுங் கடவுளு மிலவே**'' (புறம்.பா.எ: 335.,வ.ள்: 10-13)

எனும் வரிகளும், நடுகல் பற்றி உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 268) போரில் யானைகளைக் கொன்று தாமும் விழுப்புண் ஏற்பட்டு இறந்தோருக்கு நடுகல் வைத்தனர் அக்காலமக்கள். அக்கல்லில் வீரமரணம் பெற்ற வீரனின் புகழை பொறித்தும் அக்கல்லிற்கு நெல்லைத் தூவியும் வழிபாடு செய்துள்ளனர்.

சீறூர்ச் சமுதாயம் நடுகற்கள் நிறைந்த சமுதாயமாகக் காணப்பட்டுள்ளது. எனவே இச்சமுதாயத்தை நடுகற்கள் நிறைந்த சுடுகாட்டை உடையது என்று கூறுவதும் ஏற்புடையதாகிறது. (பெ. மாதையன்.,2004: 45) சீறூர் மன்னர் சமுதாயத்தின் இவ்வழக்கமானது அவர்களை இனக்குழுச் சமுதாயத்தின் எச்சமாக் காட்டுகின்றது எனலாம்.

### 3.6.3. குடிகளோடு கூடியிருக்கும் சீறூர்த்தலைவன்

வன்புலச் சமுதாயமாக விளங்கும் சீறூரின் தலைவன் எப்பொழுதும் குடிகளோடு குடிகளாய் வாழ்ந்தான் என்று சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. இதனைப்,

''**புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்**

**குடியு மன்றற் தானே கொடியெடுத்து**

**நிறையழிற் தெழுதரு தானைக்குச்**

**சிறையுந் தானேதன் னிறைவிழு முறினே**'' (புறம்.பா.எ: 314.,வ.ள்: 4-9)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 224) புல்லிய கொட்டையையுடைய நெல்லி மரங்கள் வளர்ந்திருக்கும் புன்செய் நிலங்களைக்கொண்ட சீறூரில் வாழும் தலைவன் தன் குடிகளோடு குடிகளாய் இருப்பான். மேலும் அவன், போர்க்காலங்களில் வேந்தன் துன்புற்ற நேரத்தில், பகைவர் படையை எதிர்த்து நின்று காப்பவனாகவும் கருதப்படுகிறான். மேலும் சீறூர்த் தலைவன் பாணர் கூட்டத்துடன் இருந்தமையைப்,

''**புன்புலந் தமிஇய வங்குடிச் சீறூர்க்**

**குமிழுன் வெள்ளை மறுவாய் பெயர்த்த**

**வெண்காழ் தாய விண்காற் பந்தர்**

**இடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்**

**பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை**'' (புறம்.பா.எ: 324.,வ.ள்: 8-12)

எனும் இவ்வரிகள், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 244) குமிழம் பழங்களை உண்ணும் வெள்ளாட்டின் பிழுக்கைகள் பரந்து கிடக்கின்ற வலிய கால்களை உடைய பந்தலின் கீழ், இடையன் கொளுத்திய சிறுதீயின் வெள்ச்சத்தில் பாணர் குழாத்துடன் வீற்றிருந்தான். நாணமாகிய நற்பண்பை உடைய ஒரு தலைவன். அவனே பாணர் கூட்டத்தோடு வீற்றிருந்த சீறூர்த் தலைவன் எனக் கருதப்படுகிறான்.

இச்சீறூர்த் தலைவன் தலைமைப்பண்பு கொண்டவனாக விளங்கினாலும், அவன் தன் குடிகளோடு நெருக்கமானவனாகவே இருந்துள்ளான். மேலும் அவன் பாணர் கூட்டத்துடனும் மிக்க நெருக்கம் உடையவனாக இருந்துள்ளான். சீறூர்த் தலைவன் மன்னவனாக போற்றப்பட்டாலும் தன் குழுச் சமூகத்தோடு இணக்கமானவனாகவே வாழ்ந்துள்ளான் என்பது இனக்குழுச் சமூகத்தின் எச்சமாக விளங்குகிறது.

**3.6.4. சீறூர்தலைவன் - இனக்குழுத் தலைவன்**

சீறூர் பற்றியும் சீறூர்த்தலைவன் பற்றியும், தலைவி பற்றியும் சங்கப்பாடல்கள் பல உணர்த்திச் செல்கின்றன. ஆயினும் எவ்விடத்திலும் அவர்களின் பெயர் குறிப்பிடப் பெறவில்லை. சீறூர்த் தலைவன் என்றும் மன்னன் என்றும் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால்,

“***மக்கள் நுதலிய அகனைந் திணையும்***

***சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாசுர்***” (தொல்.பொருள்.அகத்.,நூ.எ: 57.,வ.ள்: 1-2)

எனும் தொல்காப்பியக் கூற்றின் படி, (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 70) அகத்தினை இலக்கியங்கள் சுட்டி ஒருவரது பெயரைக் குறிப்பிடுவது இல்லை என்பது மரபு. ஆயினும் புறப்பாடல்களிலும் இந்நிலை கையாளப்பட்டுள்ளது. குறிப்பாகச் சீறூர் மன்னர்களைப் பற்றிக் குறிப்பிடும் பாடல்களில் எங்குமே அவரின் இயற்பெயர் சுட்டப்பெறவில்லை. இதற்குக் காரணம், புறப்பாடல்கள் வேந்தரின் பெயரைக் குறிப்பிடுகிறது. ஆனால் சீறூர்த் தலைவர்களின் பெயர் குறிப்பிடவில்லை. ஏனெனில் இவர்கள் சிறிய குழுவுக்கே தலைவனாக விளங்குகின்றனர் என்பதாலும், இவர்கள் சீறூர் மன்னனாகப் போற்றப்பட்டாலும், அவர்களின் வாழ்க்கை முறையான குழுச்சமூக வாழ்க்கை முறையைக் களையாத வாழ்க்கையாக அமைந்துள்ளது என்பதாலும், இவர்களின் பெயர் சுட்டப்பெறவில்லை. எனினும், இனக்குழுச் சமுதாயத்தின் அங்கங்களை தாங்கிய சங்கச் சமுதாயமாகக் சீறூர் மன்னரின் சமுதாயங்கள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இவையே சீறூர்த் தலைவனை இனக்குழுத் தலைவன் என்று வலியுறுத்துகின்றன. மேலும் வேந்தர் மரபில் காணப்படும் ஆநிரை கவர்தல் மற்றும் அநிரை மீட்டல் தொடர்பான நிலங்கவரும் நோக்கில் தொடங்கப்படும் போர்முறைகள் சீறூர் மன்னர்களின் வாழ்க்கை முறையில் காணப்படவில்லை. ஏனெனில், சீறூர் மன்னர் சமுதாயத்தில் உழிஞை, நொச்சிப் போர்களைக் காண இயலவில்லை. எங்கு தனியுடைமைப் பெருக்கமும் அதைப் பாதுகாப்பதற்கான மதில்களும் உள்ளனவோ அச்சமுதாயத்தில் தான் இப்போர் முறைகளைக் காணமுடிகிறது என்று கூறும் பெ. மாதையனின் கருத்து பொருத்தமுற அமைகின்றது. (2004: 29) எனவேதான் சீறூர் மன்னர்களிடம் ஆநிரைகள் தொடர்பான நிலங்கவர் போர்முறை காணப்படவில்லை. அவர்களின் சமுதாயம் இசைக்குழுச் சமுதாய முறையினைக் கொண்டதாக விளங்குகிறது. மேலும் இச்சீறூர் மன்னர்களைப் பற்றிய பாடல்கள் மூதின்முல்லை, வல்லான் முல்லையில் பாடப்பட்டுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது. இதனைப் பெ. மாதையனின் பின்வரும் கருத்து உணர்த்துகின்றது. மூதின்முல்லை, வல்லான் முல்லையானது, சீறூர் மன்னர்ச் சமுதாயம் சார்ந்தனவாகவே இருப்பதைப்போல வெட்சி, கரந்தைத் திணைப் பாடல்களும் இச்சமுதாயம் சார்ந்தனவாகவே உள்ளன. (2004: 29) இந்த அடிப்படையில் இச்சமுதாயத்தைக் கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக்கொண்ட சமுதாயம் என்றும், புன்செய்நில வேளாண்மையை அடிப்படையாகக் கொண்ட சமுதாயம் என்றும் இரண்டாகப் பாகுபடுத்தலாம். இவ்விரண்டில் கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்த சமுதாயத்தில் நிரை கவர்தல், நிரை மீட்டல் போர்முறைகளைக் காணமுடிகின்றதே அன்றி நிலங்கவர் போர்களைக் காண இயலவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

சீறூர் மன்னர்கள் இத்தகைய போர்முறைகளில் ஈடுபட்டமைக்குக் காரணம் தன்னுடைய குடிமக்களுக்காக மட்டுமே என்று கூறிவிட இயலாது. ஏனெனில், அவர்கள் பெரும்பாலும் வேந்துவிடு தொழிலில் ஈடுபட்டுள்ளனர் என்பதையும் புறஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. வன்புலச் சமுதாயமாக விளங்கிய சீறூர் மன்னர் சமுதாயம் வளமை குன்றிய சமுதாயமாக விளங்கியுள்ளது. இதனால் ஏற்பட்ட உணவுப் பற்றாக்குறையின்போது ஊர் நலம் பேணிய சீறூர்த் தலைவரை வேந்துவிடு தொழிலில் ஆட்படுத்துகிறது. ஆதலால் அவர்கள் வெட்சி, கரந்தைப் போர்களிலும் கூட வேந்துவிடு தொழிலின் பொருட்டே ஈடுபட்டிருப்பார்கள் என்று எண்ண இடமளிக்கிறது.

சீறூர் மன்னர்கள் தமக்கென்று போர்முறைகளைக் கையாளாததாலும், அவர்களின் இயற்பெயர் குறிப்பிடப் பெறாததாலும், நடுகல் வழிபாட்டில் மிகுந்த ஈடுபாடும் மதிப்பும் கொண்டவர்களாக விளங்குகின்றமையாலும் இவர்கள் இனக்குழுச் சமூகத்தினரே என்றும் அல்லது இனக்குழுச் சமூகத்தின் எச்சமாகக் காணப்படுகின்றவர்கள் என்றும் கூறமுடிகிறது.

**3.6.5. சீறூர்த் தலைவனின் கொடைத்தன்மை**

இனக்குழுச் சமூகத்தின் எச்சமாகச் காணப்படும் சீறூர்ச் சமுதாயத்தின் தலைவன், தன்னை நாடி வருகின்றவர்க்குத் தன்னிடம் இருப்பதைக் கொடுக்கும் நற்பண்பு உடையவனாகக் காணப்படுகிறான். சீறூர்த் தலைவன் தன்னிடம் கொடுப்பதற்கு யாதொரு பொருளும் இல்லையாயினும், தன்னுடைய உடைமைகளைக் கொண்டு கடன் பெற்றேனும் வழங்கத் தயங்காதவனாகக் காணப்படுகிறான். மேலும் அவன் பெரும்பாலும் உடைமையற்றவனாக காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இதனைக்,

"**கைப்பொருள் யாதொன்று மிலனெ**" (புறம்.பா.எ: 313.,வ: 2)

எனும் பாடலடியானது, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 222) கொடுக்கும் பண்பு உடையவனாக தலைவன் இருந்தபோதிலும், அவன் கையில் பொருள் ஏதும் இல்லாதவனாக இருக்கிறான். ஆயினும் அவனின் கொடுக்கும் பண்பினை அறிந்த இரவலர் அவனை நாடி வருகின்றனர். இது ஒரு தலைவனின் கொடைத் தன்மையை எடுத்துரைப்பதாகும். அக்காலமக்கள் போரில் கண்ட வெற்றிக் களிப்பினைக் கள்ளுண்டு மகிழ்ந்தனர். அதில் மன்னனுடன் ஒரு தலைவனும் இருக்கின்றான். அவன் கள்ளுண்டு மயங்கிக் கிடக்கின்றான். அவனை நாடி வந்த பாணர் கூட்டத்தைக் கண்ட அத்தலைவன், தன்னிடமிருந்த வாள் ஒன்றினை ஈடு வைத்து அப்பொருளைப் பாணர்க்கு நல்கி உதவிபுரிகிறான். இதனைப்,

"............................**பாணர்**

**நெருகை வந்த விருந்திற்கு மற்றுத்தன்**

**இரும்புடைப் பழவாழ் வைத்தன னின்றிக்**

**கருங்கோட்டுச் சீறியாள் பணைய மிதுகொண்**

**பீவதி லாள னென்னாது நீயும்**" (புறம்.பா.எ: 316.,வ.ள்: 4-8)

எனும் இவ்வரிகள், புலப்படுத்துகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 229) அத்தலைவனின் கொடைத் தன்மையை பாணர் நிருபிக்கத் தம் சீறியாழைப் பணயம் வைக்கின்றான். மேலும் இத்தகைய சீறூர்த் தலைவனின் கொடைப்பண்பினை,

‘‘**வரகின் புல்லென் குப்பை**

**தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்**

**பசித்த பாண குண்டுகடை தப்பலின்**’’ (புறம்.பா.எ: 327.,வ.ள்: 2-4)

என்னும் பாடலடிகளும், உணர்த்துகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 251) சீறூர்த் தலைவன் கடன்காரருக்குக் கொடுத்து எஞ்சியதைப் பசித்து வந்த பாணருக்கு அளித்து மகிழ்ந்தான்.

சீறூர்த் தலைவன் பெரும்பாலும் உடைமை அற்றவனாகக் காணப்பட்ட போதிலும், அவன் கொடுப்பதில் வல்லமை கொண்டவன் என்பதை அறியமுடிகிறது. மேலும் தன்னிடம் உள்ள பொருட்களை ஈடுவைத்தும், கடன் பெற்றேனும் தன்னை நாடி வந்த இரவலர்க்குக் கொடுக்கும் பண்பு உடைவனாகக் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

**3.6.6. சீறூர்த் தலைவியின் விருந்தோம்பல் பண்பு**

சீறூர்த் தலைவனின் மனைவியான சீறூர்த்தலைவி தன் இல்லிற்கு விருந்தினர் வரவேண்டும் என்றும், அதனால் தன் தலைவன் வேந்துவிடு தொழில்மேல் செல்ல வேண்டும் எனவும் நடுகல்லை வழிபடுகிறாள். இதனைக்,

‘‘**களிறுபொரக் கலங்கு கழின்முள் வேலி**’’ (புறம்.பா.எ: 306.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலால் அறியமுடிகிறது. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 211) விருந்தினைப் பேணும் பண்புடையவளாக விளங்கும் சீறூர்த் தலைவியின் விருந்தோம்பல் பண்பினை,

‘‘………………………**மனைவியும்**

**வேட்டைச் சிறாஅர் சேட்புலம் படராது**

**படுமடைக் கொண்ட குறுந்தா நெடும்பின்**

**விழக்கு நிணம் பெய்த தயிர்க்கண் விதவை**

**யாணர் நல்லவை பாணரொ டொராங்கு**

**வருவிருந் தயரும் விருப்பினள்**’’ (புறம்.பா.எ: 326.,வ.ள்: 7-12)

எனும் வரிகள், உணர்த்திச் செல்கின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 249) மடுக்கரையில் பிடித்துக் கொண்டுவந்த உடம்பின் தசையை சமைத்து அதனைத் தயிரோடு கூடிய கூழையும், வேறு நல்ல உணவுப் பொருளையும் சேர்த்துப் பாணருக்கும், வந்த ஏனைய விருந்தினர்க்கும் கொடுத்து உண்ணச் செய்யும் விருப்பமுடையவளாகக் காணப்பட்டாள்.

மேலும், வருகின்ற இரவலர்க்கெல்லாம் அளித்ததால், வரகு தினை முதலான உணவுப்பொருட்கள் தீர்ந்துபோன நிலையில், கைம்மாறு கருதமால் விதைக்காக வைத்திருந்த தினையையும் உரலிலிட்டு இடித்துச் சமைக்கும் இயல்புடைவளாகச் சீறூர்த் தலைவி காணப்படுகிறாள் என்பதனை,

"....................**மனையோள் விரும்பி**

**வரகுந் தினை முள்ளவை யெல்லாம்**

**இரவன் மாக்க ளெனக் கொளத் தீர்ந்தெனக்**

**குறித்து றெதிர்ப்பை பெறா சு மையிற்**

**குரலுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப் பெய்து**" (புறம்.பா.எ: 333.,வ.ள்: 8-12)

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 263) சீறூர்த் தலைவி தன்னை நாடி வந்தவர்களுக்கு விருந்தளிக்கும் விருப்பம் உடையவளாகக் காணப்படுவதையும், அவள் தன்னிடம் இருக்கும் விதைத் தினையைக் கூட வந்த இரவலர்க்கும் ஏனையோருக்கும் உணவாக்கிக் கொடுத்து மகிழ்ந்துள்ளாள் என்பதையும் இதன்வழி அறியமுடிகிறது.

### 3.7. சீறூர்ச் சமுதாயமும் - பணார் கூட்டமும்

சீறூர்ச் சமுதாயத்தோடு பாணர் கூட்டம் மிகுந்த இணைக்கமுடையதாக இருந்துள்ளது. சீறூர்த் தலைவன் வேந்தனோடு போருடற்றிப் பின் வெற்றிக் களிப்பினைக் கள்ளுண்டு மகிழ்கையில், பாணர் கூட்டம் தன்னைநாடி வந்தமையை அறிந்து, அவ்வேளையிலும் கூட தன்னுடைய பழைய வாளினை ஈடுவைத்துக் கொடுக்கும் அளவிற்குப் பாணர் அவர்களின் வாழ்வில் மிக்க நெருக்கமுடையவர்களாக இருந்துள்ளனர். இதனை,

"**நெருதை வந்த விருந்திற்கு மற்றுத்தன்**

**இரும்புடையப் பழவாள் வைத்தன னின்றிக்**

**கருங்கோடடுச் சறியாழ் பணையம்**" (புறம்.பா.எ: 316.,வ.ள்: 5-7)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 228) மேலும் சீறூர்த் தலைவன் பாணருக்கு வரகினைக்கொண்டு கடன்காரர்க்குக் கொடுத்ததுபோக எஞ்சியதை அளித்தான். இதனைத்,

"**தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்**

**பசித்த பாண ருண்டு கடை தப்பலின்**" (புறம்.பா.எ: 327.,வ.ள்: 3-4)

எனும் இவ்வரிகள் உணர்த்திச் செல்கின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 251) மேலும், சீறூர்த் தலைவன் பாணருடன் நெருக்கமுடையவனாக இருந்தான் என்பதைப்,

"**பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை**" (புறம்.பா.எ: 324.,வ: 12)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 244) பாணர் கூட்டத்துடன் நாணமாகிய நற்பண்பை உடைய தலைவன் வீற்றிருந்தான். காரணம், தலைவனுக்கும் பாணருக்கும் இடையே இருந்த இணக்கமான உணர்வேயாகும். மேலும், அவன் உடைமை அற்றவனாக விளங்கினான் என்பதைக்,

"**கைப்பொருள் யாதொன்றும் இலன்**" (புறம்.பா.எ: 313.,வ: 2)

எனும் வரி, சுட்டுகிறது. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 222) அவன், நீண்ட நெடிய பந்தர்க்கீழ் இரவலரை இருத்தி உணவை முறைமுறையாகத் தந்து உண்பிக்கும் இல்வாழ்க்கையில் சிறந்த மகளைப்போல சிலசிலவாக அவரவர் வரிசை அறிந்து கொடுக்கும் வல்லவனாவான். மேலும் செல்வமுடைய காலத்தில் பலரும் கொள்ளுமாறு யாவர்க்கும் வரையாது அள்ளி வழங்கும் வல்லவனாவான் என்று புறம்-331ஆம் பாடல் உணர்த்திச் செல்கின்றது. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 259)

பாணர் தம் வாழ்க்கையின் பெரும்பகுதியை இத்தகையச் சீறூர்ச் சமுதாயத்தோடு இணைக்கமுற கழித்தனர் என்பது புலனாகிறது. அவர்கள் வள்ளல்கள், வேந்தர்கள் ஆகியோரிடம் கொண்டிருந்த தொடர்பு நிலையை விடச் சீறூர்ச் சமுதாயத்துடன் கொண்டிருந்த நெருக்கமானது நல்ல பிணைப்பை உடையதாகக் காணப்படுகிறது.

இத்தகைய பாணர் சமுதாயமும் குழுவாக வாழ்த்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. ஏனெனில், இவர்கள் தங்களின் இசையறிவினைத் தனியொருவராக வெளிப்படுத்தவில்லை. அவர்கள் இசைக்கலையைக் கூட கூட்டமாகவே வெளிப்படுத்தியுள்ளனர். இப்பாணர் சமூகம் தொல்குடியைச் சார்ந்தது என்பதைத்,

"**துடியன் பாணன் பறையன் கடம்பனென்**

**றிந்நான் கல்லது குடியு மில்லை**" (புறம்.பா.எ: 335.,வ.ள்: 7-8)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 268) துடியன்குடி, பாணன்குடி, பறையன்குடி, கடம்பன்குடி என்று சொல்லப்பட்ட இந்நால்வகைக் குடிகளன்றி வேறு குடிகள் இல்லை என்று உணர்த்துவதால், பாணர் கூட்டம் கூட்டமான வாழ்வியலைப்

பெற்ற குழுச் சமுதாயத்தினர் என்பதும், பாண்சமூகம் வன்புலச் சமுதாயமான சீறூர்ச் சமுதாயக் குடிகளோடு குடிகளாய் வாழ்ந்துள்ளமையும் புலனாகிறது.

### 3.8. தொல்காப்பியர் உணர்த்தும் பாணர் மரபு

தொல்காப்பியம் 'கொற்ற வள்ளை ஓரிடத்தான' (தொல்.பொருள்.,புறத்.,நூ.எ: 86.,வ: 1) என்று கூறுவதனால், கொற்றவள்ளையும் ஓர் இடத்துப் பாடாண் பாட்டாம் என்று உணர்த்துவது புலனாகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 136) மேலும் அதன் துறைகளைக்,

"**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**

**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**

**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**

**சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்**" (தொல்.பொருள்.புறத்.,நூ.எ: 88.,வ.ள்: 3-6)

எனும் நூற்பாவினுள், குறிப்பிடுகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 146) கூத்தராயினும், பாணராயினும், பொருநராயினும், விறலியாயினும் நெறியிடைக் காட்சிக்கண்ணே எதிர்ந்தோர் உறழ்ச்சியால் தாம் பெற்ற பெருவளன் நமக்குப் பெறலாகும் எனவும் சொன்ன பக்கம் என்று உரைக்கிறது. இதன்மூலம் ஆற்றுப்படையின் இலக்கணம் உணர்த்தப்படுவதும் விறலி ஆகியோர் இரவலராகப் பரிசில்பெறச் சென்றுள்ளனர் என்பதும் பெறப்படுகிறது. அவ்வாறு அவர்கள் பரிசில் பெற்றுத் திரும்பி வருகின்ற வேளையில் எதிர்ப்பட்ட மற்றொரு கூட்டத்தினரை ஆற்றுப்படுத்துகின்றனர். கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோர் ஒரே குழுவாக வாழ்ந்துள்ளனர் என்பதும் அறியமுடிகிறது. மேலும் இதனைப்,

"**பாணன் கூத்தன் விறலி பரத்தை**

**யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்**

**பேணுதகு சிறப்பின் பார்ப்பான் முதலா**

**முன்னுறக்கிளந்த அறுவரொடு தொகைஇத்**

**தொன்னெறி மரபிற் அன்பிற்குரியர்** (தொல்.பொருள்.கற்.,நூ.எ: 491.,வ.ள்: 1-5)

எனும் நூற்பாவும் குறிப்பிடுகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 495) கற்புக்கு உரியவர்களாகக் குறிப்பிடுவதிலும் பாணன் முதன்மையானவனாகக் கருதப்பட்டுள்ளனர். அதேபோன்று வாயில்களைத்,

"**தோழி, தாயே, பார்ப்பான், பாங்கன்,**

**பாணன், பாடினி, இளையர், விருந்தினர்,**

**கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர்,**

**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப**" (தொல்.பொருள்.கற்.,நூ.எ: 191.,வ.ள்: 1-4)

எனும் நூற்பாவினுள் உணர்த்துகின்றது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 312) பாணன், பாடினி, கூத்தர், விறலியர் போன்ற பாண்மரபினரைக் குறிப்பிட்டுள்ளனர். பாண்மரபினருள் முதன்மையானவராகக் கருதப்படும் நால்வராகிய கூத்தர், பாணர், பொருநர், விறலியர் போன்றோர் தொல்காப்பியரால் குறிப்பிடப்பட்டமை புலனாகிறது.

### 3.9. பாண் - பாணர் - சொற்பொருள் விளக்கம்

பண் எனும் சொல்லுக்குப் இசை, பாட்டு என்று பொருள். அப்பண்ணைப் பாடுபவனுக்குப் பாண் என்றும், பாணன் என்றும் பெயர் வழங்கப்பட்டுள்ளமையை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

பாண் என்னும் சொல்லுக்குத் தமிழ்மொழி அகராதி இசைப்பாட்டு, பாணச்சாதி என்று பொருள் வழங்குகின்றது. இதுபோலவே பாணர் எனும் சொல்லுக்கு கல்வியின் மூத்தமகன் என்றும், பாணர் என்றால் சங்கீதம் பாடிப் புகழ்வோர் என்றும் தையற்காரர் என்றும், பாணி எனும் சொல்லுக்கு ஓசை, கீதம், கூத்து, பாட்டு என்றும், அதுபோலவே பாடினி என்றால் பாடுவாள் என்றும், பாணிச்சி, பாணத்தி என்றால் பாணப்பெண் என்றும் பொருள் வழங்குகிறது. (நா. கதிரைவேற்பிள்ளை.,1981: 682–687) இதுபோலவே மேலும் சில அகராதிகளும் இவ்வாறே பொருள் வழங்கியுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. எனவே இவ்வடிப்படையில் பாண் எனும் இசைப்பாட்டு பாடியதாலும், பாணி என்னும் தாளமிகு கூத்தினை நிகழ்த்தியதாலும் பாணர் என்னும் சொல் உருவாக்கம் பெற்றிருத்தல் வேண்டும்.

பாணர்களில் ஆடவரைச் சென்னியர், வயிரியர், செயிரியர், மதங்கர், இன்னிசைக்காரர் எனப் பிங்கலநிகண்டு குறிப்பிடுவதாகக் க. காந்திதாசன் மொழிகிறார். (2011: 49-50)

பண் என்ற சொல்லிலிருந்து பிறந்த பாண் என்னும் சொல் பலர் பாலைக் குறிக்கப் பாணர் என்றும் பெயர் வழங்கலாயிற்று எனலாம்.

### 3.10. பாணர் வகை

பாடல் பாடவல்ல ஒரு சாதியாக விளங்கிய பாணர் கூட்டத்தினருள் சில வகையினர் இருந்தமையை இலக்கியங்கள் மொழிகின்றன. அவர்கள் இசைக்கும் கருவியின் பெயரால், பண்ணொடு பாடுவதால் நான்கு வகையாக வகைப்படுத்தப்படுகின்றனர்.

க. கைலாசபதி பாணரை வாய்ப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் என்று மூவகையாகப் பகுத்துரைக்கிறார். (2006: 138)

கே. பழனிவேலு பாணரை வாய்ப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர், முதுவாய்ப்பாணர் என்று நான்கு வகையாகக் குறிப்பிடுகிறார். (2010: 35)

க. காந்திதாசன் பாணரை

| | | |
|---|---|---|
| வாய்ப்பாணர் | - | இசைப்பாணர் - பனுவல்பாடுநர், |
| யாழ்ப்பாணர் | - | சீறியாழ்ப்பாணர் - சிறுபாணர் |
| | - | பேரியாழ்ப்பாணர் - பெரும்பாணர் |
| மண்டைப்பாணர் | - | மண்டையாழ்ப்பாணர் என்று வகைசெய்கிறார்.(2011:50) |

தொ. பரமசிவம் பாணரை வாய்ப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர், முதுவாய்ப்பாணர், இசுலாமியப்பாணர் என்று வகைப்படுத்துகிறார்.

யாழ்களுள் சிறிய யாழ் சீறியாழ் என்றும், பெரியயாழ் பேரியாழ் என்றும் வழங்கப்பட்டன. இவ்யாழினைப் பயன்படுத்துவோர் முறையே சீறியாழ்ப்பாணர், பேரியாழ்ப்பாணர் என்று வழங்கப்பட்டனர். ஆதலால் யாழ்ப்பாணர் என்போர் சிறுபாணர், பெரும்பாணர் எனவும் அழைக்கப்பட்டனர்.

மண்டைப்பாணர் என்னும் வகையினரும் பாணரின் பிரிவினருள் ஒருவராகக் கருதப்படுகின்றனர். இதில் மண்டை என்பதற்குப் பிச்சைப்பாத்திரம் என்று க. கைலாசபதி பொருளுரைக்கிறார். (2006: 138) மேலும் மண்டைப்பாணர் என்போர் மண்டையாழ்ப்பாணர் என்றும் வழங்கப்பட்டுள்ளனர் என்று க. காந்திதாசன் கருத்து தெரிவிக்கின்றார். (2011: 50) இதனைப்,

“**பாணர் பசுமீன் சொரிந்த மண்டை**” (குறுந்.பா.எ: 169.,வ: 4)

எனும் வரியானது உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 304) அதாவது பாணர் தாம்பிடித்த மீனையிடுவதற்கு மண்டையைப் போன்று ஒரு பாத்திரத்தைப் பயன்படுத்தியுள்ளனர். அவ்வாறு தாங்கள் பிடித்த மீனை இட்டுவைத்த வாயகன்ற பாத்திரமே மண்டை என்று அழைக்கப்பட்டுள்ளது. ஏனெனில், இவ்வாறு மீனையிட்டு வைத்த மண்டையானது பிறிதொன்றுக்கும் பயன்படுத்த முடியாமல் புலால் நாற்றம் அடிக்கும். எனவே அம்மண்டைபோன்று தலைவியின் உயிர் தலைவனுக்குப் பயனற்றுப் போய்விடும் என்று கூறுகிறாள். (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 304) இதன் வாயிலாக மண்டை எனும் சொல்லுக்குப் பாத்திரம் என்பது பொருளாவது தெளிகிறது. மேலும் மண்டையாழ்ப்பாணர்

என்று கருதப்படுவதால் பாணரின் பேரியாழின் அமைப்பின் கீழ்பகுதியானது அகலமான மண்டை போன்ற வடிவத்தால் அமைத்தும், அதன் மேல்பகுதியில் யாழின் நரம்புகளைப் பொருத்தியதாகவும் இருந்திருக்கக்கூடும். எனவேதான் அம்மண்டையைப் பயன்படுத்திய பாணர் மண்டையாழ்ப்பாணர் என வழங்கப்பட்டுள்ளனர்.

பாணன் எனும் சொல்லுக்குத் தமிழ்மொழி அகராதி 'கல்வியின் மூத்தமகன்' என்று பொருள் உணர்த்துகிறது. (நா. கதிரைவேற்பிள்ளை.,1981: 682-687) இதனடிப்படையில், பாணர்கள் பண்ணோடு பாடுவதிலும், இசைக்கருவி இசைப்பதிலும் திறன்மிகப் பெற்றவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்கள் அரசு, சமூகம் சார்ந்த சிக்கல்களைத் தீர்க்கும் மதிநுட்பம் மிக்கவராக விளங்கியுள்ளனர். இயற்கை சார்ந்த அறிவும், வருவது உரைக்கும் திறனும் கைவரப் பெற்றவர்களாகக் காணப்படுகின்றனர். (க. காந்திதாசன்.,2011: 63) எனவே அவருடைய நாக்கு மந்திரத் தன்மையுடன் இருப்பதை, "***முதுவாய் இரவல***" (புறம்.பா.எ: 48) எனும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 164) "***முதுவாய்ப் பாணன்***" (புறம்.பா.எ: 319) எனும் வரியும் உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 233) பாணர் இவ்வாறு அழைக்கப்படக் காரணம், பாண்நாகரிகத் தொடக்கத்தில் மந்திரங்களின் மீது இருந்த நம்பிக்கையே ஆகும்.

முதுவாய்ப்பாணர் என்போர் நிரம்ப ஓதிய புலமையும், வாய்மையும், துறைபல முற்றிய அறிவும், இசைக்கலை நுட்பமும், வரும்பொருள் உரைக்கும் உணர்வும், நிலைத்த புகழும், சொல்வன்மையும், உடையவர்கள் என்று கருதப்படுகின்றனர். (க. காந்திதாசன்., 2011: 63) ஆதலால் பாணன் எனும் சொல்லே கல்வியின் மூத்தமகன் என்று வழங்கப்பட்டமையால், முதுவாய்ப்பாணன் என்பது பின்னர் நிகழ இருப்பதை முன்னமே கூறும் ஆற்றல் பெற்றவராதல் வேண்டும் என்று எண்ண இடமளிக்கிறது.

இசுலாமியப் பாணர் என்று வழங்கப்படும் இப்பாணர் வகையினரைத் தொ. பரமசிவன் அடையாளம் காட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது. இவர்களின் இசுலாமிய மதம் மண்ணில் வேரூன்றிய காலகட்டத்தில் இவர்கள் உதித்தவர்களாக வரையறை செய்யப்பட்டுள்ளனர். இவர்கள் தங்கள் சமயத்தின் கொள்கைகளைக் கடுமையாகக் கடைப்பிடிக்கின்ற இனத்தவருள், 'ரிப்பாய்' என்று தமிழகத்தில் வழங்கப்படுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் இவர்கள் இறைவன் புகழையும், இறைத்தூதராகிய முகம்மது நபியின் புகழையும் இறையடியார்களின் வாழ்க்கைக் கதைகளையும் பாடுவதற்கு என்றே தம் பிறவியினை நேர்ந்து

கொண்டவர்களாகக் கூறப்படுகின்றனர். (தொ. பரமசிவன்.,1997: 86-87) மேலும் இத்தகையவர்கள் காண்பதற்கு, முழங்காலக்குக் கீழே தொங்கும் ஜிப்பா, வேட்டிக்குப் பதிலாகக் ‘கைலி’ எனப்படும் ‘சுரம்’, முக்கோண வடிவில் மடித்து இரண்டு தோளிலுமாகத் தொங்கும் துண்டு, தலையிலே பெரிய பச்சைத் தலைப்பாகை, கழுத்தில் நெல்லிக்காய் அளவிலான மணிகள் கோத்த குறுமத்தங்காய் மாலை, சின்ன தாடி, கையிலே டேப் என்னும் இசைக்கருவி, தோளிலிலே அரிசி வாங்குவதற்கு ஒரு ஜோல்னா பை என்று இவர்கள் காட்சியளிப்பர் எனக் குறிப்பிடப்படுகின்றனர். (தொ. பரமசிவன்.,1997: 86-87) மேலும் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டளவில், பாக்தாத் நகரத்தில் தோன்றிய ‘ஃபகீர்ஷா’ மரபு தென்தமிழ் நாட்டின் கடைக்கோடி வரை எட்டிப் பார்த்திருக்கிறது. (தொ. பரமசிவன்.,1997: 86-87) இப்படித் தோன்றியவர்களே இசுலாமியப் பாணராவர்.

சங்ககாலப் பாணர்கள் வாய்ப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் என்று வழங்கப்பட்டனர். அதுபோல முதுவாய்ப்பாணர் என்போரும் இருந்துள்ளமையைச் சங்க இலக்கியங்கள் பகருகின்றன. மேலும் அந்நியப் படையெடுப்பின் விளைவால் ஊடுருவிய பிற சமங்களின் ஆதிக்கம் காரணமாக, அக்காலப் பாணர் என்று சொல்லுமளவு பாடும்திறன் பெற்றவர்கள் இருந்துள்ளனர். இதனை வலியுறுத்துமாறு, காந்தார கபூலிஸ்தான் வழியாக மேலாசியாவிற்கும் போண்டஸ் (Pontus) மகாணம் பாஸ்போரஸ் நிலவொடுக்கம் (Isthmus of Bosphorous), இவைகளின் வழியாக ஐரோப்பாவிற்கும் பாணர் பல பிரிவினராகச் சென்றனர். காந்தார கபூலிஸ்தான் வழியாகச் சென்ற பாணர் கீழ் அரேபியாக் கரையையும், பாபிலோனியாவையும் தாண்டிச் சிரியாவின் வழியாகச் சென்று நிலைத்த நாட்டுக்குப் பொனீஷியா என்று பெயர். எனவே பாணருடைய நாடு பொனீஷியா எனப்பட்டது. (ந. சி. சுந்தையா.,2010: 52-57) இதன்மூலம் இந்தியாவிலிருந்து வாணிபம் தொடர்பாகப் பிற நாடுகளுக்குச் சென்று தங்கியவர்களைப் போலவே, பிற நாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வந்து தங்கியவர்களும் பாடும்திறன் பெற்ற பாணர் என்று கூறும்படியாக வாழ்ந்துள்ளனர் என்பதைத் தொ. பரமசிவம் கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

### 3.11. பாணரின் குடும்ப உறுப்பினர்கள்

பாணர் கூட்டமாக ஒரு குழு வாழ்க்கைமுறை வாழ்ந்தவர் என்று இலக்கியங்கள் பகருகின்றன. அதுபோல அவர்களின் குடும்ப உறுப்பினர்கள் பற்றியும் இலக்கியங்கள் உணர்த்துகின்றன. யாழ்ப்பாணன், வாய்ப்பாணன், மண்டைப்பாணன் என்று பாணர் பலவாராகக்

குறிக்கப்படுவதுபோல பாணரின் குடும்ப உறுப்பினர்களும் குறிக்கப்படுகின்றனர். பாண்மகன், பாண்மகள், பாடினி, பானிச்சி, பாட்டி எனும் பாணரின் உறவுமுறைச் சொற்களால் இதனை அறியமுடிகிறது.

**பாண்மகன்** - பாண்மகன் பாணனது மகன் என்னும் பொருளில் இலக்கியங்களில் வழங்கப்பட்டுள்ளன. இதனை

''**நல்லிசை நிறுத்த நமவரு பனுவல்**

**தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்**'' (அகம்.பா.எ: 352.,வ.ள்: 13-14)

எனும் வரிகள், விளக்குகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2008: 117) நல்ல இசையை வரையறை செய்த இனிமை மிக்க நூலின், எண்ணின் முறைப்படி இயற்றிய தொன்மையான புகழை நிலைபெறச் செய்த புகழ்சான்ற பாண்மகனானவன் என்று பாணனது மகன் குறிப்பிடப்படுகிறான். ஆயினும் இப்பாணனது மகன் தன் தொல்குடியின் இசைக்கலையை முறையே பயன்படுத்தித் தன் குடிப்பெருமையை நிலைநிறுத்துகிறான் என்று கூறுவதனால் அவன் பாணனது மகன் எனப் புலனாகிறது.

**பாண்மகள்** - பாணனது மகள் என்னும் பொருளில் இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக்.

''**காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு**

**அவ்வாங்கு உந்தி அஞ்சொல் பாண்மகள்**'' (அகம்.பா.எ: 126.,வ.ள்: 8-9)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2008: 20) இப்பாண்மகள் தன்னுடைய தமையன்மார் விடியலில் கொணர்ந்த திரண்ட கோடுகளையுடைய வாளைமீனுக்கு விலையாகப், பழைய செந்நெல்லை முகந்து தருவதைக் கொள்ளாமல், கழங்கினை ஒத்த பெரிய முத்துக்களுடன் சிறந்த அணிகளையும் பெறுவாள் என்று கூறுவதன்மூலம் பாண்மகள் பற்றியும் அவளின் தமையன்மார் பற்றியும் அறிந்துகொள்ள முடிகிறது. மேலும்,

''**நாண்கொள் நுண் கோலின் மீன்கொள் பாண்மகள்**'' (அகம்.பா.எ: 216.,வ: 1)

எனும் வரியின்மூலம், பாண்மகள் மீன் பிடித்த செய்தியையும் அறியமுடிகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2008: 226) இதன்வழிப் பாணனது மகள் பற்றியும், அவர்களின் உறவு முறைகளையும், உறவுப் பெயர்களையும் அறியவதோடு, பாண்மகன், பாண்மகள் என்போர் பாணனது மகன் மற்றும் மகளே ஆவர் என்பதும் புலனாகிறது.

**பாடினி** – பாணனின் மனைவியே பாடினி என்றும், பானிச்சி என்றும், பாட்டி என்றும் வழங்கப்பட்டுள்ளாள். இதனை,

"**நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து**

**நாள்துறைப் பட்ட மோட்டிரு வராஅல்**

**துடிக்கட் கொழுங்குறை நொடுத்துண்டு ஆடி**

**வேட்டம்மறந்து துஞ்சுங் கொழுநர்க்குப் பாட்டி**

**ஆம்பல் அகலிலை அமலைவெஞ் சோறு**

**தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து**

**விடியல் வைகறை இடூஉம்**" (அகம்.பா.எ: 196.,வ.ள்: 1-7)

எனும் வரிகள், அறிவிக்கின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2008: 180-181) வைகறை வேட்டையில் அகப்பட்ட வரால்மீனின் கொழுத்த துண்டத்தினை விற்று, விற்ற பொருளால் கள்ளுண்டு களித்து, வேட்டைக்குச் செல்வதை மறந்த தன் கணவருக்குப் பாட்டி (பாடினி) அகன்ற ஆம்பல் இலையில் புளியங்கறியுடன் சோற்றினை அளித்தாள் என்று கூறுவதன்மூலம் பாணனின் மனைவியை 'பாட்டி' எனும் சொல்லால் குறித்துள்ளனர் என்பது புலனாகிறது. மேலும்,

"**ஒருதிறம் பாடினி முரலும் பாலையங் குரலின்**" (பரி.பா.எ: 17.,வ: 15)

எனும் வரியின்மூலம் பாடினியின் பாடும் திறனை அறியமுடிகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 335) இப்பாடலில் பாடினியின் முன் விறலியைப் பற்றி கூறியிருக்கும் வரிசைமுறைக்கும் காரணம் கூறப்படுகிறது. அதவாது, விறலியர் முன்னணியில் ஆடப் பாடினி பின்னணியில் பாடினாள் என்பதைப் புலப்படுத்தவே அவ்வாறு வரிசைப்படுத்தப்பட்டுள்ளனர். (க. காந்திதாசன்.,2011: 68) இத்தகைய பாடினியின் உருவத் தோற்றத்தை,

"**அறல் போற் கூந்தல் பிறைபோல் திருநுதற்**

**கோலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்கண்**

……………………………………

**பேடை மயிலிருவிற் பெருந்தகு பாடி**" (பொருந.,வ.ள்: 25-47)

எனும் வரிகளால் அறியமுடிகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 35) பாடினியின் தலைமுதல் கால் வரை கேசாதி பாதமாக வர்ணனை செய்திருப்பதை உணர்த்துகின்றன. மேலும் பாடினியானவள் வீரத்தையும் புகழ்ந்து பாடியுள்ளாள். இதனைப்,

**"புறம் பெற்ற வயவேந்தன்**

**மறம் பாடிய பாடினி யும்மே"** (புறம்.பா.எ: 11.,வ.ள்: 10-11)

எனும் வரிகள் மெய்ப்பிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ)..1947: 32) மேலும், பாண்மரபினரைப் புரவலர் வரவேற்றவிதத்தைப்,

**"பாணர் வருக! பாட்டியர் வருக!**

**யாணர்ப் புலவரொடு வயிரியர் வருடிகென**

**இருங்கிளை புரங்கும் இரவலர்க்கு எல்லாம்"** (மது.கா.,வ.ள்: 749-752)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 224) பாட்டியர் எனும் பாடினி பாணருடன் இரவலராக சேர்ந்து சென்றுள்ளனர்.

பாட்டி, பாட்டியர் எனும் சொற்கள் பாடினியைக் குறிப்பனவாகக் காணப்படுகிறது. பாடினி என்பவள் பாடல் பாடும் திறன் வாய்க்கப் பெற்றவளாகவும், பாணனின் உடன்இருக்கும் பெண்மகளாகவும் சுட்டப்படுகிறாள். இத்தகைய பாடினியைப் பாணனின் மனைவியாகக் கருதுவதும் குறிப்பிடத்தக்கது.

**3.11.1. பாணரின் வாழ்வில் விறலியர்**

தொல்காப்பியம் குறிப்பிடும் வகையில், விறலியர் என்போர் பாணர், கூத்தர், பொருநருடன் கலைவாழ்வை நிகழ்த்தியவர்கள் ஆவர். ஆயினும் விறலியர் என்னும் ஆடல் நங்கையர் பாணருடன் இருக்கின்ற பாண் மரபினராகக் கருதப்படுகின்றனர். இப்பாணர் யாழ், ஆகுளி, பதலையொடு இருக்கின்ற விறலியுடன் தம் வறுமை நீங்க மன்னனைக் காணச் சென்றுள்ளனர். இதன் வாயிலாக இவர்களின் இசையறியும் திறனையும், இசையறிவினையும் அறியமுடிகிறது. மேலும் இவர்கள் பாணருடன் சேர்ந்து சென்றுள்ளனர் என்பதை,

**"இன்னகை விறலியொடு மென்மெல வியலிச்**

**செல்வையாயிற் செல்வை யாகுவை"** (புறம்.பா.எ: 70.,வ.ள்: 15-16)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 179) மேலும் விறலியர் போன்று பாடினி, பாடியர், பாடுமகள், ஆடல்மகள், கிணை மகள், பாட்டி, பாணிச்சி எனும் பெயர்களிலும் பெண்பாற் கலைஞர்கள் காணப்பட்டனர். எனவே விறலியர் என்போர்

வேறு. பாடினி என்போர் வேறாவர். (பக்தவத்சல பாரதி.,2015: 77) இத்தகைய விறலியருள் இசைக்கருவிகளை வாசிக்கின்ற விறலியர் என்றும், ஆடல் நங்கையராகச் சில விறலியரும், பாடும் வல்லமை கொண்ட விறலியரும் காணப்படுகின்றனர். இதனை,

''**நல்யாழ் ஆகுளி பதலையொடு, சுருக்கிச்**

**செல்லாமோ தில் சில்வளை விறலி**'' (புறம்.பா.எ: 64.,வ.ள்: 1-2)

எனும் வரிகளால் அறியமுடிகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 166) யாழ், ஆகுளி, பதலை மற்றும் வளை (சங்கு) வாசிக்கின்ற விறலி என்று கூறுவதால் இசைக்கருவிகளைப் பயன்படுத்தும் விறலியர் இருந்துள்ளனர்.

இவர்களில் நன்றாக ஆடும் கலையை உணர்ந்தவர்களும் இருந்துள்ளனர். இவர்களைப் பதிற்றுப்பத்து பாடலடியானது, ''ஆடுக விறலியர் பாடுக பரிசிலர்'' என்று உரைக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 198) விறலியர் ஆடும் நங்கையராகவும் இருந்துள்ளனர் என்பது அறியமுடிகிறது. மேலும் விறலியருள் இனிமையாகப் பாடல் பாடும் திறன் பெற்றவர்களையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனைப்,

''**பாடுவல் விறலி ஓர் வண்ணம் நீரும்**'' (புறம்.பா.எ: 152.,வ: 13)

எனும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 322)

''………**இன்குரல்**

**பாடு விறலியர் பல்பிடி பெறுக**'' (பதிற்.பா.எ: 43.,வ.ள்: 21-22)

எனும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 198)

''**ஒருதிறம் பாடல் நல் விறலியர் ஒல்குடி நுடங்க**'' (பரி.பா.எ: 17.,வ: 15)

எனும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 335) விறலியின் பாடும் வல்லமையை உணர்த்துகின்றன.

விறலியர் பாடல் பாடும் பெண்ணாகவும், ஆடும் நங்கையாகவும், இசைக்கருவிகளை மீட்டும் அல்லது வாசிக்கும் பெண்ணாகவும் விளங்கியுள்ளனர்.

இத்தகைய விறலியர் பாணர் சுற்றத்துடனே வாழ்ந்து பாண்மரபினராகவே வாழ்ந்தனர். மேலும் பாண்மரபினரின் குடும்பத் தலைவியராகக் கற்பு நெறி தவறாது வாழ்ந்த நெறிசார் விறலியராகவும் சிலரை சங்கஇலக்கியம் பதிவு செய்துள்ளது என்று கூறுவதன்மூலம் விறலியரும் பாணரின் மனைவியராக இருந்திருத்தல் கூடும் என்று முடிபுகொள்ள இடமளிக்கிறது.

### 3.11.2. சுற்றங்களோடு விளங்கிய பாணர்

பாணர் எப்பொழுதும் தன்னுடைய சுற்றத்துடனேயே கூட்டம் கூட்டமாகச் சென்றும், தங்கியும் வாழ்ந்துள்ளனர். இத்தகைய நிலையை நாடோடி வாழ்க்கை என்று ஆய்வறிஞர்கள் குறிக்கின்றனர். பாணர் தம்முடைய உணவுத் தேவைக்கும், வாழ்வின் அடிப்படை ஆதாரங்களுக்கானத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளவும் பிறரை நாடி வாழ்ந்துள்ளனரே அன்றி, அவர்கள் உழைக்கின்ற மக்களாகவோ, அல்லது உழைத்துப் பொருளீட்டும் மக்களாகவோ காணப்படவில்லை. உழைப்பை நம்பி வாழாத இப்பாணர் கூட்டம் சீறூர் மன்னர்களையும், வள்ளல்களையும் குறுநில மன்னர்களையுமே பெரிதும் அண்டி வாழ்ந்துள்ளது. சில வேளைகளில் வேந்தர்களையும் நாடிச் சென்றுள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. இத்தகைய பாணர் ஓரிடத்தில் தங்கிவாழாத நிலையை,

> "**நெடிய என்னாது சுரம் பல கடந்து**
> **வடியா நாவின் வல்லாங்குப் பாடி**
> **பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி**
> **ஓம்பாது உண்டு கூடம்பாது வீசி**
> ***வரிசைக்கு வருந்தும் இப்பரிசில்வாழ்க்கை***" (புறம்.பா.எ: 47.,வ.எ்: 2-5)

எனும், வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 126) 'சுற்றம் அருத்தி' எனும் சொற்கள் பாணர் சுற்றம் செல்லும் பாதையின் தூரம் அதிகம் என்றாலும், அதனைக் கடந்து தாம் திறமையாகப் பாடி பரிசில் பெற்றுத் தன்னுடைய சுற்றத்திற்கும் அளித்து வாழ்ந்துள்ளனர் என்று உணர்த்தப்படுகின்றன. மேலும் இப்பாணர் ஓரிடத்தில் நிலையாக வாழ்தலன்றி நாடோடி வாழ்வையே மேற்கொண்டுள்ளனர். இதனை,

> "***ஆனினங் கலித்த அதர் பல கடந்து***" (புறம்.பா.எ: 138.,வ: 1)

எனும் வரியானது, சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 291) காட்டு எருதுகள் நிறைந்து இருக்கின்ற வழிகள் பலவற்றையும் கடந்து வந்துள்ளனர். ஆதலால், பாணர் நாடோடி வாழ்க்கையே வாழ்ந்துள்ளனர். மேலும் அவர்கள் நிலைத்தன்மை அற்ற வாழ்வினை வாழ்வதற்குப் பெரிதும் காரணம், அவர்களின் வறுமைநிலையே ஆகும்.

இத்தகைய பாணரின் சுற்றத்தைச் சங்கஇலக்கியங்கள் ஒக்கல், கடும்பு, சுற்றம் என்னும் சொற்களால் பதிவுசெய்கின்றன. இதனைப்,

> "***பாணன் சூடிய பசும் பொற் றாமரை***" (புறம்.பா.எ: 141.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலில், காணமுடிகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 297) பரிசில் பெறுவதற்கு எங்கு செல்ல வேண்டுமென்று முடிவெடுக்க முடியாமல் தவிக்கும் கூட்டம் எனப் பாணர் கூட்டத்தினைக் குறிக்க ‘ஒக்கல்’ எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலும்,

“**பசிதினத் திரங்கிய வொக்கலு முவப்ப**” (புறம்.பா.எ: 159.,வ: 21)

எனும் வரியும், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 339) பசியால் வருந்திய தனது சுற்றமும் மகிழ என்று கூறுவதன்மூலம், பாணர் சுற்றமுடன் வாழ்ந்தமை வெளிப்படுகிறது. இதேபோன்று,

“**இரும்பாண் ஒக்கல் கடும்பு புரந்த தூஉம்**” (புறம்.பா.எ: 224.,வ: 3)

எனும் அடியும், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 54) பாணரின் சுற்றத்தைக் குறிக்கின்ற ‘ஒக்கல்’ மற்றும் ‘கடும்பு’ என்னும் இரண்டு சொற்களைப் பயன்படுத்தப்பட்டுள்ளன. மேலும் பாணரின் சுற்றத்தைக் குறிக்கக் ‘கடும்பு’ எனும் சொல்லும் பரவலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தகுந்தது. இதனைப்,

“**பண்ணமை நல்யாழ்ப் பாண்கடும்பு அருத்தி**” (புறம்.,பா.எ: 170.,வ: 13)

எனும் அடியானது, குறிப்பிடுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 366) பண் பொருந்தின நல்ல யாழினையுடைய பாணர் சுற்றம் என்று பொருளுணர்த்துகிறது. இதேபோன்று,

“**பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை**” (புறம்.பா.எ: 173.,வ: 2)

எனும் அடியும் சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 374) இந்தப் பரிசிலனது சுற்றத்தினது வறுமையை என்று குறிப்பதன்மூலம் பாண் சுற்றத்தைக கடும்பு எனும் சொல்லால் சுட்டப்பட்டமை அறியமுடிகிறது. இதனை,

“**உண்ணா வறுங்கடும் புய்தல் வேண்டின்**” (புறம்.பா.எ: 181.,வ: 7)

எனும் அடியும், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 395) ஒரு பாணன் மற்றொருவனிடம், உண்ணப்பெறாத வறிய உன்னுடைய சுற்றம் உண்டு பிழைத்தல் வேண்டும் என்றால், இப்பொழுதே நீ பண்ணனிடம் செல்வாயாக! என்று கூறுவதன்மூலம் பாணரின் வறுமை நிலையுடன் கூடிய சுற்றத்தின் நிலையற்ற வாழ்க்கை முறையைக் கடும்பு எனும் சொல் உணர்த்துகிறது.

பாணரின் கூட்டத்தினைச் சங்கஇலக்கியங்கள் ‘ஒக்கல்’ என்றும், ‘கடும்பு’ என்றும் குறிப்பதைப்போலச் சுற்றம் என்றும் குறிப்பதனைக், “கல்லென் சுற்றம்” என்று பெரும்பாணாற்றுப் படையும், “பைதற் சுற்றம்” என்று புறம் - 212ம் பாடலும் உணர்த்துகின்றன. இதுபோலவே பாணரின் கூட்டத்தினைக் குறிக்கக் கிளை எனும் சொல் வழங்கப்பட்டுள்ளது. இதனைப்,

“**பாணர் வருக! பாட்டியர் வருக!**

**யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென**

**இருங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்**” (மது.கா.,வ.ள்: 749-751)

எனும் அடிகள், புலப்படுத்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 224) இக்கிளை எனும் சொல் இன்றும் மக்களிடையே பயன்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது.

சங்கப்பனுவல்கள் உணர்த்தும் ‘ஒக்கல்’, ‘கடும்பு’, ‘சுற்றம்’, ‘கிளை’ ஆகிய சொல்லாடல்கள் மூலம் பாணர் எப்பொழுதும் தன்னுடைய பெரிய சுற்றத்துடனேயே வாழ்ந்து வந்துள்ளனர் என்றும், அவர்கள் தங்களுடைய வாழ்வியல் தேவைகளுக்காக நாடோடி வாழ்க்கை முறையை வாழ்ந்துள்ளனர் என்றும், பெறப்படுவதன் வாயிலாகப் பாணர் கூட்டம், கூட்டமாக வாழும் பெருஞ்சுற்றம் உடையவர் என்பது புலனாகிறது.

### 3.11.3. பாணர் இனக்குழுச் சமுதாயத்தினர்

இனக்குழுச் சமுதாயம் என்பது குழு வாழ்க்கை முறையைப் பின்பற்றி வாழும் மக்கள் கூட்டம் ஆகும். இத்தகைய குழுவாழ்க்கை வாழ்வோரின் தொழில்முறையைக் கொண்டும், வாழுகின்ற இடத்தினை அடிப்படையாகக் கொண்டும் அவர்களின் இனப்பெயர் வழங்கப்பட்டது. இதனை,

“**நிலப் பெயர், குடிப்பெயர், குழுவின் பெயரே**

**வினைப்பெயர், உடைப்பெயர், பண்புகொள்பெயரே**

**பல்லோர் குறித்த முறைநிலைப் பெயரே**

**பல்லோர் குறித்த சினைநிலைப் பெயரே**

**பல்லோர் குறித்த திணைநிலைப் பெயரே**

**கூடிவரு வழக்கின் ஆடு இயற்பெயரே**

**இன்று இவர் என்னும் எண்ணியற் பெயரோடு**

**அன்றி அனைத்தும் அவற்று இயல்பினவே**”(தொல்.,சொல்.,நூ.எ:650.,வ.ள்:1-8)

எனும் கூற்றின் வாயிலாக, அறியமுடிகிறது. (ச. வே. சுப்பிரமணியன்.,1998: 251) இனப்பெயர் என்பது திணை, குடி, தொழில் முதலான பல்வேறு கூறுகளோடு தொடர்புப்படுத்தப்பட்டு வழங்கப்பெற்றுள்ளது. (பக்தவத்சல பாரதி.,2015: 42) எனவே தொல்காப்பியக் கூற்றின்படி பாணர் எனும் இனப்பெயரானது தொழில்சார் பெயராக அமைந்துள்ளது. மேலும் ஒவ்வோர் இனக்குழுவும் அல்லது சமூகமும் அதற்கான பெயரையும், அடையாளத்தையும் கொண்டிருப்பது அச்சமூகத்தின் தனித்துவத்தைக் காட்டுகிறது. ஏனெனில், பெயரிடுதல் என்பதே மனித குலத்தில் நிலவும் மிகப் பழமையான, பரவலான அடையாளப்படுத்தும் முறையாகும். இதனடிப்படையில், பாணரின் இனப்பெயரைத் தொழில் அடிப்படையில் உருவான பெயர் எனக் கொள்ள இடமளிக்கிறது. (பக்தவத்சல பாரதி.,2015: 1) எனவே ஒவ்வொரு சமூகத்திற்குமான பெயர் (ethnonym) அதன் அடையாளத்திற்கான அடிப்படையாகும் என்பதும் புலனாகிறது.

பாணர் இனமும், தங்களின் அடையாளத்தை தங்களுடைய பெயரைக்கொண்டு நிறுவுகின்றனர். இத்தகைய பாணர் தங்களுடைய வாழ்வாதாரத்திற்காக வள்ளல்களையும், குறுநில மன்னர்களையும் மற்றும் சீறூர் மன்னர்களையும் நாடி வாழ்ந்துள்ளனர். அதிலும் குறிப்பாகச் சீறூர் மன்னர்களையேப் பெரிதும் அண்டி வாழ்ந்த சமூமாகவே இலக்கியங்கள் பாணரைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. சீறூர்மன்னர் சமுதாயம் இனக்குழுச் சமுதாயத்தின் எச்சமாகக் கருதப்படுவதினால், அவர்களுடனேயேப் பெரிதும் அண்டி வாழும் பாணர் கூட்டத்தினையும் இனக்குழுச் சமுதாய எச்சமாகக் கருத வாய்ப்பளிக்கிறது. மேலும், இப்பாணர் கூட்டமாக வாழும் பெரியசுற்றம் உடையவர்கள் என்பதைக்கொண்டும் இவர்களை இசைக்குழுச் சமூகத்தின் எச்சமாகக் கருத இடமளிக்கிறது.

இசைத் தொழிலைத் தவிர மீன்பிடித்தலும், வேட்டையாடுதலும் பாணரை இனக்குழுச் சமுதாயத்தின் எச்சம் எனக் கூறமுடிகிறது. இனக்குழுச் சமுதாயத்தினரின் தலையாய பண்புகளுள் ஒன்றான பகிர்ந்துண்ணுதல், பொதுவில் உண்ணுதல் போன்ற பழக்கவழக்க முறைகளும், பிறருக்குக் கொடுத்து வாழும் பழக்கமும் இவர்களை இனக்குழுச் சமுதாய எச்சமாகக் கருத முக்கிய காரணிகளாகின்றன.

### 3.12. பாண் மரபினர்

எப்பொழுதும் சுற்றத்துடன் இருக்கும் பாணர் பெரிய மரபினரைக் கொண்டோர் ஆவர். இப்பாணர் சமூகத்துள் கலையை நிகழ்த்தும் தொழிலை அடிப்படையாகக் கொண்டவர்களே அதிகமாகக் காணப்பட்டனர். அவர்களுள் பாடல்பாடுபவரும், இசைக்கருவிகளை

இசைப்பவரும், பாடல்களுக்கேற்ற ஆடும் கலைஞர்களும் உள்ளனர் என்று இலக்கியங்கள் பலவாற்றானும் உணர்த்துகின்றன. அத்தகைய பாண்மரபினராக பாணர், பொருநர், கூத்தர், விறலியர், கோடியர், வயிரியர், கண்ணுளர், கிணைவர், துடியர், அகவுநர், கட்டுவிச்சியர், சென்னியர், குறுங்கூளியர், நகைவர், வேலன், அகவலன், அகவர், இயவர் போன்றோர் வகைப்படுத்தப்பட்டுள்ளனர்.

**3.12.1. பாணர்**

பாணர் எனும் இக்கலைஞர்கள் பாடுவதிலும் இசைக்கருவிகள் கொண்டு இசைப்பதிலும் வல்லமையுடையவர்கள். இப்பாணர் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் என வகைப்படுத்தப்படுகின்றனர். இசைப்பாணர் எனும் வாய்ப்பாணர் இசைப்பாடல் பாடுவதில் வல்லவர்கள் ஆவர். யாழ்ப்பாணர் என்போர் சிறிய யாழையும், பெரிய யாழையும் மீட்டும் வல்லமை கொண்டவர்கள் ஆவர். மண்டைப்பாணர் என்போர் மண்டை எனும் பாத்திரம் கொண்டு அதன்மூலம் தாங்கள் பிடித்த மீனினைப் பண்டமாற்றம் செய்து வாழ்ந்துள்ளனர் என்று சங்கஇலக்கியங்கள் சுட்டுகின்றன.

**3.12.2. பொருநர்**

பொருநர்கள் பிறவகைக் கலைஞர்களிடமிருந்து சற்று வேறுபட்டவர்கள். இவர்கள் அரசர்களோடும் தலைவர்களோடும் நெருக்கமான உறவு கொண்டிருந்தனர். போரிலும் அரண்மனையிலும் பொருநர்கள் அரசர்களுடன் அருகில் இருந்தனர். மற்ற கலைஞர்களைவிட பொருநர்கள் குறைவாகவே வெளியிடங்களில் அலைந்து திரிந்தனர். இப்பொருநர் போரில் ஈடுபாடு உடையவர்கள் என்பதைக்,

> **“கடற் படை யடற் கொண்டி**
> **மண்டுற்ற மறனோன்றான்**
> **தண்சோழ நாட்டுப் பொருநன்**
> **அலங்குளை யணியிவுளி**
> **நலங்கிள்ளி நசைப் பொருநரேம்**
> **பிறர்ப்பாடிப் பெறல் வேண்டேம்”** (புறம்.பா.எ: 382.,வ.எ்: 1-6)

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 395) சோழன் நலங்கிள்ளியைப் பாடுவதன்றிப் பிறரைப் பாடுவதில்லை என்று ஒரு பொருநன் கூறுகிறான். இவன் போர்க்களம் பாடும் பொருநன் ஆவான்.

பொருநருள் பரணி பாடும் பொருநரும், ஏர்க்களம் பாடும் பொருநரும் உள்ளனர் என்பதையும் சங்கஇலக்கியங்கள் பதிவுசெய்கின்றன. இதனை வலியுறுத்தும் வகையில், 'பொரு' என்னும் வேர்ச்சொல்லுக்கு மற்ற பொருள்களோடு, போரிடு, ஒத்திரு என்ற பொருள்களும் உண்டு எனக் கூறும் க. கைலாசபதியின் கூற்றிலிருந்து (2006: 140) பொருநர் போர்க்களம் பாடுபவராகக் காணப்படுவதன் மெய்ம்மை புலனாகிறது.

### 3.12.3. விறலியர்

விறலி என்னும் சொல்லுக்கு "உள்ளக்குறிப்புப் புறத்து வெளிப்பட ஆடுவாள்" என்று தமிழ்ப்பேரகராதி பொருள் உணர்த்துகின்றனர். (க. காந்திதாசன்.,2011: 70) மேலும் விறலியர் என்னும் சொல் பெரும்பாலும் வெற்றி, வலிமை, மேம்பாடு எனப் பொருள்படும் 'விறல்' எனும் சொல்லிலிருந்து பெறப்பட்டதாகலாம் என்றும் கூறுகின்றனர். (க. கைலாசபதி.,2006: 152) இவ்விறலியர் முழவு, யாழ், தூம்பு, எல்லரி, ஆகுளி, பதலை முதலான அனைத்து இசைக் கருவிகளையும் இசைக்க வல்ல ஆற்றல் படைத்தவர்கள் என்பதைப்,

"**பாடுவல் விறலியோர் வண்ண நீரும்**
**மண்முழா வமைமின் பண்யாழ் நிறுமின்**
**கண்விடு தூம்பிற் களிற்றுமின் தொடுமின்**
**எல்லரி தொடுமி னாகுளி தொடுமின்**
**பதலை யொருகன் பையென வியக்குமின்**
**மதலை மாக்கோல் கைவலந் தமினென்**" (புறம்.பா.எ: 152.,வ.எ: 13-18)

எனும் இவ்வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 321-322) இது விறலியின் திறமையை எடுத்துரைப்பதாக அமைகின்றன. மேலும்,

"**பாடுவல் விறலி ஓர் வண்ணம் நீரும்**" (புறம்.பா.எ: 152.,வ: 13)

எனும் வரியாலும் அறியமுடிகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 321-322) இதன் வாயிலாக, விறலியர் ஆடல், பாடல், இசைக்கருவிகளை இசைத்தல் என்று பல்திறன் கொண்டவர்களாக இருந்தனர் என்பது புலனாகிறது.

### 3.12.4. கூத்தர்

கூத்து ஆடியவர் கூத்தர் எனப்பட்டனர். தொல்காப்பியர் கூறும் நால்வகை இசைக் கலைஞர்களில் கூத்தரும் ஒருவர். இவர்கள் பாடுவதோடு ஆடவும் செய்தனர். இவர்கள் யாழ், முழவு, ஒருகண்கிணை, பெருவங்கியம், குழல் உள்ளிட்ட இன்னும் பலகருவிகள் கூத்தர்களின்

பைகளில் கட்டப்பட்டிருந்தன என்று பதிற்றுப்பத்தின் பாடலடிகள் உணர்த்துகின்றன. அதுபோல மத்தளம், சிறுபறை, கஞ்சதாளம், பீலி, நெடுவங்கியம், தூம்பு, சல்லிகை, கரடிகை போன்ற கருவிகளும் எப்போதும் தம்முடன் வைத்திருந்தனர்.

இவர்கள் சிற்றூர்களில் பொதுஇடமாகிய ‘மன்று’ அல்லது ‘மன்றம்’ எனும் ஆடுகளத்தில் ஆடிப்பாடி ஊர் மக்களை மகிழ்வித்துள்ளனர். இக்கூத்தர்கள் பெருஞ் சுற்றத்துடன் குழு குழுவாகச் சென்று கிராமங்களில் திருவிழாக்கள், விளையாட்டுக்கள், படைவீரர்களின் பாடியிருப்புகள் ஆகியவற்றில் பங்கேற்றனர். மேலும் இவர்கள் நாட்டுப்புறக் கூத்து, சடங்குசார் கூத்து, தெய்வக்கூத்து, போர்க்கூத்து எனப்பல நிலைகளில் கூத்துக்களை நிகழ்த்தியுள்ளனர். (பக்தவச்சல பாரதி.,2015: 79) இக்கூத்தரின் பணிகளாகத் தொல்காப்பியம்,

> ‘‘**தொல்லவை உரைத்தலும், நுகர்ச்சி ஏத்தலும்**
> **புல்லாற்றானும் ஊடலின் தணித்தலும்**
> **உறுதி காட்டலும், அறிவு மெய்நிறுத்தலும்,**
> **ஏதுவின் உணர்த்தலும், துணிவு காட்டலும்,**
> **அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன**’’ (தொல்.பொருள்.கற்.,நூ.எ: 166.,வ.ள்:1-5)

எனும் நூற்பாவினால், அறியமுடிகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 302)

- ❖ முன்னோர்களின் வரலாற்றை எடுத்துரைத்தல்
- ❖ குடும்ப வாழ்வின் தலைவன் தலைவி நுகர்ச்சியைப் புகழ்தல்
- ❖ தலைவன் தலைவியர் இடையிலான ஊடலைத் தணித்தல்
- ❖ வாழ்க்கை உறுதிகளைக் காட்டல்
- ❖ கேட்போர் அறிவினை மெய்ம்மையில் நிறுத்துதல்
- ❖ காரண காரியங்களோடு உணர்த்துதல்
- ❖ துணிவு காட்டுதல், உறுதிப்படுத்துதல்
- ❖ அழகு நிலை உணர்த்துதல் போன்றவை கூத்தரின் கூற்றுகள் என்று உரைப்பதோடு மட்டுமல்லாமல், அவர்களின் பணியாகக் கருதுகின்றது. மேலும்,

> ‘‘**நிலம்பெயர்த்து உரைத்தல், அவள்நிலை உரைத்தல்**
> **கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய**’’ (தொல்.பொருள்.கற்.,நூ.எ:167.,வ.ள்:1-2)

எனும் நூற்பாவால், உணரமுடிகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 302) தாம் வாழும் இடத்திலிருந்து நெடுந்தொகை பயணம் செய்து தலைவன் இருக்குமிடம் அடைந்து தலைவி பற்றி அவளது நிலையை விரிவாக எடுத்துரைப்பது புலனாகிறது. இதன்மூலம் கூத்தர்க்குப் பாணர்க்கும் உரிய பணிகளை அறியமுடிகிறது.

### 3.12.5. கோடியர்

பாணர் சமூகத்துள் கோடியர் என்போர், ஊதுகொம்பு போன்ற கருவியாகிய ‘கோடு’ இசைத்து ஆடிய கலைஞர் எனப்பட்டனர். கோடு என்பது விலங்குகளின் கொம்பினைக் குறிக்க சங்கஇலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. அதுபோலவே கோடு என்பது யாழ்த்தண்டு, ஊது கொம்பு என்றும் பொருள் கூறப்பட்டுள்ளன. இக்கோடு எனும் கருவியை இசைப்பதால் இவர்களுக்குக் கோடியர் எனப் பெயர் வழங்கலாயிற்று. (பக்தவத்சல பாரதி.,2015: 81) இவர்கள் கொம்பு முழங்கும் கோடியர், முழவு இசைக்கும் கோடியர், யாழ் இசைக்கும் கோடியர், தொகுசொல் கோடியர் எனப் பலவாறு வழங்கப்பட்டுள்ளனர்.

மேலும், இவர்கள் கோடு என்னும் இசைக்கருவி மட்டுமன்றிச் சகல இசைக் கருவிகளையும் இசைக்கும் திறன் பெற்றவர் என்பதனைப்,

“**பல்இயக் கோடியர் புரவலன் பேரிசை**” (சிறுபாண்.,வ: 125)

எனும் வரியால் அறியமுடிகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1953: 33) இதுபோலவே,

“**ஆடுமயில் முன்னதாகக் கோடியர்**

……………………………………

***முழவன் போல அகப்படத் தழ்கி***” (அகம்.பா.எ: 352.,வ.எ்: 4-6)

எனும் வரிகள், உரைக்கின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2007: 117) இவர்கள் முழவு இசைக்கும் கோடியர் என வழங்கப்பட்டுள்ளனர். மேலும் பறை இசைக்கின்ற கோடியரைக்,

“**கடும்பறைக் கோடியர் மகாஅர் அன்ன**” (மலைபடு.,வ: 236)

எனும் வரியானது உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 102) கோடியருள் பல்வேறு இசைக்கருவிகளை வாசிப்பவர்களைச் சங்கஇலக்கியங்கள் சுட்டிச்செல்கின்றன. யாழிசைக்கும் கோடியரை நற்றிணைப் பாடல் ஒன்று உணர்த்துகிறது. அதில் கோடியர் இசைக்கும் யாழ் இசையொலி வேட்டுவனின் வலையில் அகப்பட்ட கணந்துள் என்ற பறவையின் ஒலிபோல இருக்கும் என்பதனைப்,

"**பார்வை வேட்டுவன் படுவலைவெரீஇ**

**நெடுங்கல் கணந்துள் அலம்புலம்பு கொள்**

**சுரம் செய் கோடியர் கதுமென இசைக்கும்**

**நரம் பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்**" (நற்.பா.எ: 212.,வ.எ்: 1-4)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (அ. நாராயணசாமிஐயர்.(உ.ஆ).,1952:266) இத்தகைய கோடியர் தங்கள் கலைத்திறனை மக்கள் அதிகம் வந்து கூடும் இடமாக விளங்கும் விழாக்களில் வெளிப்படுத்தியுள்ளனர். இதனை,

"**ஆடுமயில் முன்னது ஆக கோடியர்**

**விழவுகொள் மூதூர் விறலி பின்னற**

**முழவன் போல அகப்படத் தழீஇ**" (அகம்.பா.எ: 352.,வ.எ்: 4-6)

எனும் அடிகள், குறிப்பிடுகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2007: 117) விறலியர் முழவினை இசைக்கக் கோடியர் மூதூர் விழாக்களில் கூத்தாடுவர் என்பது உணர்த்தப்படுகிறது. மேலும்,

"**முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த**" (பட்டினப்.,வ: 253)

எனும் அடியானது, முதுவாய்க் கோடியரைச் சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 85) இம்முதுவாய்க் கோடியரே மன்னனை வாழ்த்திப்பாடி அவரின் பெருமைகளைத் தொகுத்துக் கூறியமையால் தொகுசொற் கோடியர் எனப்பெயர் பெற்றனர்.

### 3.12.6. வயிரியர்

வயிர் என்பது மூங்கில் என்ற சொல்லைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இம்மூங்கிலால் செய்யப்பட்ட கருவியை இசைத்தவர்கள் வயிரியர் எனப்பட்டனர். இவர்கள் முழவினையும் இசைத்துள்ளனர். மேலும் இசைக்கருவியை இசைப்பது மட்டுமன்றி நன்கு பண்ணமைத்துப் பாடல் பாடுவர் என்பதை,

"**வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ**" (பதிற்று.பா.எ: 29.,வ: 8)

எனும் வரியால் அறியமுடிகிறது. (பக்தவத்சல பாரதி.,2015: 80) இவ்வயிரியரின் இசைக் கருவியிலிருந்து எழும் ஓசையானது மயில் அகவுவதுபோல ஒலிக்கும் என்பதனைக்,

"**கலிமயில் அகவும் வயிரமருள் இன்னிசை**" (நெடுநல்.,வ: 99)

எனும் வரியால் அறியமுடிகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 51) மேலும் இவர்கள் பாணர்களோடு இணைந்தே இக்கருவியை இசைத்துள்ளனர் என்பதைப்,

"**பாணர் வருக பாட்டியர் வருக**

**யாணர்ப் புலவரொடு வயிரியர் வருக**" (மது.கா.,வ.ள்: 749-750)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 224) இவ்வயிரியர் வாழ்த்திப் பாடும் இசைக்கருவியைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதைத்,

"**திண்காழ் வயிர் எழுந்து இசைப்ப**" (திருமுரு.,வ: 120)

எனும், வரியால் அறியமுடிகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 71) மேலும் இவ்வயிரியர் பாணர், பாடினியர், கண்ணுளர், பொருநர் என ஒவ்வொரு குழுவினரோடும் வெவ்வேறு சூழல்களில் இணைந்து இயங்கியுள்ளனர்.

**3.12.7. கண்ணுளர்**

கண்ணுளர் என்போர் இசையோடு கூத்து நிகழ்த்துபவர்கள் ஆவர். கதை கூறும் நாடகக் கலைஞர்கள் என்றும், மாறுவேடம் பூண்டு ஆடும் கூத்தர்கள் என்றும் அறிஞர்கள் கருத்து தெரிவிப்பதன்மூலம் கண்ணுளர் கூத்துப் பரம்பரையினர் என்று குறிக்கப்படுகின்றனர். இவர்கள் ஆடல், பாடல் இரண்டிலும் வல்லவர்கள் என்பதை மலைபடுகடாம் உணர்த்துகிறது. மேலும், தொல்பழங்காலச் சடங்கு நடனமான, சாந்தித் கூத்தைக் கண்ணுளர் நிகழ்த்தினர். மேலும், கண்ணுளர் வயிரியருடன் இணைந்து சென்றனர் என்பதை,

"**விரியுளை மாவும் களிறும் தேரும்**

**வயிரியர் கண்ணுளர்க்கு ஓம்பாது வீசி** (பதிற்.பா.எ: 20.,வ.ள்: 16-17)

எனும் வரிகள்மூலம், அறியமுடிகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 60) வயிரியருடன் கண்ணுளர் இணைந்து சென்று பாட்டும் கூத்தும் நிகழ்த்திப் பரிசில் பெற்றுள்ளனர். இத்தகைய கண்ணுளரின் பெயர்க்காரணமாக மதுரைக்காஞ்சியில் நச்சினார்க்கினியர் "பார்ப்போரின் கண்ணைக் கவர்வதால் கண்ணுளர்" எனப் பெயர் பெற்றதாகக் குறிக்கின்றார். மேலும் சிலப்பதிகாரம் கண்ணுளர் எனும் சொல்லுக்கு அறிவார்ந்த ஓவியர்களையும் சித்திர வேலைக்காரர்களையும் குறிக்கின்றது. (க. காந்திதாசன்.,2011: 91) மேலும் க. கைலாசபதி, கண்ணுளர் என்ற சொல் சங்ககாலத்தில் கூத்தர் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுப் பிற்காலத்தில் பல பொருண்மைகளில் பயன்படுத்தப்பட்டது என்று

கூறுவதன்மூலம், கண்ணுளர் என்போர் கூத்தரே ஆயினும் அவர்கள் பாண்மரபினரின் வரிசையில் வருபவர் என்பது தெளிவுறுகிறது.

3.12.8. இயவர்

இவர்கள் 'இயம்' எனும் இசைக்கருவியை இசைத்தவர்கள் ஆவர். மேலும் இவர்கள் போர்க்களத்திற்குச் செல்லும் முன்னர் முரசிற்கு வழிபாடு செய்யும் தகுதி பெற்றவர்கள். 'இயம்' என்பது முரசை ஒத்ததொரு தோற்கருவி ஆகும். இதனைக்,

"***கடியிடி உருமின் இயம் கறங்க***" (கலி.பா.எ: 105.,வ: 24)

எனும் வரியால் அறியமுடிகிறது. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 332) மேலும் இவர்கள் தட்டை, தண்ணுமை, குழல் போன்ற பல்வேறு இசைக்கருவிகளையும் இசைத்துள்ளனர். இதனைத்,

"***தட்டைத் தண்ணுமைப் பின்னர் இயவர்***

***தீங்குழல் ஆம்பலின் இனிய இமிரும்*** (ஐங்.பா.எ: 215.,வ.ள்: 4-5)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 318) இவர்கள் ஆம்பல் பண்கொண்டு குழலில் பண் இசைத்துள்ளனர் என்பதை,

"***இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்***

***ஆம்பலங் குழலின் ஏங்கிக்***" (நற்.பா.எ: 113.,வ.ள்: 10-11)

எனும் நற்றிணைப் பாடலடிகள் உணர்த்துகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 141) இத்தகைய இயவர்கள் பகைவரை வென்று கொண்டுவரும் முரசிற்குக் குருதிப்பலி கொடுத்து முதலாவதாக இசைக்கும் தகுதியும் பெற்றிருந்தனர் என்பதைச்,

"***செங்கள விருப்பொடு கூல முற்றிய***

***உருவச் செந்தினை குருதியொடு தூஉய்***

***மண்ணுறு முரசங் கண்பெயர்த் தியவர்***

***கடிப்புடை வலத்தர் தொடித்தோ ளோச்ச***" (பதிற்.பா.எ: 19.,வ.ள்: 5-8)

எனும் வரிகள் மெய்ப்பிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 50) இயவர்கள் மன்னருக்கு அருகிலிருந்து இசைக்கருவிகளை இசைக்கும் தகுதியைப் பெற்றவர்களாக இருந்துள்ளனர். இயவர்கள் பல்வேறு இசைக்கருவிகள் இசைக்கவும், முரசுக்குப் பலியிடும் முதன்மையும், முரசு முழக்கவும், அரசனுக்கு அருகில் இருந்து இசைக்கும் வாய்ப்பும்,

போர்க்களங்களில் இசைக்கும் உரிமையும் பெற்றவர்களாக விளங்கினர் என்பதை அறியமுடிகிறது.

### 3.12.9. கிணைவர்

கிணைப் பறையைக் கொட்டியவர்கள் கிணைவர் என்று அழைக்கப்பட்டனர். மேலும் கிணைவன் என்றும், கிணைமகன் என்றும் கிணையர் என்றும் பலவாறு வழங்கப்பட்டுள்ளனர். இவர்கள் வள்ளல்களைப் பாடித் துயில் எழுப்பும் பணியைச் செய்துள்ளனர். போர்க்களத்தில் வீரர்களுக்கு ஊக்கமூட்டவும் கிணைப்பறையை இசைத்துள்ளனர். மேலும் மலைநிலத்தில் உள்ள பயிர்களைக் காக்கும் பொருட்டு யானைகளை விரட்டவும் கிணைப்பறையை வாசித்துள்ளனர். (பக்தவத்சல பாரதி.,2015: 85)

ஒய்மாநாட்டு வில்லியாதனைப் புகழ்ந்து துயிலெழுப்பும் கிணைவனை,

**“நெல்லமல் புரவின் இலங்கை கிழவோன்**

**வில்லி யாதன் கிணையேம் பெரும்**

……………………………………

**வல்லன் எந்தை பச்சீர்த்தல் எனக்**

**கொன்வரல் வாழ்க்கை நின் கிணைவன் கூற**” (புறம்.பா.எ: 379.,வ.ள்: 6-11)

எனும் வரிகள், உரைக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 385-386) வில்லியாதனின் கொடைத் தன்மையினையும், கிணைவனின் துயில்எழுப்பும் திறனும் புலப்படுகின்றது. மேலும்,

**“இரும்பறைக் கிணைமகன் சென்றவன் பெரும்பெயர்**

***சிறுகுடி கிழான் பண்ணன் பொருந்தி***” (புறம்.பா.எ: 388.,வ.ள்: 3-4)

எனும் வரிகள், கிணைவர்கள் வள்ளல்களைச் சார்ந்துள்ள நிலையை விளக்குகின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 418) கிணைவர்கள் பறையடித்துப் போர்வீரர்களை ஊக்கமுறச் செய்துள்ளனர் என்றும், யானைகளைப் பறையடித்து விரட்டியுள்ளனர் என்றும் இதன் வாயிலாக அறியமுடிகிறது.

### 3.12.10. துடியன்

துடியன் எனும் இக்குடியினர் துடி என்னும் பறைக் கருவியை வாசிப்பவர்களாக விளங்கியுள்ளனர். இவர்களைத்,

**“துடியன் பாணன் பாறையன் கடம்பன் என்று**

**இந்நான் கல்லது குடியும் இல்லை**'' (புறம்.பா.எ: 335.,வ.ள்: 7-8)

எனும் அடிகளால், உணரமுடிகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 268) தொல்குடிகளுள் முதன்மையானவராகக் கருதப்படுபவர்கள் துடியன் எனும் குடியினர் என்பது புலனாகிறது. இவர்கள் அரசனுடைய அரண்மனையிலும், அவனுடன் போர்க்களத்திலும் இடம் பெற்றிருந்தனர்.

இத்தகைய துடியன் போரின் தொடக்கத்தைத் தெரிவிப்பதற்குத் துடியை இசைப்பான். மேலும் இத்துடியன் போர்க்களத்தில் துடியினை இசைத்து வீரர்களுக்கு வீர உணர்வு ஏற்றுவான். அதுமட்டுமல்லாது, துடியன் குடியினர் பெரும்பாலும் பாணன், விறலியுடன் சேர்ந்து சென்று வள்ளல்களைக் கண்டு பரிசில் பெற்றுள்ளனர். (பக்தவத்சல பாரதி.,2015: 86) இப்பெரிய சுற்றத்தினரைக் காக்கும் தலைவன் இறந்துவிட்டால், அவர்களின் நிலை என்னவாகுமோ? என்று வருந்துவதால், துடியன் குடியினர் பாணர் சுற்றத்துடனேயே இருந்துள்ளனர் என்பதைத்,

''**துடிய பாண பாடுவல் விறலி**

**என்னா குவிர்கொ லளியிர் நுமக்கும்**

**இவணுறை வாழ்க்கையே வரிதே**.........'' (புறம்.பா.எ: 280.,வ.ள்: 8-10)

எனும் இவ்வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 160) பாணன் ஒருவன், துடி கொட்டுபவனே, பாண்மகனே, பாடல்வல்ல விறலியே எங்ஙனமாவீர்களோ? இரங்கத்தக்கீர். இதுகாறும் இருந்தாற்போல இவ்விடத்தே இருந்து வாழலாமென்பது உங்கட்கும் இனி அரிதாம் என்று கூறுகிறான். இது பாண்சுற்றத்துடன் அவர்கள் வாழ்ந்துள்ள நிலையையும், அவர்களின் வறுமைநிலையையும் உணர்த்துகிறது. இத்தகைய துடியன் குடியினர் பெரும்பாலும் போர்க்களத்தோடு தொடர்பு கொண்ட நிலையைத்,

''**துடியன் கையது வேலே**'' (புறம்.பா.எ: 285.,வ: 2)

''**உவலைக் கண்ணித் துடியன் வந்தென**'' புறம்.பா.எ: 269.,வ: 6)

''**சிறாஅஅர் துடியர் பாடுவன் மகாஅஅர்**'' (புறம்.பா.எ: 291.,வ: 1)

எனும் இவ்வடிகள் உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 171-184) துடியன் குடியினர் போர்க்களத்தில் காணப்பட்ட நிலையையும், அவர்கள் துடிப்பறை கொட்டும் முறையும் பாணருடன் இணைந்து வாழ்ந்த முறையும் உணர்த்துகிறது.

### 3.12.11. பறையன்

பறையன் என்போரும் தொல்குடி மக்களில் ஒருவராவர். மேலும் இவர்கள் தமிழ் இனக்குழு வரலாற்றின் முதன்மையான இனக்குழுவினராவர். இசைத்த கருவியின் பெயரால் இவர்களும் பெயர் பெற்றுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் ஆரம்ப காலத்தில் குறிஞ்சி, முல்லை நிலத்திற்கு உரியோராய் இருந்து பின்பு அனைத்து நிலங்களுக்கும் பரவினர். ‘பறை’ என்னும் இசைக்கருவிகளை இயக்கியவன் பறையன் எனப்பட்டான். இப்பறை எனும்சொல் சங்கஇலக்கியங்களில் நூறு இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்று குறிக்கின்றனர். (க. காந்திதாசன்.,2011: 95) பறையன் எனும் குடியினரும் சங்கப்பாடல் உணர்த்தும் நால்வகைக் குடியினருள் ஒருவர் என்பது பெறப்படுகிறது.

### 3.12.12. அகவர்

இவர்கள் மன்னர்களின் போர்த்திறம், படைபலம், வீரம், புகழ், ஆட்சித்திறம் முதலானவற்றைப் புகழ்ந்துபாடி பரிசில் பெறும் பாண் சமூகத்தார் ஆவர். மேலும் இவர்களும் மன்னனைத் துயில் எழுப்பும் பணியினை மேற்கொண்டுள்ளனர். இதனை,

“**மறம் கலங்கத் தலைச் சென்று**

**வாள் உழந்து அதன்தாள் வாழ்த்தி**

**நாள் ஈண்டிய நல் அகவர்க்குத்**

**தேரோடு மா சிதறி**” (மது.கா.,வ.எ்: 221 - 224)

எனும் வரிகளால், அறியமுடிகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 98-99) இதில் தலையானங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைத் துயில் எழுப்பியுள்ளனர். இவ்அகவர்கள் முல்லை நிலத்து உழவர்களாகவும் இருந்துள்ளனர் என்பதைக்,

“**கானவர் மருதம் பாட அகவர்**

**நீள்நிற முல்லைப் பல்திணை நவல**” (பொருந.,வ.எ்: 220 – 221)

எனும் அடிகள் மூலம் அறியமுடிகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 100) அகவர்கள் மன்னனைத் துயில் எழுப்பும் பணியினையும், உழவுத்தொழிலும் செய்தனர் என்பது உணரப்படுகிறது.

### 3.12.13. அகவுநர்

அகவுநர், அகவலர் அல்லது அகவர் என்னும் சொற்கள் மயிலைப்போல் ஒலியெழுப்பிப் பாடு, அழை, கூவு எனப் பொருள்படும் ‘அகவு’ என்னும் வினையடியாகத் தோன்றின. (க. கைலாசபதி.,2006: 158) இவர்கள் வளமிக்க புரவலர்களை நோக்கித் தம்மை ஒத்தத் தொழிற் கலைஞர்களால் ஆற்றுப்படுத்தப்பட்டு நாடு சுற்றிவரும் கலைஞர்கள் ஆவர். மேலும் இவர்கள் பாண்வகையினர் என்றும் கூறப்படுகின்றனர். (க. கைலாசபதி.,2006: 158) இவர்கள் பாடுவதோடு இசைக்கருவிகளையும் இசைக்கக் கூடியவர்கள். இவர்கள் கிணை, பறை, குழல், முழவு, யாழ் போன்ற இசைக்கருவிகள் இசைத்துள்ளனர். இதனை,

“**விசிபிணித்து யாத்த அரிகோல், தெண் கிணை**

**இன்குரல் அகவுநர் இரப்பின்**” (அகம்.பா.எ: 249.,3-4)

எனும் அடிகளும், (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 302)

“**பகர்குழல பாண்டில் இயம்ப அகவுநர்**

**நாநவில் பாடல் முழவு எதிர்த் தன்ன**” (பரி.பா.எ: 15.,வ.எ்: 42-43)

எனும் அடிகளும் முறையே அகவுநர் இசைக்கருவிகளை இசைத்தமையை விளக்கி நிற்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 311-312) மேலும், அகவுநர் கையில் நுண்கோல் வைத்திருந்தனர். இதனைக்கொண்டு இவர்கள் குறி சொல்லும் பழக்க முடையவர்கள் என்பதை,

“**நுண்கோல் அகவுநர்ப் புரந்த பேரிசை**” (அகம்.பா.எ: 152.,வ: 4)

“**நுண்கோல் அகவுநர் வேண்டின் வெண்கோட்டு**

**அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்**” (அகம்.பா.எ: 208.,வ: 3-4)

எனும் அடிகள் மெய்ப்பிக்கின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944:79&207) இதனையே,

“**அகவன் மகளே! அகவன் மகளே!**” (குறுந்.பா.எ: 23.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலும் உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ)., 2007: 60-61) அகவுநர் என்போர் கையில் நுண்கோல் கொண்டுப் பாடும் வழக்கம் கொண்டிருந்தனர் என்றும், இவர்கள் பாடுவதோடு இசைத்தல் தொழிலிலும் வல்லவர்களாகக் காணப்படுவதும் புலனாகிறது.

3.12.14. சென்னியர்

சென்னியர் என்போர் பாண் சமூகத்தவரே என்று இலக்கியங்கள் பதிவு செய்கின்றன. இதனைத்,

> "**தம்மலது இல்லா நம்நயர்து அருளி**
>
> **இன்னும் வாரார் ஆயினும் சென்னியர்**" (நற்.பா.எ: 189.,வ.ள்: 1-2)

எனும் அடிகள், விளக்குகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 237) உண்கலத்தைக் கொண்ட சீறியாழ்ப்பாணர்களே சென்னியர் என விளக்குகிறது. மேலும் இவர்கள் மதத் தேவைகளுக்காகப் பாடும் பாடகர் என்று சிவத்தம்பி குறிப்பிடுவதன் மூலமும், இவர் பாடும் பாண் சமூகத்தைச் சார்ந்தவர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர். இவர்கள் அருவியில் மலர்ந்த நல்ல ஆம்பல் மலரைச் சூடியவர் என்று கூறுவர். (பக்தவத்சல பாரதி.,2015: 90) இதனை,

> "**அருவி ஆம்பல் மலைந்த சென்னியர்**" (பதிற்.பா.எ: 62.,வ: 17)

எனும் அடியால் அறியமுடிகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 295) இச்சென்னியர் பாடல் புனையும் ஆற்றல் பெற்றவரும், இசைக் கருவிகளை இசைக்கத் தெரிந்தவர்களாகவும் விளங்குவதால், இவர்கள் பாண்மரபினர் என்று குறிப்பிடப்படுகின்றனர். இவர்கள் அனைவரும் வள்ளல்களையும் குறுநில மன்னர்களையும், வேந்தர்களையும், பாடிப் பரிசில் பெற்றுத் தம் வாழ்வாதாரத்தைத் தேடியவர்கள். மேலும் இவர்கள் யாவரும் குழுவாகச் சென்று இரந்துண்ணும் இயல்பினை உடையவர்கள் என்று சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. இப்பாண்மரபினர் ஓரிடத்தில் நிலைத்து வாழும் தகுதியினைப் பெறவில்லை என்றாலும், இவர்கள் சிறு சிறு குழுக்களாகவே பிறரை நாடிச் சென்றுள்ளனர். தாம் பெற்ற இன்பத்தைத் தம்மைப் போலத் தேடித் திரிபவருக்குக் கூறுகின்றமையால் இவரின் ஒற்றுமையுணர்வும், குழுவாழ்க்கையின் இயல்பும் புலனாகிறது. எனவே பாணரோடு சேர்ந்த பொருநர், கூத்தர், விறலியர், துடியன், பறையன், கோடியர், வயிரியர், இயவர், கிணைவர், அகவர், அகவுநர், சென்னியர் என்று பலரும் பாண்சமூகத்தினரே என்பது இதன் வாயிலாகப் பெறப்படுகிறது.

3.13. இசையால் நிலைத்த பாண் சமூகம்

பாண் மரபினர் ஓரிடத்தில் நிலையான வாழ்வைப் பெற்றதில்லை. இவர்கள் உணவுக்காகவும், பொருளுக்காகவும் ஊர் தோறும் சுற்றித் திரிந்தனர். இவ்வாறு சுற்றித்திரிந்தபடியே தங்கள் வாழ்வை வாழப்பழகினர். மேலும் இவர்கள் நிலையான

உழைப்பின் மூலம் பெறும் பொருளைத் தேட முயலாதவர்கள். உடல் உழைப்பினைக் கொண்டு வாழத் தலைப்படாதவர்கள். பிறரைச் சார்ந்தபடியே வாழும் தன்மையை ஏற்றுக் கொண்டவர்கள். இவ்வாறெல்லாம் கூறுவதற்குக் காரணியாக விளங்கும் இப்பாண் சமூகத்தினர் இன்றளவும் தமிழ் மொழியில் நிலைத்திருப்பவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு இவர்கள் நாடோடிகளாக வாழ்ந்தாலும் இவர்களின் சமூகப் பிணைப்பும், அவரின் நினைப்பும் உருவாகக் காரணம் இலக்கியங்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. சங்ககாலச் சமூக அமைப்பில் பாணர் சமூகத்தினர் நிலைக்கக் காரணம் அவர்களின் இசைக்கும் திறனும், இசைத்திறனும் ஆகும்.

### 3.14. முடிவுரை

சங்ககாலச் சமூகம் இனக்குழுக்களாக மக்கள் வாழ்ந்த சமூகம். இனக்குழுமக்களின் பகுத்துண்ணும் பண்பும், பாதீடு செய்யும் முறையும் பாணரிடமும் காணப்படுகின்றன.

பாணர் பெருஞ்சுற்றமாக வாழ்ந்தனர் என்பதாலும், அவர்களின் பழக்கவழக்ங்கள் அக்காலச் சமூகத்தினைப் பின்பற்றியதாகக் காணப்பட்டதாலும் இனக்குழவினர் என்று ஏற்கமுடிகிறது. இனக்குழு மக்களின் நடுகல் வழிபாடும் பாண்மரபினரிடம் காணப்படுவதும் முக்கிய காரணியாகிறது.

இவ்இனக்குழு மக்களுக்குத் தலைவனாக இருந்தவர்களே பின்னாட்களில் சீறூர் மன்னர்களாகப் போற்றப்பட்டனர். சீறூர்ச் சமுதாய மக்களும் பாண் சமூகத்தை ஆதரித்துள்ளனர். பாணரை ஆதரிப்பதற்காகவே அவர்கள் வேந்துவிடு தொழில்மேல் சென்றனர்.

இப்பாண்மரபினர் பல வகையினராகக் கருதப்படுவதுடன் பல்வேறு இசைக்கருவிகளை இசைப்பவராகவும் விளங்குகின்றனர். இவ்இசைக்கருவிகளைின பெயரைக்கொண்டே பாண்மரபினரின் பெயர்கள் வழங்கப்படலாயின.

பாணர் சமூகத்தினருள் அனைவரும் இசைஅறிவும், இசைக்கும் அறிவும், இசைக்கருவிகளை இயக்கும் அறிவும் இயற்கையாகவே பெற்றிருந்தனர். இசையைக் கற்றுக்கொள்ள அவர்கள் எங்கும் செல்லவில்லை. அவர்களின் வாழ்வில் ஒவ்வொரு நொடியும் இசை அவர்களுடன் வாழ்ந்தது என்று கூறுமளவு பாணர் இசையுடன் வாழ்ந்தனர். இவ்இசையாலே பாண்சமூகம் பல நூற்றாண்டுகள் கடந்தும் தமிழ்ச் சமூகத்தில் நிலைபெற்று வாழ்ந்தது.

இப்பாண்சமூகத்தினர் பல்வேறு வகையினராக, பல்வேறு தொழில்சார் மரபினராகக் காணப்பட்டாலும், அவர்களை இச்சமூகத்துடன் இணைத்திருப்பது இசையே ஆகும். பாடல்

புனையும் ஆற்றலும், இசைக்கருவிகளை இசைக்கும் திறனும் இப்பாண் சமூகத்தினரை நிலைத்திருக்கச் செய்த காரணிகள் ஆகும்.

இப்பாணர் சமூகத்தின் இசையறிவின் ஆற்றலைக், கூர்த்த இசைநுட்பத்தை அறிய, அவர்கள் பெற்ற பரிசில்களே சான்றாக அமைகின்றன. மேலும் சீறூர் மன்னர்களும், வள்ளல்களும், குறுநில மன்னர்களும் இப்பாண் சமூகத்தினரைப் பெரிதும் ஆதரித்த போக்கு இவர்களின் வாழ்வை நிலைக்கச் செய்தது எனலாம். வள்ளல்களின் இத்தகைய தன்மைக்குக் காரணம், கல்விக்கு அவர்கள் வழங்கிய இன்றியமையாமையே ஆகும். மேலும் வறுமையைப் புறக்கணிக்க நினைத்த நினைவின் விளைவே, இப்பாண் சமூகத்தினர் உருவாகவும், சமூகத்தில் நிலைத்து நிற்கவும் அடிப்படைக் காரணியாக அமைந்தது என்பதை அறியமுடிகிறது.

## இயல்: 4. பாணர் மரபின் சமூகநிலைப்பாடு

### 4.0. முன்னுரை

இனக்குழுக்களாக வாழ்ந்த பாண்மரபினர் தம் இசையறிவாலும், ஆற்றுப்படுத்தும் திறனாலும், பகிர்ந்தளிக்கும் பண்பாலும் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்ந்தனர். சார்ந்து வாழும் குழுவாழ்க்கை முறையே பாணரின் வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்கியது. ஆயினும் பொருள் வேண்டி இடம் விட்டு இடம் பெயர்ந்து செல்லும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். பறவை விலங்குகளைப் போல் இறைதேடிச் செல்லும் நாடோடிகளாக வாழ்ந்தனர். ஆதலால் அவர்கள் வறுமையின் பிடிக்குள் சிக்குண்டவர்களாகவே காணப்பட்டனர். வறுமையும், ஏழ்மையும் மட்டுமே பாணரின் அடையாளச் சின்னமாக விளங்குமளவு இல்லாமையால் துயருற்றனர். பொருள்வேண்டி நாடிச்சென்ற வள்ளல்கள் வாரி வாரி வழங்கினாலும், பாணரின் பெஞ்சுற்றத்திற்கு முன் அப்பரிசில்கள் போதாமையைத்தான் தந்தன. அதனால்தான் அவர்கள் எப்போதும் பொருளைத் தேடி ஊர் ஊராகச் சுற்றித்திரிந்தனர். அத்தகைய பாணரின் சமூகநிலைப்பாட்டினை இவ்வியல் ஆராய்கின்றது.

### 4.1. பாணரின் குழுவாழ்க்கை முறை

பாணர்கள் நிலையான வாழ்வாதாரத்தைப் பெறாதவர்கள். அவர்கள் தங்கள் பசித்துயரைத் தீர்ப்பவர்களின் இடம் தேடி ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தனர். அவ்வாறு செல்லும் போது தன் சுற்றம் முழுமையையும் உடன் அழைத்துச் சென்றனர். அவர்கள் எண்ணிலடங்கா இசைக்கருவிகளை இசைப்பவர் ஆதலால், அதனையும் உடன்சுமந்து சென்றவண்ணம் வள்ளல்கள் இடம் நாடிச்சென்றனர். பாணர் இசைக்கருவிகளைச் சுமப்பவராகவும், அதனை இசைப்பவராகவும் காணப்படுகின்ற சுற்றமாக விளங்கினர். இத்தகைய குழுவாழ்க்கை முறையை இசையின் அடிப்படையிலேயே பின்பற்றினர். இவ்வாறு சுற்றித்திரியும் பாண் கூட்டத்தைப் பழுமரம் தேடி அலையும் வௌவால்களோடு ஒப்பிடப்படுகின்றனர். இதனைப்,

> "**பழுமர முள்ளிய பறவை போல**" (புறம்.பா.எ: 370.,வ: 11)

எனும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 351)

> "**கனிபொழி கானம் கிளையொ டுணீஇய**
>
> **துனைபறை நிவக்கும் புள்ளின மானப்**" (மலைபடு.,வ.ள்: 54-55)

எனும் வரிகளும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 50)

“**பழுமர முள்ளிய பறவையின்**…” (பொருந.,வ: 64)

எனும் வரியும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 47)

“**பழுமரந் தேரும் பறவை போலக்**” (பெரும்பாண்.,வ: 20)

எனும் வரியும், உணர்த்துகின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 46) பாணர்கள் எப்போதுமே குழுவாகச் சென்றார்கள் (polycrates). இவர்களின் பாடலும் ஆடலுமாகிய நிகழ்த்துப் படைப்பானது ‘கூட்டு அனுபவம்’ சார்ந்தது என்று கூறப்படுகின்றன. (பக்தவத்சலபாரதி.,2015: 21) பாணர்கள் ஊர் ஊராகச் சென்று ஆடிப்பாடிப் பிழைக்க வேண்டியவர்கள் என்பதைச்,

“**சாறுகழி வழிநாள் சோறுநசை உறாஅது**

**வேறுபுலம் முன்னிய விரகுஅறி பொருந**” (பொருந.,வ.ள்: 2-3)

எனும் வரிகளும், (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 25) மேலும்,

“**பல்லூர் பெயர்வனர் ஆடி ஒல்லெனத்**

**தலைப்புணர்த்து அசைத்த பல்தொகைக் கலைப்பையர்**” (அகம்.பா.எ: 301.,வ.ள்: 21-22) எனும் வரிகளும் விளக்குகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 7) பாணர் பல ஊர்களுக்கும் சுற்றித் திரிந்தது போலவே பாணர் ஐவகை நிலங்களைச் சுற்றித் திரிந்தனர் என்பதை,

“**ஆனினங் கலித்த அதர்பல கடந்து**

**மானினங் கலித்த மலையி னொழிய**

**மீனினங் கலித்த துறைபல நீந்தி**

**உள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்,,**

**சிதாஅர் உடுக்கை முதாஅரிப் பாண**” (புறம்.பா.எ: 138.,வ.ள்: 1-5)

எனும் வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 291) பாணர் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்து வாழ்வாதாரத்தைத் தேடிக் கொள்ளும் பெருஞ் சுற்றத்தினர் என்பதும், இவர்களின் இக்குழு வாழ்க்கைமுறைக்கு ஆதாரம் இசையாகும் என்பதும், இசையை ஆதாரமாகக் கொண்ட கூட்டமாதலால் இவர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்ந்தனர் என்பதும், அவ்வாறு அவர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழக்காரணம் அவர்களின் வறுமை நிலையே என்பதும் இதன் வாயிலாகப் பெறப்படுகிறது.

#### 4.1.1. இசையை ஆதாரமாகக் கொண்டகூட்டம்

பாண்மரபினர் என்னும் சொல்லுக்குள்ளேயே இசை எனும பொருள் உள்ளது. எனவேதான் பாணர் இசையை ஆதாரமாகக் கொண்ட கூட்டமாக விளங்கினர். பாணர் பயன்படுத்திய இசைக்கருவிகளாக மலைபடுகடாம் பல இசைக்கருவிகளை உணர்த்துகிறது. அக்கருவிகளுள் தோல்கருவிகளும், துளைக்கருவிகளும், நரம்புக்கருவிகளும் எனப் பல வகையான கருவிகள் குறிப்பிடப்படுகின்றன.

**அவையாவன:** சிறுபறை, கஞ்சதாளம், கொம்பு, நெடுவங்கியம், தூம்பு, குழல், கரடிகை, பேரிகை, சல்லிகை, படகம், இடக்கை, உடுக்கை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முடிவு, சந்திரவளையம், மொந்தை, முரசு, கண்விடுதூம்பு, நிசாளம், துடுகை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு, பரகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெரும்பறை, எனும் கருவிகளுடன் யாழும் கூறப்பட்டுள்ளன. இவ்எண்ணற்ற இசைக்கருவிகளை இசைக்கத் தெரிந்தவர்கள் பாண்மரபினர் ஆவர். அவர்களின் கலை நிகழ்த்தும் தொழிலுக்கு இக்கருவிகளும், அதனால் எழுப்பப்படும் இசையும் ஆதாரமாக அமைகின்றன. இசைக்கருவிகளின் துணையோடு 21 வகையான துறையமைந்த பாடல்களைப் பாடுவதிலும் வல்லவர்கள் பாணர்கள் என்பதை,

"**மூவேழ் துறையு முறையுளிக் கழிப்பிக்**" (புறம்.பா.எ: 152.,வ: 20)

என்னும் வரி, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 322) மேலும் விறலியர் யாழ், ஆகுளி, பதலை, குழல், முழவு போன்ற இசைக்கருவிகளைக் கூடையில் வைத்துக் காவடி போல இருபுறமும் தோளில் சுமந்து செல்வார்கள் என்பதை,

"**நல்யாழ் ஆகுளி பதலையொடு, சுருக்கிச்**

**செல்லாமோ தில் சில்வளை விறலி**" (புறம்.பா.எ: 64.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், குறிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 166) பாண்மரபினர் வள்ளல்களை நாடிச்செல்லும்போது அவர்களைப் வரவேற்றுள்ளனர் என்பதைப்,

"**பாணர் வருக பாட்டியர் வருக**" (மது.கா.,வ: 749)

என்னும் வரி, பகருகின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 224) எனவே பாணர் பெருஞ்சுற்றத்தினர் ஆவர். விறலியர் எனும் பாண் மரபின் பெண்மக்கள் ஆடுவதிலும் பாடுவதிலும் இசைக்கருவிகளை இசைப்பதிலும் திறமை மிக்கவர்களாக காணப்பட்டனர் என்பதை,

**“ஆடுசிறை அறுத்த நரம்புசேர் இன்குரல்**

**பாடுவிறலியர் பல்பிடி பெறுக”** (பதிற்.பா.எ: 43.,வ.ள்: 21-22)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 198) பாண்மரபினரான பாணர், பொருநர், கூத்தர், விறலியர், கோடியர், வயிரியர், கண்ணுளர், கிணைவர், துடியர், அகவுநர், சென்னியர், குறுங்கூளியர், நகைவர், இயவர் போன்றோர் குழுவாக வாழும் வாழ்க்கை முறையை மேற்கொண்டனர். அவர்களின் இக்குழு வாழ்க்கைமுறையே அவர்களைப் பசித்துயரிலிருந்து மீட்டெடுக்கும் கருவியாகவும் விளங்கியது. மேலும், இசைக்ககருவிகளை இசைக்கத் தெரிந்த பாண்மரபினரே அவ்இசைக்கருவிகளைச் செய்திருப்பர் என்பதைக்,

**“கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை**

**வள்ளுயிர்த் தண்ணுமைபோல”** (நற்.பா.எ: 310.,வ.ள்: 9-10)

எனும் வரிகள், விளக்குகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 383) கன்றைத் தோல்உரித்து அத்தோலைத் தண்ணுமை எனும் தோற்கருவியாக வடிவமைத்துள்ளனர். பாண்மரபினர் பாடல் பாட மட்டும் தெரிந்தவர்கள் அல்ல. அவர்கள் பாடலுடன், இசைக்கவும் ஆடவும் தெரிந்ததுபோலவே அக்கருவிகளை உருவாக்கும் புத்திகூர்மை பெற்றவர்கள் என்பதும் புலப்படுகிறது.

### 4.1.2. ஒருவரை ஒருவர் சார்ந்து வாழவேண்டிய தேவை

பாணர் கூட்டமாக வாழ்ந்த காரணத்தினால், அவர்களின் அனைத்துத் தேவைகளும் அளவுக்கு அதிகமாகவே தேவைப்பட்டன. அதன் காரணமாகவே அவர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழத்தலைப்பட்டனர். இதன் அடிப்படையில் உருவானதே ஆற்றுப்படையின் இலக்கணம் ஆகும். இதனைக்,

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**

**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**

**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**

**சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்”** (தொல்.பொருள்.புறத்.,நூ.எ: 88.,வ.ள்:3-6)

எனத் தொல்காப்பியமும் உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 146) பரிசில் பெற்ற ஒருவன் பரிசில் பெற விளையும் மற்றொருவனுக்கு ஆற்றுப்படுத்துவதாக தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண்டவர்கள் பாணர். இவர்கள் தங்களுக்குள் மட்டும் ஒருவரை

ஒருவர் சார்ந்து வாழவில்லை. இவர்கள் ஊர் ஊராக சுற்றித்திரிந்த இடங்களில் உள்ள மக்களையும், சீறூர்த் தலைவர்களையும், குறுநில மன்னர்களையும், வள்ளல்களையும், பெருவேந்தர்களையும் சார்ந்து வாழ்ந்தனர். எனவேதான் அவர்கள் தாம்பெற்ற பொருள் வளத்தைப் தன்னைச் சுற்றியுள்ள அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்து வாழும் பண்புடையவர்களாகக் காணப்பட்டனர். மேலும் மன்னன் ஒருவன் மிக்க பரிசில் வழங்குவான் எனில், அவனைக் காணத் தன்னுடன் வருவாயோ? என்று அழைக்கும் குணமுடையவளாக விறலியர் விளங்குகின்றனர்.

அதேபோன்று ஒரு விறலி மற்றொரு பாண்மகளாகிய விறலியிடம் சேரமன்னன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காணச் செல்வோமா? என்று கேட்கிறாள். இதனைச்,

"**செல்லா மோதில் பாண்மகள் காணியர்**" (பதிற்.பா.எ: 60.,வ: 3)

எனும் பாடல்வரி உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 283) பாண்மரபினர் இவ்வாறு சார்ந்து வாழக்காரணம் அவர்களின் வறுமை நிலையே ஆகும். தம்முடைய வறுமைத் துயரைப் போக்கிக்கொள்ளவே அவர்கள் பிறரைச் சார்ந்து வாழ வேண்டிய சூழலுக்குத் தள்ளப்பட்டனர். உண்ண உணவும் உடுக்க உடையும் போதிய அளவு இல்லாமையே அவர்கள் பிறரை நாடிச் செல்லவேண்டிய தேவை ஏற்பட்டது. பாணர் தம் வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படைத் தேவைகளுக்காக மட்டுமே பிறரைச் சார்ந்துள்ளனர் என்பதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இப்பாண் மரபினர் தேடிச் சென்ற இடங்களின் கொடூரமும், அதனைக் கடந்து சென்ற அவர்களின் பொறுமையும், சகிப்புத்தன்மையும் அவர்களின் தேவையின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்றது. இதனை,

"**உடும்பு உரித்துஅன்ன என்டிஎழு மருங்கின்**

**கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது**" (புறம்.பா.எ: 68.,வ.எ: 1-2)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 174) பாணரின் கடுமையான பசித்துயரையும், அவர்கள் பலநாட்கள் பசியால் வாடியதால் அவர் உடம்பு உடும்பினைத் உரித்தது போன்று காணப்பட்டது என்றும் உணர்த்துகின்றன. மேலும் அவர்கள் உடுத்திய ஆடையினைக்,

"**கையது கடன்நிறையாழே: மெய்யது**

**புரவலர் இன்மையின் பசியே, அரையது**

**வேற்று இழைநுழைந்த வேர்நனை சிதாஅர்**

**ஓம்பி உடுத்த உயவல் பாண!**

**பூட்கை இல்லோன் யாக்கை போலப்**

**பெரும்புல் லென்ற இரும்பேர் ஒக்கலை**'' (புறம்.பா.எ: 69.,வ.ள்: 1-6)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 177) கையில் இலக்கண முறைமை நிரம்பிய யாழை வைத்திருப்பதைக் கடமையாகக் கொண்டவன் பாணன். அவன் உடுத்தியிருந்த ஆடையின் நூலோடு ஒட்டாத வேற்று நூலால் தைத்துக் கிழிந்து நைந்துபோன ஆடையை உடுத்தியவனாகக் காணப்பட்டான். அவன் பசியால் வாடும் உடம்பினைக் கொண்டவனாகவும், எப்பொழுதும் தன் சுற்றத்துடனேயே அலைந்து திரிபவனாகவும் விளங்கினான். இது பாணரின் வறுமையை உணர்த்துவதோடு, அவர்கள் ஓரிடத்தில் நிலையான வாழ்வைப்பெற இயலாமைக்கும், பிறரைச் சார்ந்தே வாழவேண்டிய தேவைக்கும் ஆளாகினர் என்று புலனாகிறது.

**4.2. பாணரின் வறுமை வாழ்வு**

பாணர் என்றாலே வறுமையும் உடன் ஒட்டி வருகின்ற மொழியாக அமையும் அளவிற்கு அவர்களின் வறுமை வாழ்வைச் சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. இதனைத்,

''**தொன்றுபடு துளையொடு பருவிழை போகி**

**நைந்து கரை பறைந்த என் உடையும் நோக்கி**'' (புறம்.பா.எ: 376.வ.ள்:10-11)

எனும் வரிகள், புலப்படுத்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 373) பாணரின் உடையானது நைந்தும், கிழிந்தும், பழமையுற்று இழைகள் எல்லாம் தெரியும்படிக் கிழிந்துபோன ஆடையாக இருந்தமையை உணர்த்துகிறது. மேலும், அவர்களுக்குப் புத்தாடை வழங்கியதை,

''**விரும்பிய முகத்த னாகி என் அரைத்**

**துரம்பு படு சிதாசுர் நீக்கித் தன் அரைப்**

**புகை விரிந்தன்ன பொங்கு துகில உடீஇ**'' (புறம்.பா.எ: 398.,வ.ள்: 18-20)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 460) பாணனின் கிழிந்த ஆடையைக் களைந்து தன்னுடைய புகையைப் போன்ற ஆடையை வஞ்சன் வழங்கினான் என்றுரைப்பதன் வாயிலாகப் பாணரின் வறுமைநிலை வெளிப்படுகிறது. அவர்களின் பசித்துயரை வள்ளலகள் போக்கினர் என்பதைப்,

''**படுமடைக் கொண்ட குரந்தாள் உடும்பின்**

**விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் விதவை**

**யாணர் நல்லவே பாணரொடு ஓராங்கு**

**வருவிருந்து அயரும்**'' (புறம்.பா.எ: 326.,வ.எ: 9-12)

எனும் வரிகள், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 249) பாணரின் கடும்பசினை உடம்பின் கறியைத் தயிர் கொண்டு சமைத்துப் படைத்தனர். அதனைப் பாணரும் உண்டு மகிழ்ந்தனர் என்பதைப்,

''**பாண் உவப்பப் பசிதீர்த்தனன்**'' (புறம்.பா.எ: 239.,வ: 17)

எனும் வரியானது உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 87) மேலும் அவர்களின் பசிக்கு உணவாக ஊன் உணவு, தயிர், பழங்கள், தீயில் வருத்த தசைத் துண்டுகள், கள், அரிசியில் நெய் சேர்த்து செய்யப்பட்ட உணவு வழங்கப்பட்டது. இதனை,

''**வெள்ளத்திடும்பால் உள்ளூறை தொடரியொடு**

**களவுப் புளியன்ன விளைகள்**

**வாடூன் கொழுங்குறை**

**கொய்குறல் அரிசியொடு நெய்பெய்து அட்டுத்**

**துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோறு**

**ஊண்டு இனி திருந்த பிள்றை**'' (புறம்.பா.எ: 328.,வ.எ: 7-12)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 253) பாண் சுற்றத்தினர் பசி என்று வள்ளல்களை நாடிச் சென்றுள்ளனர். அவர்களின் பசிக் கொடுமையை வள்ளல்கள் நல்ல உணவினை வழங்கித் தீர்த்துள்ளனர். மேலும் அவர்களுக்கு ஆடைகள் வழங்கி அவரின் துயரைப் போக்கினர் என்று கூறுவதன் மூலம் பாண் மரபினரின் வறுமை நிலையை அறியமுடிகிறது.

### 4.2.1. ஏழ்மையை எடுத்துரைக்கும் அவலம்

வறுமைக்குள் சிக்கிய பாண் மரபினர் தங்களின் இயலாமையையும், ஏழ்மையையும் எடுத்துரைக்கின்ற அவலநிலைக்குத் தள்ளப்பட்டனர். இதனைக்,

''**கல்லென் சுற்றமொடு கால் கிளர்ந்து திரிதரும்**

**புல்லென் யாக்கைப் புலவுவாய் பாண!**'' (பெரும்பாண்.,வ.எ: 21-22)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 46) பசிமிகுதியால் அழுகின்ற பாண் சுற்றத்துடனே ஓரிடத்தில் இராமல் பயனின்றி ஓடித்திரிதலைச்

செய்தமையால் பொலிவிழந்த மேனியைக் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். இத்தகைய ஏழ்மையைத் தாம் தேடிச் செல்லும் வள்ளல்களிடம் எடுத்துக் கூறியுள்ளனர். இதனைப்,

"**பாணர் புரவல பரிசிலர் வெறுக்கை**" (பதிற்.பா.எ: 65.,வ: 11)

எனும் வரியானது, குறிப்பிடுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 309) பாண் குடும்பங்களைப் புரப்பவனே என்றும், பரிசிலர்க்குச் செல்வமாயிருப்பவனே என்றும் வள்ளல்கள் வாழ்த்தப் பெற்றனர். மேலும்,

"**பரிசிலர் வெறுக்கை பாணர் நாளவை**" (பதிற்: 4.,பா.எ: 8.,வ: 9)

எனும் வரியும், புலனாக்குகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1950: 163) பரிசில் மாக்கள் இனிது வாழ்தற்கு வேண்டும் செல்வமாயிருப்பவனே! என்றும், பாணர்கள் இருக்கும் நாளோலக்கத்தை உடையாய் என்றும் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் போற்றப்படுகிறான். இதேபோன்று,

"**ஆடநனி மறந்த கோடுய ரடுப்பின்**
**ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்**
**பாசு லின்மையிற் றோலொடு திரங்கி**
**கல்வி தளர்ந்த பொல்லா வறுமுலை**
**சுவைத்தொ நழூஉ ந்தன் மகத்துமுக நோக்கி**
**நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கெணன்**
**மனையோ ளெவ்வ நற்போர்க் குமணை**
**என்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைத்**" (புறம்.பா.எ: 164.,வ.ள்: 1-9)

எனும் வரிகளும், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 360) அடுப்பானது தன் எரியும் தன்மையை மறந்துபோகவும், பசியால் வாடிய தன் மனைவி மகவுக்குப் பால்கொடுக்க இயலாத நிலையும், பால் வராததால் சுவைத்துவிட்டு அழும் குழந்தையும், அதனைக் கண்டு அழுகின்ற மனைவியின் முகத்தையும் காணப் பொறாதவனாய் ஒரு பாணன் காணப்படுகிறான். அத்தகையவன் தன் வள்ளலைக்கண்டு, தன்னிலையை எடுத்துரைக்கிறான். தன்னுடைய இந்த வருத்தம் தீர்தற்கு வள்ளலை நாடி வந்துள்ளதாகக் கூறுவதனால் அவனின் ஏழ்மையையும், அதனை அவன் எடுத்துரைக்கின்ற அவலநிலையும் வெளிப்படுகின்றன. மேலும்,

"**யான் வாழ நாளும் பண்ணன் வாழிய**

**பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை**'' (புறம்.பா.எ: 173.,வ.ள்: 1-2)

எனும் வரிகளும், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 374) யான் உயிர் வாழும் நாளையும் பெற்றுப் பண்ணன் வாழ்வானாக என்று ஒரு பாணன் வாழ்த்துகின்றான். மேலும் அவனது சுற்றத்தினுடைய பசித்துயரைத் தீர்க்க வேண்டித், தன் எதிரே வருகின்ற பாண் கூட்டத்திடம் வினவுகின்றான். காண்பீராக இந்தப் பரிசிலரது சுற்றத்தின் வறுமையை என்று கூறுகின்றான். எம் பசியால் உண்டாகின்ற துன்பமும், வழிநடந்து வருவதால் உண்டாகின்ற துன்பமும் வாட்டுகின்றது. எனவே எம்முடைய பசி நோய் தீர்க்கும் மருத்துவனது மனை அணித்தோ? சேய்த்தோ? எங்களுக்கு நீங்கள் சொல்லுங்களேன் என்று கேட்பதன்மூலம் பாணர் தம் ஏழ்மையைத் தக்கோரிடம் எடுத்துரைக்கின்ற அவல நிலையை அறியமுடிகிறது.

### 4.2.2. ஆற்றுப்படுத்தும் திறம்

பாண் மரபினர் தங்களுக்குள் ஆற்றுப்படுத்தும் நல்ல நெறிமுறையைப் பின்பற்றியுள்ளனர். பரிசில் பெற்று வரும் ஒரு பாணன் பெற விரும்பும் ஒரு பாணனுக்குத் தான் பரிசில் பெற்றதைப் போல நீயும் பெறுவாயாக என்று கூறி வழிநடத்துவதையே ஆற்றுப்படுத்துதல் என்று கூறப்படுகிறது. அவ்வாறு சோழன் நலங்கிள்ளியிடம் பானன் ஒருவனை (வழிநடத்துவதாக) ஆற்றுப்படுத்துகிறான். இதனை,

''**உடும்புரித் தன்ன வென்பெழ மருங்கிற்**

………………………………………

………………………………………

…………………………………

**உறந்தை யோனே குருசில்**

**பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே**'' (புறம்.பா.எ: 68.,வ.ள்: 1-19)

என்னும் வரிகள், உணர்த்திச் செல்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 174-175) கோவூர் கிழார் ஒரு பாணனை ஆற்றுப்படுத்துகிறார். இங்கே என்ன செய்கின்றாயோ பாண? எனக் கேட்டுப்பின், உறையூரினைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிசெய்பவன் அவ்விறைவன். நீ அவனிடம் செல்வாயாக என்று ஆற்றுப்படுத்துகிறார். இதுபோலவே ஆலந்தூர் கிழார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனிடம் செல்லுமாறு பாணன் ஒருவனை ஆற்றுப்படுத்துகிறார். இதனைக்,

“**கையது கடனிறை யாழேமெய்யது**” (புறம்.பா.எ: 69.,வ: 1)

எனத்தொடங்கும் பாடல், விளக்குகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 177) பாணன் ஒருவனிடத்து, ஆலந்தூர் கிழார் இலக்கண முறைமையுடன் கூடிய யாழினைக் கையில் வைத்திருக்கும், நைந்துபோன வேற்றிழையால் தைக்கப்பட்ட கிழிந்த ஆடையை உடுத்தியுள்ள வருத்தத்தையுடைய பாணனே! பசித்துயரால் உடல் மெலிந்த பெரியசுற்றத்தைக் கொண்டவனே! என்று கூறுகிறார். அவனிடம் கிள்ளி வளவனிடத்துச் சென்றாயானால், அவனது நெடிய வாயிலின்கண் காலம் பார்த்து நிற்கத் தேவையில்லை. அவன் பரிசிலர்க்குத் தேர் வழங்கியிருக்கும் அழகினை உன் கண்ணாரப் பார்த்துப் பின் அவனை நீ கண்டால், வண்டுகள் மொய்க்காத பொற்றாமரைப் பூவினை வழங்குவான். ஆதலால் நீ அங்கு செல்வாயாக என்று ஆற்றுப்படுத்துகின்றார். இது ஒரு பாணன் தான் பெற்ற பெரும்பரிசிலைப் பிறரும் பெற விழைந்து ஆற்றுப்படுத்தும் திறத்தை வெளிப்படுத்துகின்றது.

புறம்-138ஆம் பாடலில், மருதன் இளநாகனார், நாஞ்சில் வள்ளுவனிடத்து ஒரு பாணனைச் செல்ல வேண்டி ஆற்றுப்படுத்துகிறார். அதில், வள்ளிய (சிறந்த) ஓசையை உடைய சிதாராகிய உடையை அணிந்துள்ள மூத்த பாணனிடம், நீ நாஞ்சில் வள்ளுவனிடத்து முன்னமொருமுறை சென்றிருந்தாலும், மீண்டும் இப்பொழுது செல்வதற்குத் தயங்க வேண்டாம். ஏனென்றால் அவன் கதிரவனுக்கு ஒப்பானவன். நின்னைப் பழைய பாணன் என்று கருதுவார் யாருமிளர். ஆகவே இனிது செல்க! என்று கூறி ஆற்றுப்படுத்துகிறார். (சு. துரைசாமிப்பிள்ளை.,1947: 291) இதேபோன்று,

“**பாணன் ஆடிய பசும்பொற் றாமரை**” (புறம்.பா.எ: 141)

எனத் தொடங்கும் பாடலும் சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 297) பேகனிடம் சென்று மிக்க பொருட்களைப் பரிசிலாகப் பெற்று வரும் பாணனைக் கண்ட ஒருவன் நீவிர் யாருடைய பாணரோ? என்று வினவுகின்றான். அதற்கு அவன் எம் இறைவன் பேகனாவான். அவன் மதங்கொண்ட யானைகளையும், செருக்கிய குதிரைகளையும் உடையவன். மயிலுக்குப் போர்வை நல்கியவன். அவன் பிறரது துன்பத்தைக் கருத்தில் கொண்டு கொடுப்பது அவனது கைவண்ணம் ஆகும் என்று ஆற்றுப்படுத்துகிறான்.

புறம்-155ஆம் பாடலில், (சு. துரைசாமிப்பிள்ளை.,1947: 328) கொண்கானங்கிழானின் வள்ளல் தன்மையை எடுத்துக்கூறி, ஒரு பாணனை ஆற்றுப்படுத்துகிறான். வளைந்த கோட்டையுடைய சிறிய யாழை தழுவியபடித் தன்னுடைய துன்பத்தைத் தீர்ப்பார் யார் என்று

கேட்கும் பாணனிடம் பாழூரின்கண் பூத்துள்ள பொன்னிறமான நெருஞ்சிபோன்று உதிக்கும் சூரியனைப் போன்றவன் கொண்கானங்கிழான். அவனிடம் செல்வாயாக! என்று ஆற்றுப்படுத்துகின்றான்.

சிறுகுடிக்கிழான் பண்ணன் என்பான் இருக்கும் மனை அணித்தோ? சேய்த்தோ? என்று பரிசில் பெற விரும்பும் பாணன் ஒருவன், பெற்றுத்திரும்பும் பாண் கூட்டத்தைக் கண்டு கேட்கிறான். இதனைப் புறம்-173ம் பாடல் உணர்த்துகின்றது. (சு.துரைசாமிப்பிள்ளை.,1947: 391)

ஈர்ந்தூர்க்கிழான் கோயமான் என்பான் பாணரின் பசிக்குப் பகைவன் என்று போற்றப்படுகின்றமையால் பாணரின் ஆற்றுபடுத்தும் திறன் வெளிப்படுகிறது. பாண் மரபினர் தம்மைப்போல் பிறரும் பசித்துயர் நீங்கி வாழவேண்டும் என்று எண்ணினர். அதனால் அவர்கள் தம்முடைய வள்ளல்களின் சிறப்பினை எடுத்துரைத்து அவனிடம் செல்லும்படி வழிநடத்தினர் என்பதை அவர்களின் ஆற்றுப்படுத்துதலால் அறியமுடிகிறது.

**4.2.3. வறுமைநிலைக்கான காரணங்கள்**

பாணரின் வறுமைநிலைக்கான காரணம் அவர்களின் நிலையில்லா வாழ்வாதாரமும் உழைத்துப் பிழைக்கத் தெரியாத நிலையும் ஆகும். பாணரின் வாழ்வு ஓரிடத்தில் நிலையான வாழ்வாக அமைந்ததன்று. மாறாக அவர்கள் பரிசாகப் பெற்ற நிலங்களைப் பண்படுத்தி உழைத்துப் பிழைத்ததாகவும் இலக்கியங்கள் உணர்த்தவில்லை. அவர்களுக்குப் பொன்னும், பொருளும், யானையும், குதிரையும், தேரும் பரிசாக வழங்கினர் என்றே எண்ணற்றப் பாடல்கள் உணர்த்துகின்றன. இதனால் பாண்மரபினர் இரந்துண்டு வாழவேண்டிய தேவை உருவானது. அதற்காக அவர்கள் இடம்பெயரும் வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டிய அவசியமும் உருவானது.

**4.2.4. நிலையான வாழ்வாதாரம் இன்மை**

பாணரின் வாழ்க்கையானது நிலையானது அன்று. அவர்களின் வறுமைநிலை அவர்களை ஓரிடத்தில் நிலைத்திருக்க இயலாத நிலையைத் தோற்றுவித்தது. எனவே அவர்கள் இடம்விட்டு இடம் பெயர்ந்து ஊர் ஊராய்ச் சுற்றித்திரியும் அவலநிலைக்கு ஆளாயினர். எனவே தான் சங்ககாலத்தில் ஊர் ஊராகச் சுற்றி வாழ்ந்த ‘ஊர் சுற்றும் வல்லுநர்கள்’ (travelling specialists) அதாவது பாண் சமூகத்தினர் பல்கிப் பெருகியிருந்தனர். (பக்தவத்சலபாரதி.,2014: 131) இதனைக்,

**“கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த**

**சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து**'' (புறம்.பா.எ: 60.,வ.ள்: 4-5)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.,1947: 157) காட்டில் வாழும் மயிலைப்போல சுரத்திடைப் பொருந்திய சிலவாகிய வளையையுடைய விறலியும் நானும் என்று ஒரு பாணன் குறிப்பிடுகிறான். எனவே வெப்பம் மிகுந்த காட்டுவழியே பாண்சுற்றம் புரவலர்களைத் தேடிச் சென்றுள்ளது என்பது வெளிப்படுகிறது. மேலும்,

''**களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை**'' (புறம்.பா.எ: 64.,வ: 3)

எனும் வரி, போர்க்களம் சென்ற பாணரைக் குறிக்கிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.,1947: 166) அவர்கள் யானைகள் அணிதிரண்டு போரிடும் அகன்ற இடமாகிய போர்க்களத்தில் பாசறைக்கண் தங்கியிருக்கும் மன்னனைக் கண்டு பரிசில் பெறச் சென்றுள்ளனர். இத்தகைய பாண்சுற்றம் வன்புலச் சமுதாயத்துடன் வறுமையில் உழன்றுகொண்டு இருக்கிறது. அப்பொழுது கோவூர்கிழார் சோழன் நலங்கிள்ளியைச் காணச்செல்லுமாறு ஆற்றுப்படுத்துகிறார். இதனை,

''**உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்**'' (புறம்.பா.எ: 68.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 174 - 175) இதில் சோழனின் நாடாகிய சோறுடை நாட்டினுக்குச் செல்லச் சொல்லியிருப்பது குறிப்பிடத்தக்கது. அதாவது மருதநிலப் பகுதிக்குச் செல்ல வழி காட்டப்பட்டுள்ளது. இவ்வாறு பாண்சுற்றம் தங்களின் வாழ்வாதாரத்திற்காக இடம் விட்டு இடம் பெயர்ந்தனர். இதுபோலவே,

''**கையது கடனிறை யாழே மெய்யது**'' (புறம்.பா.எ: 69.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலும் சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 177) சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனிடத்துச் செல்லச் சொல்லி ஆலந்தூர் கிழார் பாடியதாக அமைந்துள்ளது. மேலும்,

''**சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி**'' (புறம்.பா.எ: 105.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலும், இதனைத் தெளிவாக்குகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.,1947: 239) விறலியைப் பாணரின் பறம்பு மலைக்குச் செல்ல ஆற்றுப்படுத்துவதாகக் கபிலர் பாடியுள்ளார். இதில், பறம்பு மலையின் எழில் பேசப்பட்டுள்ளது. அதாவது பெரிய இடத்தில் இருக்கும் சுனையின் மூலம் தழைத்த நீலமலர்களும், அதில் வண்டுகள் மொய்க்கும் புதிய மலர்கூட்டமும், மழை பெய்தாலும் பெய்யாவிட்டாலும், அருவிநீரானது சிற்றோடையாக ஓட, மலைச்சிகரங்களில் மேகங்கள் சூழ்ந்திருக்கும்

தன்மைபோன்று பாரி வரையாது வழங்குவான் என்று கூறப்பட்டுள்ளது. இதன்மூலம் காடு, மலை எனப் பாணர் ஓரிடத்தில் நிலையாக வாழமுடியாது சுற்றித்திரிந்தமையை அறியமுடிகிறது.

### 4.2.5. உழைத்துப் பிழைக்கத் தெரியாத நிலை

சங்கஇலக்கியங்கள் முழுமையும் பாண் சுற்றத்தினை நாடோடி வாழ்வினராகவே பதிவு செய்துள்ளன. இந்நிலையில் பாணர் தமக்குப் பரிசாக வழங்கிய பொருட்களைத் தம் சுற்றத்தினர் அனைவருக்கும் பங்கிட்டு கொடுத்துள்ளனர் என்பதையும் இலக்கியங்கள் பதிவு செய்கின்றன. ஆனால் அவர்கள் நிலத்தைப் பண்படுத்தி உழவுத் தொழில் செய்து வாழ்ந்தனர் என்று எவ்விதப் பதிவுகளும் இல்லை. வேளாண் தலைவனை அண்டி வாழும் சமூகமாகக் காணப்படுகின்றனரே அன்றிப் பாண்சுற்றத்தினர் உழைத்து வாழ்ந்ததற்கான குறிப்புகள் இல்லை. மேலும் அவர்கள் தாம் தங்கியிருக்கின்ற இடத்திற்கு ஏற்றவாறு மீன் பிடித்தல் தொழிலைச் செய்துள்ளனர். அதனை அவர்கள் பண்படுத்தி மீன்சீவும் சேரியினர் என்றும் வழங்கப்பட்டடுள்ளனர். ஆனால் நிலையானதொரு தொழில் செய்தமைக்கான சான்றுகள் இல்லை. மேலும் அவர்கள் பிடித்த மீனினுக்குப் பதிலாகப் பண்டமாற்று முறையில் நெல், உப்பு போன்றவற்றைப் பெற்றுள்ளனர். இதனை,

> “**வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்**
>
> **வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்**
>
> **யாண்டு கழி வெண்ணெய் நிறைக்கும் ஊர**” (ஐங்.பா.எ: 48.,வ.எ்: 1-3)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 77) பாணரின் தொழில் என்று கூறவேண்டுமாயின் அது பண்ணும், கூத்தும், இசையுமே ஆகும். அதனைத் தவிர மீன் பிடித்தலை அவர்களின் தொழில் என்று குறிப்பிடமுடிகிறது. ஆனால் இவை தவிர வேறு நிலையான தொழிலை அவர்கள் செய்தனர் என்பதற்கான பதிவுகள் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

பாணர் கல்வி அறிவில் சிறந்து விளங்கினர் என்பதாலும் அவர்கள் இயல்பாகவே பண்ணமைப்பதும், இசைப்பதும், கூத்து நிகழ்த்துவதும் கலையாகையால், அவர்கள் நிலையான தொழிலைப் பற்றிச் சிந்திக்க இடமின்றிப்போனது. மேலும் அவர்கள் அக்கலைத் திறனை முழுமையாக நம்பினர். அத்திறனையே தங்களின் வாழ்வினுக்கு ஆதாரமாகக் கொண்டனர். கலை மட்டுமே தங்களின் வாழ்க்கையின் இலட்சியமாகவும் எண்ணினர்.

எனவேதான் பாண்மரபினர் ஓரிடத்தில் நிலைத்து, உழைத்து வாழவேண்டும் என்ற எண்ணம் அற்றவராகக் காணப்படுகின்றனர்.

‘கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு’ என்னும் பழமொழிக்கு ஏற்பப் பாண்மரபினர் தங்களின் கலை அறிவினைப் பயன்படுத்தி அவர்களின் வறுமையை அவ்வப்போது போக்கிக் கொண்டுள்ளனர். ஏனெனில், ஒரு பாண்கூட்டம் ஒரு புரவலனை ஒருமுறை மட்டும் சென்று காண்பதில்லை. பலமுறைப் பலருடன் சென்று கண்டு பெரும் பரிசில்களைப் பெற்றுள்ளது என்பதை அதியமான் ஔவையின் சந்திப்பின் மூலமாக அறியமுடிகிறது. இவ்வாறு பாண்மரபினர் தங்களின் கலை அறிவினைப் பெரிதும் போற்றிய காரணத்தினால் உழைத்துப் பிழைக்க தெரியாத நிலை உருவானது.

### 4.2.6. இரந்துண்டு வாழும் அவலம்

பாணர் தங்கள் கல்வி அறிவினைக் கலைத்திறனைப் பயன்படுத்திப் பெரும்பரிசில்களைப் பெற்றனர். எனினும் அவர்கள் அத்திறமையால் இரந்துண்டு வாழும் அவலநிலை உருவானதே தவிர, செல்வசிறப்புடன் வாழ முடியாதவர்களாகவே காணப்படுகின்றனர். தங்களின் வறுமைநிலையை எடுத்துக்கூறி அதன்மூலம் உண்டு வாழ்ந்தனர் என்பது அவல நிலையேயாகும். எனவே தான் மண்டைப்பாணர் கையில் வைத்துள்ள ‘மண்டை’ என்பதற்குப் ‘பிச்சைப்பாத்திரம்’ என்று கருத்து தெரிவிக்கின்ற கைலாசபதியின் கருத்தும் இங்கு குறிப்பிடத்தக்கது. இதனைப்,

“**பாணர் பசுமீன் சொரிந்த மண்டை**” (குறுந்.பா.எ: 169.,வ: 4)

எனும் வரியானது உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 304) மேலும்,

“**கல்லென் சுற்றமொரு கால் கிளர்ந்து திரிதரும்**

**புல்லென் மாக்கைப் புலவுவாய்ப் பாண!**” (பெரும்பாண்.,வ: 22)

எனும் வரிகளும் மொழிகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 46) பசியின் கொடுமையால் வாடித்திரியும் பாணன் தன் சுற்றத்துடன் ஓரிடத்தில் நில்லாமல், அலைந்து திரியும் அவலநிலையை எடுத்துரைக்கின்றது.

“**அடுநனி மறந்த கோடிய ரடுப்பின்**” (புறம்.பா.எ: 164.,வ: 1)

எனும் வரியானது, பாணரின் பசித்துயரைப் புலப்படுத்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 351) மனையிலுள்ள அடுப்பானது நெருப்பு மூட்டிச் சமைத்துப் பலநாட்கள்

ஆனதால், தன் எரியும் தன்மையை மறந்துபோனது என்பது பாணரின் வறுமை நிலையைக் குறிப்பிடுகிறது. மேலும் பல நாட்கள் பட்டினியாகக் கிடக்கின்ற காரணத்தினால் தன் மனைவி தான்பெற்ற பிள்ளைக்குப் பாலூட்ட முடியாது அழுவதைக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இதன்மூலம் பாணர் தம் ஏழ்மையைப் பசித்துயரை எடுத்துரைத்து இரக்கின்ற அவலநிலையை விளக்குகின்றது. இதேபோன்று,

"**இருங்கிளைச் சிறாஅர்க் காண்டுங்கண்டும்**

**மற்று மற்றும் வினவுதுந் தெற்றெனப்**

**பசிப்பிணி மருத்துவ னில்லம்**

**அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே**" (புறம்.பா.எ: 173.,வ.ள்: 9-12)

எனும் வரிகளும், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 374) ஒரு பாணன் பெரிய சுற்றத்தோடு கூடிய பிள்ளைகளைக் காண்கிறான். அவன் அவர்களின் கையில் சோறு உடையவராய் உள்ளமையைக் கண்டு கேட்கிறான். ஏனெனில், தமக்குப் பசியினால் ஏற்பட்ட வருத்தமும், நடந்து வந்த களைப்பால் ஏற்பட்ட துன்பமும் சேர்ந்து தம்மை மேலும் துயருத்துகிறது என்கிறான். தம்பசிப் பிணியைத் தீர்க்கும் மருத்துவன் மனை பக்கத்தில் உள்ளதா? அல்லது தொலைவில் உள்ளதா? என்று கேட்பது பாணரின் அவலநிலையைப் பறைசாற்றுகிறது. மேலும்,

"**வாழ்தல் வேண்டிப்**

**பொய்கூறேன் மெய்கூறுவல்**

.......................................

**மாயா வுள்ளமொரு பரிசி லுன்னிக்**

..........................................

**வருந்தலு முண்டென பைதலங் கடும்பே**" (புறம்.பா.எ: 139.,வ.ள்: 5-15)

எனும் வரிகளும், அறிவிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 293) ஒரு பாணன் தனது சுற்றத்தாராகிய இளையோரும் விறலியரும் வாழவேண்டும் என்று பொய் கூறமாட்டேன் உண்மையே கூறுவேன் என்று கூறுகிறான். மேலும் அவன், தன்னுடைய சுற்றம் மிக்க பசியுடன் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறது என்று கூறுவதன்மூலம் அவர்களின் இரந்துண்ணும் அவலநிலை வெளிப்படுகிறது. இதன்மூலம் பாணர் தம்முடைய அடிப்படைத் தேவைகளுக்காகப் பிறரிடம் இரந்துண்ணும் அவலநிலையை உணரமுடிகிறது.

### 4.2.7. இடம்பெயரும் வாழக்கைத் தேவை

பாணரின் இவ்வறுமை நிலையை அவர்களின் வாழ்க்கை முறைமையைத் தீர்மானிக்கிறது. அவர்களின் இவ்வறுமைநிலை பிறரிடம் இரந்துண்ணத் தூண்டியது. அவ்வாறு பிறரிடம் இரத்தல் முறைமையைச் செய்ய வேண்டுமானால் அவர்கள் இடம் விட்டு இடம் பெயர்தல் அவசியமாகிறது. எனவேதான் பாணர் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தனர். பாணரின் நிலையற்ற வாழ்க்கைச் சூழல் அவர்களை இடம்பெயரும் அலைக்குடியினராக மாற்றியுள்ளது. இவர்கள் இவ்வாறு அலைக்குடியினராக வாழ்ந்தமையால், பெரும்பாலும் இவர்களின் சார்பு நிலையானது நிலைகுடிகளையும், திணைசார்ந்த நிலைகுடிகளையும் சார்ந்தே அமைகின்றது.

பாணர் இடம்பெயரும் வாழ்க்கை முறைக்கு அவர்களின் கலை அறிவும் காரணமாக அமைகின்றது. ஏனென்றால் கலைத்திறனைத் தனக்குள்ளே வைத்திருப்பதால் யாருக்கும் பயனில்லை. எனவே அவர்களின் கலை அறிவை உலகம் அறியச்செய்ய அவர்கள் மேற்கொண்ட முயற்சியே இடம்பெயர்தல். இல்லை எனில், பாணரின் இசையும், பாட்டமைக்கும் திறமும், கூத்தும் மறைந்து போயிருக்கக்கூடும்.

பாணரின் வாழ்க்கைச் சூழலுக்கு இடம்பெயர்தல் என்பது மிக்க அவசியமாகிறது. அவர்கள் இடம்பெயராது வாழ்ந்திருப்பாராயின், அவர்களின் அறிவுப் புலமையும், அறியமுடியாது போயிருக்கும். அதைப்போல புரவலர்களின் வள்ளல் தன்மை, வெற்றி, வீரம், ஆட்சித்திறன் போன்றவையும் அறியமுடியாமற் போயிருக்கும். ஆகவே பாணரின் வாழ்க்கைக்கு இடம்பெயர்தல் மிக்க இன்றியமையாததாகிறது.

### 4.3. பாணரின் பண்பு நலன்கள்

பாணரும் பாண்மரபினரும் சங்ககால மக்களின் அக வாழ்க்கையிலும் புற வாழ்க்கையிலும் இரண்டறக் கலந்திருந்தனர். அவர்கள் அரசவையானாலும், பாசறையானாலும், பரத்தையர் இல்லமானாலும் எல்லாத் திசைகளிலும் எல்லா இடங்களிலும் இவர்கள் நீக்கமற இடம்பெற்றிருந்தார்கள். (பக்தவத்சல பாரதி.,2014: 135) பாணரும் பாண்மரபினரும் சங்ககால மக்களின் வாழ்வோடு இணைந்திருந்தனர். எனவே அவர்களின் பண்பு நலன்களும் அம்மக்களை அடிப்படையாகக் கொண்டே அமைந்திருந்தன.

### 4.3.1. வழிநடத்தும் தலைமைக்குணம்

பாணர் தாம் அண்டி வாழ்ந்த மக்களின் வாழ்க்கையிலும் இரண்டறக் கலந்திருந்தனர். எனவே அவர்களின் வாழ்க்கையில் ஏற்படும் சிறு சிறு பிரச்சனைகளுக்கும் தன்னால் இயன்றவரை உதவி புரிந்துள்ளனர். மேலும் அவர்கள் தங்களின் பேச்சுத் திறனால், தலைவன்

தலைவியின் இடையே ஏற்படுகின்ற பிணக்குகளைக் களைந்து ஒற்றுமையுடன் வாழ மறைமுகமாக வழிநடத்தியுள்ளனர். இதனை,

"**யாகனவன் செய்கோ பாண வானாது**" (ஐங்.,பா.எ: 133.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலானது, உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 190) தலைவன் வினைமேற் சென்ற காரணத்தால், தலைவி அவனின் பிரிவுத் துயரைத் தாங்க இயலாது ஊடியிருந்தாள். இதனை உணர்ந்த பாணன், "வினையே ஆடவர்க்கு உயிர் ஆதலால் அதன் பொருட்டுச் சிறிது பிரிந்துபோய் மீள்தற்குள் எம்பெருமாட்டி இவ்வாறு மெலிதலும் ஊடுதலும் தகுதியாகுமா?" என்று வினவுகிறான். இவ்வாறு பாணன் தலைவிக்கு இல்லறத்தின் இன்றியமையாமையை உணர்த்துகிறான். மேலும் தன்னுடைய தலைவனுக்கு (வினை) ஆள்வினையின் முக்கியத்துவத்தை எடுத்துரைத்து வழிநடத்தவும் செய்கிறான். இதேபோன்று,

"**காண்மதி பாண விருங்கழிப் பாய்ஙி**" (ஐங்.பா.எ: 134.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலும், உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 191-192) தலைவனின் பிரிவால் வருந்திய தலைவியிடம், நீ இவ்வாறு ஊடியிருப்பது எம்பெருமாட்டிக்குத் தகவன்று என்று எடுத்துரைக்கிறான்.

வினைமேற் சென்ற தலைவனுக்காகப் பாணன் ஆள்வினைப் பற்றியும், "வினையே ஆடவர்க்கு உயிர்" என்று உணர்த்துவதும், அவனின் பண்பினை எடுத்துரைப்பதாக அமைகின்றது. அதேபோன்று சில நேரங்களில் தலைவன் பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்ட காலங்களில் தலைவியைப் பாணன் சமாதானம் செய்ய முயற்சிக்கிறான். இதனை,

"**நாணிலை மன்ற பாண நீயே**" (ஐங்.பா.எ: 136.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல் விளக்குகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 193) அதாவது பரத்தமை ஒழுக்கம் மேற்கெண்டிருந்த தலைவன், தன் பாணனை விடுத்துத் தனது வரவினை எடுத்துரைக்கத் தூது விடுத்தான். பாணனும் அவ்வாறே சென்றான். அப்போது தலைவியிடம், தலைவனின் குற்றங்களை மறைத்து நம் பெருமான் தலைவியைப் பிரிந்து சென்றது ஆள்வினை பொருட்டே ஆகும். அவர் நல்லவர், தலைவியின் பால் மிக்க அன்பும் அருளும் உடையவர் என்று கூறுகின்றான். இதில் பாணன் கூறியது முழுக்க முழுக்க பொய்யே என்றாலும், அவன் அவ்வாறு கூறியதற்குக் காரணம் இல்லறமே நல்லறம் என்றுணர்ந்த திறமே ஆகும். இதன்மூலம் தலைவன் தவறு செய்தாலும், தலைவியுடன்

இல்லறம் மேற்கொள்ள விரும்பியே பாணன் அங்ஙனம் பொய் கூறினான் என்பது புலனாகிறது. பாணன் ஒரு சில வேளையில் தலைவிக்கே புத்திபுகட்டுவதும் உண்டு. மற்றும்,

"**கருவி வானங் கார்சிறந் தார்ப்ப**" (ஐங்.பா.எ: 476.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், குறிப்பிடுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 748-749) தலைவனது பிரிவினை ஆற்றாது மெலியும் தலைவியைக் கண்ட பாணன், எம் பெருமட்டியின் பிரிவாற்றாமை என்பது எம் தலைவனுக்கும் உளதன்றோ? என்று வினவுகிறான். மேலும் எம் தலைவன் அதனை ஆற்றி வினைமேற் கருத்தூன்றி இருக்கும்போது, நீவிர் மட்டும் ஆற்றியிருக்காமல் இருப்பது நின் கடனாகுமா? என்றும் கேட்கிறான். பாணன், தலைவனுக்காகப் பொய் கூறுபவனாகப் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டாலும், அதற்குக் காரணம் 'இல்லறம்' எனும் மிகச் சிறந்த பண்பினை மேற்கொள்ள அவன் எடுக்கும் முயற்சியே ஆகும்.

தலைவிக்கு நற்பண்பினை எடுத்துரைப்பது போலவே தலைவனுக்கும் எடுத்துரைத்து நல்வழிப்படுத்துவதனை,

"**நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு**" (ஐங்.பா.எ: 48.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 77) தலைவனின் பிரிவினை ஆற்றாது மிக மிக வருந்திய தலைவிக்காத் தலைவனிடத்துத் தூது செல்கிறான் பாணன். அப்போது, தலைவனிடம் அன்புடையாளை நீ இவ்வண்ணம் துன்புற விடுத்து அமைந்திருத்தல் நின் தலைமைப் பண்பிற்குத் தகவுடைமை ஆகாது என்று எடுத்துரைக்கிறான். மேலும் அவன் தலைவியின் திறத்திலேயே நீ இவ்வாறிருப்பின் எளியேனாகிய எம்பால் எத்தன்மையுடையவனாக இருப்பாயோ? நான் அறியேன். எனவே இன்றே இப்பொழுதே எம் பெருமாட்டிக்கு அருள்வாயாக! என்று பாணன் கூறுகிறான்.

பாணன் இல்லறத்தின் மேன்மையை நன்கு உணர்ந்திருந்தான். தலைவனுக்காகப் பல நேரங்களில் தலைவிடத்துப் பொய் கூறினாலும், அவனின் அர்த்தமற்ற பிரிவின் நீட்டிப்பினைத் தயங்காது கடிந்து கொள்ளும் பண்புடையவனாகக் காணப்படுகின்றன. இத்தகைய சூழலைப் பேகனைக் காணச்சென்ற கபிலர், அரிசில் கிழார், பரணர், பெருங்குன்றூர் கிழார் போன்றோரின் முயற்சியமைந்த பாடல்களிலும் தெளிவாகக் காணமுடிகிறது.

பேகனும் தன்னுடைய தலைவியாகிய கண்ணகியைத் துறந்து ஒரு பரத்தையின்பால் ஒழுகலானான் என்பதை அறிந்த சான்றோர்கள் அவனுக்கு நன்னெறியை எடுத்துரைத்தனர். கண்ணகியின் துயரத்தை எடுத்துரைத்து அவளின் அன்பினையும் பேகனுக்குப் புரியச்

செய்தனர். மேலும் கண்ணகியைச் சேர்த்து வைக்கப் பெரிதும் முயன்றனர். இறுதியில் பேகன் இல்லறத்தின் மேன்மையை உணர்ந்து கண்ணகியுடன் இணைந்து வாழ்ந்தான் என்பதனைப் புறம் - (143,144,145,146,147) ஆகிய பாடல்கள் உணர்த்துகின்றன.

பாணர் தாம் அண்டி வாழ்ந்த மக்களுக்காகவும், அவர்களின் நல்வாழ்வுக்காகவும் துணைபுரிந்தனர். அதேபோல் மக்களாக இருப்பினும், அவர் மன்னராக இருப்பினும் அவருடைய வாழ்வில் ஏற்பட்ட குழப்பத்தைத் தீர்த்து அவர்களை நல்வழிப்படுத்தத் தயங்காதவர்களாகக் காணப்படுகின்றனர்.

தாம் அண்டி வாழ்ந்த மக்களுக்காகவும், தாம் சார்ந்திருந்த புரவலர்களின் வாழ்க்கைக்காகவும் பாடுபட்டதனைப் போன்று, தம்மைப் போன்ற பாண் சுற்றத்திற்கும் வழிபடுத்துவதனைப் தம் கொள்கையாகவே கொண்டு விளங்கினர் இப்பாணர். இதனைக்,

> "**கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
> **ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
> **பெற்ற பெருவாம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
> **சென்று பயன்எதிரச் சொன்ன பக்கமும்**" (தொல்.பொருள்.புறத்.,நூ.எ: 88.,வ.எ: 3-6)

எனும் தொல்காப்பிய நூற்பா உணர்த்துகிறது. (இளம்பூரணர்.(உ.ஆ).,2005: 146) எனவே பாணர் வழிநடத்தும் தலைமைக் குணம் கொண்டவர் என்பது பெறப்படுகிறது.

### 4.3.2. நட்புக்கு முதன்மை

பாணர் தாம் அண்டி வாழ்ந்த மக்கள் சமுதாயத்துடனும், தாம் சார்ந்திருந்த வள்ளல்களோடும், மிக்க அன்பும், நடபும், கொண்டிருந்தனர். இவர்கள் நட்புக்கு மிக்க இன்றியமையாதவர்களாகக் காணப்படுகின்றனர் என்பதையும் சங்க இலக்கியாங்களால் அறிய முடிகிறது.

#### 4.3.2.1. பழியேற்றல்

பாணர் நட்புக்காகப் பழியினை ஏற்கும் பண்பினை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். அகஇலக்கியங்களில் தலைவனுக்காகப் பாணன் தூதுசெல்வது, வாயில் வேண்டல், ஆற்றுவித்தல் போன்ற பணியினைச் செய்பவர்களாக விளங்குகின்றனர். அவ்வாறு தலைவின்பால் செல்லும் பாணன் தலைவன் பொருட்டுச் சென்ற காரணம் ஒன்றினாலேயே, பொய்யன் என்றும், சூழ்ச்சிக்காரன் என்றும் பழிக்கப்படுகிறான் என்பதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இதனை,

“**ஒருநின் பாணன் பொய்யன் ஆக**” (குறுந்.பா.எ: 127.,வ: 4)

எனும் வரியானது, சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 235) தலைவனுக்காக பாணன் தலைவியிடத்துச் செல்கிறான். ஏனெனில், தலைவன் பரத்தையற் மாட்டுச் சென்று மீண்டமையால், தலைவியின் ஊடலுக்கு அஞ்சிப் பாணனின் பின் நின்றுகொள்கிறான். அப்பொழுது தலைவனிடம் (நின்னுடைய) உன்னுடைய பாணன் முழுப்பொய்யன் என்று தோழி கூறுகிறாள். இதன்மூலம் பாணன் பொய்யன் என்று பழியேற்கும் நிலையை உருவாகின்றது. இதேபோன்று,

“**எடுத்துச்கூள் பலவூற்ற பாணன்வந் தீயான்கொல்**” (கலி.பா.எ: 71.,வ: 14)

எனும் பாடல் வரியும், குறிக்கின்றது. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 209) பாணணைப் பழிக்கின்றமையைப் புலப்படுத்துகின்றது. மேலும்,

“**நின்புகழ் பலபாடும் பாணனும் ஏழுற்றான்**” (கலி.பா.எ: 74.,வ: 7)

எனும் வரியும், சுட்டுகின்றது. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 216) இதேபோன்று,

“**நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாணன்**” (கலி.பா.எ: 77.,வ: 18)

எனும் வரியும், உரைக்கின்றது. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 225) தலைவன்பால் அன்பு கொண்ட பாணர் தலைவியால் வெறுக்கப்படுகின்றனர். பாணர் அவப்பெயர் பெறும் நிலைக்கும் தள்ளப்படுகிறனர். இதனை,

“**விளித்துநின் பாணனோ டாடி யளித்தி**” (கலி.பா.எ: 95.,வ: 31)

என்னும் வரி, குறிக்கின்றது. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 287) மேலும்,

“**பாணன் பொய்யன் பலகூ ளினனே**” (ஐங்.பா.எ: 43.,வ: 4)

எனும் பாடலடியும், குறிப்பிடுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 71) தலைவி தலைவனிடம் பாணனைப்பற்றி, உன்னைக் காட்டிலும் உன்னுடைய பாணன் பொய் கூறுவதில் வல்லவன் என்று கூறுகின்றாள். மேலும்,

“**பாணன் போலப் பலபொய்த் தல்லே**” (ஐங்.பா.எ: 47.,வ: 5)

எனும் பாடலடியும் சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 76) பாணனைப் பொய்யன் என்று தலைவி தூற்றினாலும், அவன் தலைவன் மீது கொண்ட நட்பின் காரணமாகப் பொய்யன் என்று தலைவியால் பழிக்கப்படுவதனை ஏற்பவனாவே விளங்குகிறான்.

4.3.2.2. **பொய்கூறுதல்**

பொய்யன் என்று பழியேற்ற பாணன் பல நேரங்களில் தலைவன் பொருட்டுத் தலைவயிடம் பொய் கூறுதலும் உண்டு. அதற்கும் தலைவன் மீது கொண்டுள்ள அன்பே காரணமாக அமைகின்றது. இதனை,

"**நாணிலை மன்ற பாண நீயே**" (ஐங்.பா.எ: 136.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 194) பாணன் பொய்யுரைத்தான் என்று உணர்த்துகிறது. தலைவன் பரத்தமை மேற்கொண்டு மீண்டு வர எண்ணுகையில், தலைவியிடத்துப் பாணன் சென்று தலைவன் ஆள்வினை பொருட்டே பிரிந்து சென்றான் என்று பொய் கூறுகின்றான். இவ்வாறு பாணன் பொய்யுரைப்பது தலைவன் மீது கொண்ட நட்பும் அன்பும் தான் என்பது புலனாகிறது.

4.3.2.3. **புத்திபுகட்டல்**

பாணன் தலைவனுக்கும் தலைவிக்கும் அறிவுரை வழங்குகிறான். இதனைக்,

"**கருவி வானங் கார்சிறந் தார்ப்ப**" (ஐங்.பா.எ: 476.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், விளக்குகின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 748-749) தலைவனின் பிரிவினை ஆற்றாது மெலியும் தலைவியிடம், பிரிவுத்துயரம் என்பது தலைவனுக்கும் உரியதுதானே என்று எடுத்துக்கூறித் தலைவியைச் சமாதானம் செய்கின்றான். தலைவிக்குத் தக்க தருணத்தில் அவளின் பிரிவுத் துயரைத் தடுத்து அதிலிருந்து அவளை மீளச் செய்யும் பண்புடையவனாகப் பாணன் விளங்குகிறான். இதேபோன்று தலைவனுக்கும் அறிவுரை கூறுகிறான். இதனை,

"**நினைக்கியாம் பாணரு மல்லே மெமக்கு**" (ஐங்.பா.எ: 480.,வ: 1)

எனத் தொடஙகும் பாடல் உணர்த்துகின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 754) தலைவனின் பிரிவினைத் தாளாது வருந்திய தலைவிக்காகத் தலைவன் பால் சென்று, அன்புடையாளை நீ இவ்வண்ணம் துன்புறவிடுத்து அமைந்திருத்தல் நின் தலைமைப் பண்பிற்குத் தகுதியாகுமோ? என்று கேட்கிறான் பாணன். இதன் வாயிலாகத் தலைவன் தலைவியின் பாலுள்ள பாணனின் அன்பினையும், நல்ல நட்புள்ளத்தையும் அறியமுடிகிறது.

4.3.2.4. **நல்வழிபடுத்துதல்**

பாணர் தமக்கு வழங்கிய வள்ளலின் வாழ்வில் ஏதேனும் இடையூறு ஏற்பட்டாலும் அதனைக் களைய பெருமுயற்சிகள் எடுக்கத் தவறுவதில்லை என்பதையும் இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

பண்டைத் தமிழகத்தில் ஆவியர் குடியில் பிறந்து சிறந்து விளங்கியவன் பேகன் எனும் பெருவள்ளலாவான். இவனுடைய மனைவி கண்ணகி என்னும் பெயருடையவளாவாள். ஆனால் பேகன் இல்லற மாண்பினை மறந்து, ஒரு பரத்தையின் பால் மிக்க ஈடுபாடு உடையவனாகின்றான். அதனால் கண்ணகி அவனின் பிரிவுத் துயரைத் தாங்காமல் உடல் மெலிந்து வாடியிருக்கின்ற வேளையில், பேகனைக் காணக் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் போன்றோர் பொருள் வேண்டிக் காணச்சென்றனர். அப்போது கண்ணகியின் துயரை உணர்ந்து பேகனிடத்துச் சென்று அவனுக்கு இல்லறத்தின் மாண்பினை எடுத்துரைக்கின்றனர்.

கபிலர் காணச்சென்ற வேளையில், பின்வரும் பாடலால் உணர்த்துவதாக அமைகின்றது.

"**நின்னுநின் மலையும் பாட வின்னா**

**திகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்**

**முலையக நனைப்ப விம்மிக்**

**குழலினை வதுபோ லழுதனள் பெரிதே**" (புறம்.பா.எ: 143.,வ.எ: 12-15)

எனும் பாடலடிகளால், பகருகின்றார். (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 302) நின்னையும் நின் புகழையும், மலையையும் பாடிச் சென்றபோது, அங்கே இளமகள் ஒருத்தியைக் கண்டு, அவளிடம் நீவிர் யார்? பேகனின் கிளைஞரோ? என்று வினவ, அதற்கு அவள் எம்போல் ஒருத்தியின் நலத்தை விழைந்து நாள்தோறும் அவளுறையும் நல்லூருக்குத் தேர் ஏறி வந்துபோகின்றான் எனப் பலரும் கூறுகின்றனர் என்று உரைத்தாள். ஆதலால் நீ அவளை அருளாமல் இருப்பது கொடிதன்றோ! என்று பேகனுக்கு எடுத்துரைக்கிறார் பரணர்.

இப்பேகனின் செயலைக் கண்டித்து அரிசில் கிழாரும், பெருங்குன்றூர் கிழாரும் அறிவுறுத்தி நல்வழிப்படுத்தியதை,

"**ஒலிமென் கூந்தற் கமழ்புகை கொளீகித்**

**தண்கமழ் கோதை புனைய**" (புறம்.பா.எ: 146.,வ.எ: 9-10)

எனும் வரிகள், புலப்படுத்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 307) நின் மனையாள் நின்னுடைய அருளைப் பெற்றுத் தன் கூந்தலை முடித்துச் பூச்சூட வேணடும். ஆதலால் நின் மனைக்குத் திரும்ப வேணடும். இதுவே நான் வேண்டும் பரிசிலாகும் என்று அரிசில்கிழார் உணர்த்துகிறார். இதேபோன்று பெருங்குன்றூர் கிழாரும்,

“................................**அரிவை**

**நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்**

**மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்**

**புதுமலர் கஞல வின்று பெயரின்**

**அதுமனெம் பரிசி லாவியர் கோவே**” (புறம்.பா.எ: 147.,வ.எ்: 5-9)

எனும் பாடலால் நல்வழிப்படுத்துகிறார். (சு. துரைசாமிப்பிள்ளை. (உ.ஆ).,1947: 309) தம்மைப் புரக்கும் வள்ளலாயினும் அவர்கள் தம் வாழ்வில் மேன்மையுற்று வாழவேணடும் என்று எண்ணும் மனம் உடையவராகப் பாணர் விளங்குகின்றனர். மேலும் அவ்வாறு நல்வழிப்படுத்தக் காரணம் அவ்வள்ளல்கள் மீதுகொண்ட நட்புணர்வே காரணம் என்பது புலனாகிறது.

### 4.3.2.5. குறிப்பறிந்து கூறும் திறம்

பாணர் தம்மைப் போன்றோரை ஆற்றுப்படுத்துவதில் முனைப்புடையவர் ஆவர். அதேபோன்று அவர்கள் பிறரின் குறிப்பறிந்து கூறுவதிலும் திறன் படைத்தவரும் ஆவர். வேந்துவிடு தொழில்மேற் சென்ற சிறுகுடித் தலைவன் வீரமரணம் எய்திய செய்தி அறியாமல், அவனை நாடி ஒரு பாண் கூட்டம் செல்கிறது. அதைக்கண்ட மற்றொரு பாணன் ஆற்றுப்படுத்துகிறான். இதனை,

“**வளரத் தொடினும் வெளவுபு திரிந்து**

............................................

**பாண கேண்மதி யாணரது நிலையே**

............................................

**தெவ்வங் கொள்குவை யாயினு மிரண்டும்**

**கையுள போலுங்**....................” (புறம்.பா.எ: 260.,வ.எ்: 1-11)

எனும் பாடலடிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 124-125) ஒரு தலைவன், ஆநிரைகளை மீட்கச் சென்ற போரில் இறந்துபட்டான். ஆனால் அதனை அறியாத பாணன் ஒருவன் அவனைக் காண வருகின்றான். இதனைக் கண்ட வேறொரு பாணன், அப்பாணனின் குறிப்பறிந்து, “பாண, இனி நீ தலைவன் தந்த நிலத்தை உழுது உண்டு வாழ்வதோ அல்லது வேறு வேறிடஞ்சென்று இரந்துண்பதோ, இவ்விரண்டிலும் எது

செய்வதாயினும், அது உன் கையிலுள்ளது என்று கூறுகிறான். இதன்மூலம் பாணரின் குறிப்பறிந்து கூறும் திறத்தினை உணரமுடிகிறது. இதேபோன்ற கருத்தினைப்,

"**பெருங்களிற் நடியிற் றோன்று மொருகண்**" (புறம்.பா.எ: 63.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலும் உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை. (உ.ஆ).,1947: 132) அதாவது, நடுகல்லான தலைவனைப் பற்றி அறியாமல் வருகின்ற பாண் கூட்டத்திடம், பாண! நீ இவ்வழியே செல்வாயானால், அங்கே வழியில் நடுகல்லாகிய தலைவனைக் காண்பாய். அந்நடுகல்லை வழிபடாமல் செல்லற்க. வழிபடுவையாயின், வரங்கூர்ந்திருக்கும் இவ்வழி வண்டு மேம்பட்டு வாழும் வளமுடையதாகும் என்று ஒரு பாணன் கூறுகின்றான். மேலும்,

"**பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி**" (புறம்.பா.எ: 214.,வ: 1)

எனத் தொடங்கும் வரியும், சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 133) இவ்வரியானது பாணரின் குறிப்பறிதல் திறத்தை வெளிப்படுத்துகின்றது. போரில் வீரமரணம் அடைந்த தலைவன் உயிரோடு இருந்த காலத்தில் நெடுஞ்சுரத்து நின்ற நிழல்மரம்போல பாணர் முதலிய இரவலர்க்கு இனிதே அருள்புரிந்து வந்தான். இவன் நடுகல்லாகியது பாண் சுற்றத்தாருக்குத் தெரியுமோ? தெரியாதோ? பாணர் தெரியாது வந்தால் அவரின் மனம் வருந்துமே என்று ஒரு பாணன் இரங்குவதாக அமைகின்றது.

பாணர் தம்மைப் போன்ற பிறரின் வறுமையைக் குறிப்பறிந்து அவர்களுக்காக வருந்துவதும், வழிப்படுத்துவதுமாக வாழ்ந்துள்ளனர் என்பது புலனாகிறது.

**4.3.2.6. நன்றி மறவாமை**

பாண்மரபினர், நன்றி உணர்வுடன் வாழ்ந்தனர் என்பதைத் சங்கப்பனுவல்கள் விளக்குகின்றன. அவர்கள் தம்மைப் புரந்த வள்ளல்களை நன்றி மறவாது வாழ்த்துவதைக் கடமையாகக் கொண்டனர். மேலும் தம்மைப் புரந்தவர்களின் சிறப்பினை வேறொரு பாணனிடத்துக் கூறும்போதும் அவர்களின் நன்றிமறவாமை வெளிப்படுகிறது. இதனை,

"**ஒருநாட் செல்லல மிருநாட செல்லலம்**
**பல நாள் பயின்று பலரொடு செல்லனும்**
**தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ**" (புறம்.பா.எ: 101.,வ.ள்: 1-3)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 233) ஔவை அதியமானைக் காணச்சென்ற பொழுது, அவன் ஔவையின் மீதுகொண்ட விருப்பால் பரிசில்

நல்கச் சிறிது காலம் தாழ்த்தினான். இதனை உணராது ஔவை தன் நெஞ்சிற்கு கூறினாலும், அதில் அவர் நன்றியுணர்வை வெளிப்படுத்துகிறார். அதாவது, ஒரு நாள் சென்றாலும், இரண்டு நாட்கள் சென்றாலும், பலநாள் தொடர்ந்து பலரோடு சென்றாலும் அவன் முதல் நாள் சென்றதைப் போன்ற விருப்பத்தை உடையவன் ஆவான் என்று கூறுவது ஔவையின் நன்றி மறவாமையே ஆகும். ஏனெனில், அவர் இதற்கு முன்னும் அதியமானிடம் பரிசில் பெற்றவர் என்பதால்தான் அதனை எண்ணிப் பார்த்து முதல் நாள் போலவே விருப்பமுடையவனாக எம்மைப் புரப்பான் என்று கூறுகின்றார்.

ஆய் அண்டிரனின் புகழை அவனால் புரக்கப்பட்ட விறலி இன்னொரு விறலியிடம் புறம் - 133ஆம் பாடலில் எடுத்துரைக்கின்றாள். (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 280-281) இதில், ஒரு விறலி மற்றொரு விறலியிடம், நீ ஆய் அண்டிரனைக் கண்ணில் கண்டதில்லை. காண விரும்பினையாயின் இப்பொழுதே மழைபோன்ற வன்மையுடைய தேரினையுடைய வேள் ஆய் அண்டிரனைக் காணச் செல்வாயாக என்று கூறுகின்றாள். இதில் நன்றி உணர்வானது விறலி ஆற்றுப்படையாக அமைத்த முடமோசியர் மூலம் வெளிப்படுகிறது. அதேபோல,

"**வென்வே லண்ணற் காணா வூங்கே**

***நின்னினும் புல்லியே மன்னே யினியே***

**இன்னே மாயினே மன்னே யென்றும்**" (புறம்.பா.எ: 141.,வ.எ்: 7-9)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 297) மேலும் பேகன்பால் நன்றியுணர்வுடன் விளங்குகின்ற பாணன் ஒருவன் இன்னொரு பாணனுக்கு ஆற்றுப்படுத்துவதன் மூலம் பாணரின் நன்றிமறவாமை வெளிப்படுகிறது.

பாணர் தாம் பெற்றதை எண்ணிப்பார்த்து அப்புரவலனை வாழ்த்தும் பண்புடையவர் என்பதை,

"**வேழம் வீழ்த்த விழுந்தொடைப் பகழி**" (புறம்.பா.எ: 152.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், உரைக்கிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 321-322) வல்வில் ஓரியின் வள்ளல் தன்மையை எடுத்துரைக்கின்றார் வன்பரணர். இதில், வன்பரணர் தம் பாண் சுற்றத்தோடு ஒருமுறை ஓரியைக் காணச் செல்லுகையில், 21 பாடல் துறைகளையும் பாடினர். அப்பொழுது ஓரி தான் வேட்டையாடிய மானின் தசையையும், மதுவையும் தன் மலையிற் கிடைக்கும் பொன்னையும் தந்து சிறப்பித்து அனுப்பினான். இதன்மூலம் வன்பரணரின் நன்றியுணர்வு வெளிப்படுகிறது.

"**வணர் கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ**" (புறம்.பா.எ: 155.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலும், குறிக்கின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 328) தன்னுடைய வறுமைத் துயரைத் தீர்க்க யாருளர்? என்று ஏங்கியிருக்கின்ற பாண் கூட்டத்திடம், நான் சொல்லுகின்றதனை இப்பொழுது கேட்பாயாக! என்று ஒரு பாணன் கூறுகிறான். பாழூரின்கண் நெருஞ்சியானது பொன்னிறத்தையுடைய பூப்போல கதிரவனைப் போன்றவன் கொண்கானங்கிழான். அவன் வறுமையுற்ற யாழ்ப் பாணரது மண்டையின் திறம் அறிந்தவன். எனவே அவனிடம் நீ செல்வாயாக என்று ஆற்றுப்படுத்துகின்றான். பாணர் தமக்குப் பரிசில் வழங்கிய வள்ளல்களை மறவாது, எப்பொழுதும் நினைவுகூறும் வகையில், தம்மைப் போன்றவர்க்கு அவரின் புகழை எடுத்துக்கூறித் தன்னுடைய நன்றியினைத் தெரிவிக்கும் விதத்தை உணரமுடிகிறது.

**4.3.2.7. பொறுமை**

பாணர் தம் சுற்றத்துடன் வள்ளல்களை நாடிச் செல்கின்றபோது, ஒருசிலர் பாணரின் வருகையை விரும்பித் தம்முடன் சிலநாட்கள் தங்கியிருக்கும்படி எண்ணுவர். துயரம் கலையப்பட்டாலும், அவர்களுக்குப் பரிசில் கொடுக்காது காலம் நீட்டிக்கின்ற சூழலும் உண்டு. இதற்குக் காரணம் பரிசில் பெற்றுவிட்டால் இப்பாண் சுற்றம் தம்மைவிட்டு நீங்கிச் சென்றுவிடும் என்று வள்ளல்கள் எண்ணியதே ஆகும். இதனைச் சங்கப்பனுவல்கள் விவரிக்கின்றன. அவ்வாறு வள்ளல் பரிசில் கொடாது காலம் நீட்டிப்பதின் காரணம் புரியாத பாணர் மிக்க பொறுமையுடன் அதற்காகக் காத்திருக்கின்றமையை,

"**ஒரு நாட் செல்லல மிருநாட் செலல்லம்**" (புறம்.பா.எ: 101.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல்வரி, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 233) ஒருமுறை அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவை காணச் சென்றார். ஔவையின் மீது மிக்க விருப்பும், மதிப்பும் கொண்ட அதியமான், அவர் விரும்பிய பரிசிலை நல்காது காலம் தாழ்த்தினான். அப்பொழுது, மிகுந்த வருத்தம் கொண்ட ஔவை தன் நெஞ்சிற்குக் கூறுவாராய், நெஞ்சே! வருந்த வேண்டா. அதியமானது பரிசிலைப் பெறும் காலம் நீட்டினும் நீட்டியாதாயினும், யானை தன் கோட்டிடை வைத்த கவளம் போல நம் கையத்தென்றே கொள். இது பொய்யாகாது என்று கூறுகின்றார்.

இதேபோன்று மற்றொருமுறை அதியமானைக் காணச் சென்றபோது, அவன் ஔவையைத் தவிர அவருடன் வந்த பாண் சுற்றத்தினுக்கு வேண்டிய பரிசில்களை வழங்கி அனுப்பி வைத்தான். ஆனால் ஔவைக்கு மட்டும் நல்காது காலம் நீட்டித்தான். மேலும்

ஔவை தன் கருத்தினை எடுத்துச் சொல்லவும் அவருக்கு வாய்ப்பு கிட்டவில்லை. இத்தகைய சூழலில், அவர் தன் கருத்தினை எடுத்துரைத்து விடைபெற நினைத்து அதற்கு அனுமதி பெற விழைந்தார் ஔவை. ஆனால், அரண்மனையில் உள்ள அமைச்சர் முதல் வாயிற்காவலன் வரை அனைவரும் ஔவையின் மீது மிகுந்த மதிப்பும் பேரன்பும் கொண்டிருந்தனர். ஆனாலும் ஔவையின் கவலை நீங்கவில்லை. அதியமானைக்காண முயன்றபோதெல்லாம், வாயிற்காவலர்கள் அன்பமைந்த சொற்களால் அவர் கருத்து நிறைவுறாதாவாறு செய்தனர். இதனால் மனம் உடைந்த ஔவை,

"**வாயிலோயே வாயிலோயே**" (புறம்.பா.எ: 206.,வ: 1)

எனத் தொடங்கும் பாடலைப் பாடினார். (சு. துரைசாமிப்பிள்ளை.,1951: 17) ஔவை தன் மனக்கருத்தை வாயிற் காவலர்களிடம் தெரிவிக்க எண்ணி, வாயில் காப்போனே நீ எப்பொழுதும் பரிசிலர் பரிசிற்கு வருந்தும் வாழ்க்கையுடையவர் என்பதறிந்து அவர்களுக்கு அவ்வாயிலை அடைப்பதில்லை. ஆயினும் என்மாட்டு வாயிலை அடைக்கின்றாய். இது நின் செயலன்று என்பதை நான் அறிவேன். ஆயினும் நின் தலைவன் ஒன்று தன் தலைமை அறியவேணடும். இல்லையெனில், என் தரத்தை அறியவேணடும். பாரி போன்றோர் இறந்ததனால் இவ்வளமிக்க உலகம் வறியதாகிவிடவில்லை. நாங்கள் எத்திசைச் சென்றாலும் எங்களுக்குச் சோறு குறை கிடையாது. சோறென்று நான் வேண்டுவது எண்ணி எனக்கு விடைதர நீட்டிப்பது நற்பண்பு அன்று என்று கூறுகிறார். இதன்மூலம் ஔவையின் பொறுமையும் சகிப்புத்தன்மையும் வெளிப்படுவதோடு, அவரின் நிலையை எவ்வாறேனும் தெரிவிக்க எண்ணிய எண்ணமும், முயற்சியும் வெளிக்கொணருகிறது.

பரிசிலருக்குப் பரிசில் நீட்டிக்கின்ற போது அதனைப் பொறுமையுடன் ஏற்றுக்கொள்ளும் பண்பு உடையவர்களாகப் பாணர் காணப்படுகின்றனர். இதுமட்டுமல்லாது அகவாழ்க்கையில் பாணரின் பங்களிப்பு இன்றியமையாதது. அவ்வாறு அகவாழ்க்கையில் பாணரைப் பலவாறு தோழி, தலைவி, பரத்தை போன்றோர் தூற்றினாலும், எள்ளி நகைத்தாலும் அவற்றையெல்லாம் மிக்க பொறுமையுடன் செவிசாய்ப்பவராகவேப் பாணர் காணப்படுகின்றனர்.

தன்னை எள்ளி நகைத்தாலும் அல்லது தன் தலைவனை எள்ளி நகைத்தாலும் அதனைப் பொறுமையுடனே கேட்டுக்கொள்ளும் பணபினனாகப் பாணன் விளங்குவதைப்,

"**பண்பிலை மன்ற பாண இவ்வூ**

**ரன்பில கூடிய கழறி**

**மென்புலக் கொண்கனைத் தாரா தோயே**" (ஐங்.பா.எ: 138.,வ.எ: 1-3)

எனும் பாடல், உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 195) பரத்தையிற் பிரிந்த தலைவன், தலைவியின் ஊடல் தீர்தற்காகப் பாணனை ஏவியிருந்தான். ஆனால் பாணன் செல்லும் முன்னமே தலைவன் தன் ஆற்றாமையால் சென்றுவிட, அவனைத் தலைவியும் தன்னுடைய ஆற்றாமையால் ஏற்றுக்கொள்கிறாள். மறுநாள் காலையில் வந்த பாணனைத் தலைவி எள்ளி நகைக்கின்றாள். தலைவனின் குறையை மறைத்துப் பொய்கூறி என்னை ஏமாற்ற இயலாது என்று கூறி நகைப்பதால் பாணன் பழிக்கப்படுகிறான். அத்தகைய சூழலிலும் பாணன் பதில் கூறியதாகவோ, தலைவனின் செயலுக்குத் தான் பழியேற்கத் தேவையில்லை என்ற எண்ணம் கொண்டவனாகவோ அவன் காணப்படவில்லை.

இதேபோன்று பல நேரங்களில் தலைவன் செய்யும் தவறுகளுக்குத் தலைவியிடம் அவப்பெயரும், பழிச்சொல்லும், வெறுப்புணர்வும் ஏற்பவனாகவே பாணன் காணப்படுகிறான். இதனைப்,

"**பைதல மல்லேம் பாண பாணத்தோ**

**ளைதமைந் தகன்ற வல்கு**

**னெய்தலங் கண்ணியை நேர்தனாம் பெறினே**" (ஐங்.பா.எ: 135.,வ.ள்: 1-3)

எனும் பாடலால், விளக்குகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 192) தலைவன் பரத்தையற் மாட்டு விருப்புள்ளான் என்பதைத் தலைவி தன்பாங்காயினர் மூலம் அறிகின்றாள். இதனால் தலைவி மிகவும் உடல்மெலிந்து காணப்படுகின்றாள். தலைவியின் பொலிவின்மைக்குக் காரணம் யாதெனப் பாணனை அறிந்துவர அனுப்புகின்றான் தலைவன். அப்போது பாணன் வந்தமையைக் கண்ட தலைவி, உங்கள் பொல்லாத சூழ்ச்சியை நான் அறிவேன் என்று கூறிப் பாணனைத் தூற்றுகின்றாள். இதுபோலவே,

"**பாணன் போலப் பலபொய்த் தல்லே**" (ஐங்.பா.எ: 47.,வ: 5)

எனும் வரியானது, குறிக்கின்றது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 76) நின்னுடைய பாணனைப் போலவே நீ பேசும் பேச்சு யாவும் பொய்யெனறு நான் அறிவேன் எனத் தலைவி தலைவனிடத்து உரைக்கின்றாள். இதில் பாணனைப் பொய்யன் என்று தலைவி கூறுகின்றாள். ஆனால் அபொய்யினைப் பாணன் தலைவனுக்காக் கூறியிருப்பினும், தலைவியால் பாணனே தூற்றப்படுகிறான். மேலும்,

"**யார்நலஞ் சிதையப் பொய்க்குமோ வினியே**" (ஐங்.பா.எ: 49.,வ: 4)

எனும் வரியும், சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 78-79) தலைவனுக்குக் கேட்குமாறு பாணனைத் தலைவி, இனி நின் பாண்மகன் யார் நலம் கெடும்படிப் பொய் கூறுவானோ? நான் அறியேன் என்கிறாள். இதுபோலவே தலைவியால் பாணன் தூற்றப்படுவதை,

"**எடுத்துச்சூள் பலவுற்ற பாணன்வந்தீயான் சொல்**" (கலி.பா.எ: 71.,வ: 14)

எனும் வரியும், (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 211)

"**ஒருநின் பாணன் பொய்யன் ஆக**" (குறுந்.பா.எ: 127.,வ: 4)

எனும் வரியும் உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 235) பாணனைப் பொய்யன் என்று பழிதூற்றுவதாகக் காணப்படுகின்றன. ஆனால் எச்சூழலிலும் தலைவியிடத்தோ அல்லது பரத்தையரிடத்தோ பாணர் தம்மைத் தூற்றியமைக்காகக் கடிந்து கொண்டதில்லை. மேலும்,

"**கண்டாங்கு உரையாய் குணமோ பாண**" (நற்.பா.எ: 291.,வ: 6)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 359) தலைவியின் நிலையைத் தலைவனுக்கு உள்ளது உள்ளவாறு கூறவில்லை. இது உன்னுடைய தகுதி ஆகுமோ? என்று தோழி பாணனைத் தூற்றுகிறாள். மேலும்,

"**நின்புகழ் பலபாடும் பாணனும் ஏமுற்றான்**" (கலி.பா.எ: 74.,வ: 7)

எனும் வரியும், (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 217)

"**நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாணன்**" (கலி.பா.எ: 77.,வ: 18)

எனும் வரியும், (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 225)

"**வினித்துநின் பாணனோ டாடியளித்தி**" (கலி.பா.எ: 95.,வ: 31)

எனும் வரியும், சுட்டுகின்றது. (நச்சினார்க்கினியர்.(உ.ஆ).,1943: 287) பாணனைப் பொய்யன் என்றும், அவனாலேயே தலைவன் தன்நிலை திரிந்து போகின்றான் எனவும், பாணனேத் தன் நோய்க்குக் காரணமானவன் என்றும் பலவாறு தூற்றப்படுகின்றான்.

பாணரும், பாண்மரபினரும் பல்வேறு வகையில் இக்கட்டான சூழலுக்குத் தள்ளப்பட்டாலும், பழிதூற்றலுக்கு ஆளானாலும், அவற்றை எல்லாம் மிக்க பொறுமையுடன் கையாள்வதில் வல்லமை கொண்டவர்களாக விளங்குகின்றனர். மேலும் இத்தனைச் சிக்கல்களையும் பாணர் தாங்கிக்கொள்ளக் காரணம், அவர்களின் வறுமை நிலையே ஆகும். தன்னுடைய வறுமைத் துயரைப் போக்கிக்கொள்ளவே, தலைவன் தலைவியர் என்ன

கூறினாலும் அதனைப் பொறுமையுடன் ஏற்றுக்கொள்ளும் மனம் உடையவராகத் தம்மை மாற்றிக்கொள்ளும் பண்பினராகக் காணப்படுபின்றனர். அதேபோன்று பரிசில் நீட்டித்தாலும் வேறுவழியின்றி அதனைப்பெற பாணர் பொறுமையுடன் காத்திருந்தனர் என்பதும் குறிப்பிடதத்தக்கது. இதன்வழிப் பாணர் பொறுமையெனும் பண்பினர் என்பது தெளிவாகிறது.

### 4.4. பாணரின் நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்ளும்

பாணர் சங்கச் சமூகத்துடன் இணக்கமுற வாழ்ந்த காரணத்தினால், அவர்களின் நம்பிக்கைகளும், பழக்கவழக்கங்களும் அதனை அடியொற்றியே அமைகின்றன. பாணர் நடுகல் வழிபாட்டினை மேற்கொண்டுள்ளனர் என்பதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. அவர்கள் தம்மைப் புரந்த அரசனை இறைவனாகக் கருதும் இயல்புடையவர்களாகவும், விளக்கின் மீது நம்பிக்கை கொண்டவர்களாகவும் விளங்குவதை இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன. அவர்கள் தம் புரவலர்களிடம் தமக்குத் தேவையானவற்றை உரிமையோடு கேட்டுப்பெறும் பழக்கம் உடையவர்களாகவும் காணப்படுவதை இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. மேலும், அவர்கள் தமக்குப் பிறரைப்போல வழங்கவேண்டும் என்றும், பிறருக்கு வழங்கியது போலத் தனக்கும் வழங்கவேண்டும் என்றும் உரிமையோடு கூறுகின்ற இயல்பினராகவும் விளங்குகின்றனர்.

#### 4.4.1. அரசனை இறையாக எண்ணுதல்

பாணர் தமக்குப் பரிசில் வழங்கி வாழ்விக்கின்ற வள்ளல் பெருமக்களை இறைவனாகக் கருதுவதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. வள்ளல்களைத் தம் இறைவன் என்றும், அவனுக்கு தாமே பாணன் என்றும் கூறுவதனைப்,

**“புகழ்சால் சிறப்பினின் னல்லிசை யுள்ளி**

**வந்தனெ னெந்தை யானே யென்றும்”** (புறம்.பா.எ: 135.,வ.எ்: 9-10)

எனும் வரிகள், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 284) என்னுடைய இறைவா நான் நினது புகழை நினைந்து வந்தேன் என்று உணர்த்துவதன்மூலம் பாணர் தம் புரவலரை இறைவனாகப் போற்றும் மாண்பினராகக் காட்டுகின்றது. மேலும்,

**“பாண்கட னிறுக்கும் வள்ளியோய்**

**பூண்கட னெந்தைநீ யிரவலர் புரவே”** (புறம்.பா.எ: 203.,வ.எ்: 11-12)

எனும் வரிகளும், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 9) பாணருக்குக் கொடுப்பதனையே தமது கடமையாகக் கொண்ட எம் இறைவா! என்கிறான் ஒரு

பாணன். நீ இரப்போரைப் பாதுகாத்தலை முறைமையாகப் பரிகரிப்பாய் என்றும் கூறுகிறான். இவ்வரிகள், பாணர் தம் புரவலர்களை இறைவனாக போற்றியதைப் புலனாக்குகிறது. இதேபான்று,

“**நுங்கோ யாரென வினவி னெங்கோக்**” (புறம்.பா.எ: 212.,வ: 1)

எனும் வரியும், சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 32) அரசனை இறைவனாக மதித்த பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழனைத் தன்னுடைய இறைவன் என்று கூறுகின்றார். மற்றும்

“**நிரையொடு வரூஉ மென்னைக்**” (புறம்.பா.எ: 262.,வ: 5)

எனும் வரியும், விளக்குகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 130-131) சீறூர்த் தலைவனைத் தன்னுடைய இறைவனாகப் பாணர் போற்றினர். பாணரும், பாண்மரபினரும் தம்மைப் புரந்த வள்ளல்கள் யாரானாலும், அவர்களை இறைவனாக எண்ணித் துதித்தும், மதித்தும் போற்றிப் புகழ்ந்துள்ளனர். ஏனெனில், பசிப்பிணியைக் களைபவர் யாராக இருப்பினும் அவர்கள் இறைவனுக்குச் சமமாகக் கருதப்பட்டனர். இந்நிலையை அக்கால மக்களிடத்துக் காணப்படுகிறது.

பாணரும் தம்முடைய பசித்துயரையும், வறுமையையும் போக்கிய புரவலர்களை இறைவனாகப் போற்றினார் என்பது இதன் வாயிலாகப் புலப்படுகிறது.

**4.4.2. நடுகற்களை வழிபடும் வழக்கம்**

பாணர் சீறூர்ச் சமுதாயத்துடனும், சீறூர்த் தலைவனுடனும் மிக்க இணக்கமுடையவனாக இருந்த காரணத்தினால், நடுகல் வழிபாடு கொண்டவராக உள்ளமையைச் சங்கஇலக்கியங்கள் கூறுகின்றன. சீறூர்த் தலைவி தன்னுடைய இல்லிற்கு விருந்தினர் வரவேண்டும் என்று நடுகல்லினை வழிபடுவதனைச் சங்கப்பனுவல்கள் உணர்த்துகின்றன. அவ்வாறு நடுகல்லை வழிபடும்போது தன்னுடைய தலைவன் வேந்துவிடு தொழில்மேற் செல்ல வேண்டும் எனவும் வேண்டுகிறாள். ஏனெனில், சீறூர்த்தலைவன் பெரும்பாலும் உடைமை அற்றவனாக விளங்குவதால் அவன் தன்னை நாடி வருவோர்க்கு வழங்கப் பொருள் வேணடும். அதற்காக வேந்துவிடு தொழில்மேற் செல்ல வேண்டும் என்று தலைவி வேண்டுகிறாள் என்றும் இலக்கியங்கள் பதிவு செய்கின்றன.

பாணர் சுற்றம் சீறூர்ச் சமுதாயத்துடன் மிக்க இணக்கமான தொடர்பு கொண்டமையால் அவர்களும் நடுகல்லை வழிபடும் வழக்கம் உடையவராகக் காணப்படுகின்றனர். இதனைப்,

“**பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண்**

…………………………………………

………………………………………

**வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்**

**கொல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே**'' (புறம்.பா.எ: 263.,வ.ள்: 1-8)

என்னும் வரிகள் விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 131-132) ஆநிரைகளை மீட்டு வந்த தலைவன், போரில் பகைவரின் அம்பு தைத்து வீரமரணம் அடைந்தான். அவனின் நினைவாகக் கல்லினை நட்டுவைத்து அதற்கு வழிபாடும் செய்தனர். அவ்வேளையில், பாண் சுற்றம் வருவதைக் கண்டு, அவருக்குக் கூறுவதாக இவ்வரிகள் அமைந்துள்ளன. ''பாண! நீ இவ்வழியே செல்கின்றாயாயின், வழியில் உடன்வந்த மறவர் அஞ்சி நீங்கினர். ஆனால், தான் நீங்காது நின்று வெட்சியாருடன் பொருது பின் வீரமரணம் ஏற்று நடுகல்லாகியத் தலைமகனைக் காண்பாய் என்கின்றனர். மேலும், அங்கே நடுகல்லைக் கண்டு வழிபடாமல் செல்லற்க. வழிபடுவையேல், விறங்கூர்ந்திருக்கும் (வீரம் நிறைந்திருக்கும்) இவ்வழி வண்டு மேம்பட்டு வாழும் வளமுடையதாகும் என்று கூறுகின்றனர். இது பாணரின் நடுகல் வழிபாட்டினை உணர்த்துகிறது. மேலும்,

''**வாரத் தொடினும் வௌவுபு திரிந்து**''

………………………………………

…………………………………………

**உயரிசை வெறுப்பத் தோன்றிய பெயரே**

**மடஞ்சான் மஞ்ஞை யணிமயிர் சூட்டி**

**இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்**

**படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே**'' (புறம்.பா.எ: 260.,வ.ள்: 1-28)

எனும் பாடல், உணர்த்திச் செல்கின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 124-125) நிரைமீட்டு வந்த தலைவன் உடலில் மிக்க விழுப்புண் ஏற்பட்டமையால் இறந்துவிட்டான். அவனின் நினைவாக நடுகல் நட்டுவைத்தனர் அவ்வூரார். அதில் அவனுடைய புகழையும் பெயரையும் பொறித்து, மயிற்பீலியும் பூமாலையும் கொண்டு வழிபட்டனர். அத்தலைவன் இறந்தமை தெரியாமல் வருகின்ற பாணனிடம், இன்னொரு பாணன் தலைவன் இறந்த செய்தியைத் தெரிவிக்கின்றான். பாணரின் நடுக்கல் வழிபாட்டினை வெளிப்படுத்துகிறது. இதுபோன்று,

**“ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை**

……………………………………

……………………………………

**கல்லா யினையே கடுமான் றோன்றல்”** (புறம்.பா.எ: 265.,வ.எ்: 1-5)

எனும் பாடல் வரிகளும், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 135) பண்ணன் என்னும் சிறுகுடியின் தலைவன் கரந்தைப் போரில் உயிர் துறந்து நடுகல்லானான். அவனை வழிபட்டுச் சிறப்புச் செய்தனர் அவனைச் சார்ந்தோர். இது பாணரின் நடுகல் வழிபாட்டிற்குச் சான்றாகிறது. மேலும்,

**“பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி**

**மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ**

**மணியிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்**

**தினிநட் டனரே கல்லுங் கனடறொடு**

**கறவை தந்து பகைவ ரோட்டிய**

**நெடுந்தகை கழிந்தமை யறியா**

**தின்றும் வருங்கொல் பாணரது கடும்பே”** (புறம்.பா.எ: 264.,வ.எ்: 1-7)

எனும் பாடலும், நடுகல் வழிபாட்டினைத் தெரிவிக்கின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 134) ஆநிரைகளைக் கவர்ந்து சென்று பகைவரை வெருட்டியோட்டி, நிரைகளை மீட்டுக்காத்த தலைவன் இறுதியில் இறந்துபட்டான். அவனுடைய நினைவாக, நடுகல் ஒன்றினை நட்டு, அதில் அவனுடைய பெயரும், பீடும் எழுதி வைத்தனர். அதற்கு மயிற்பீலியும், பூமாலையும் சூட்டிச் சிறப்புச் செய்து வழிபட்டனர். அப்போது ஒரு பாண்சுற்றம் அத்தலைவனைத் தேடி வருவதைக் கண்டவர்கள், இத்தலைவன் இறந்த செய்தி பாண் சுற்றத்திற்கு தெரியுமோ? தெரியாதோ? என்று வருந்துகின்றனர். சீறூர்ச் சமுதாயம் நடுகல்லை வழிபட்டுள்ளது. இதன்மூலம் அச்சமுதாயத்துடன் நெருங்கிய தொடர்புடைய பாணரும் நடுகல் வழிபாட்டினை மேற்கொள்ளும் வழக்கமுடையவராகக் காணப்படுகின்றனர்.

### 4.4.3. நிமித்தம் பார்த்தல்

அக்கால மக்களுள் நிமித்தம் பார்க்கின்ற வழக்கம் இருந்தமையை இலக்கியங்கள் அறியச்செய்கின்றன. அத்தகைய நிமித்தம் பார்க்கின்ற வழக்கம் பாணரிடமும் காணப்பட்டமையைச் சங்கப்பனுவல்கள் உணர்த்துகின்றன. இதனை,

“**வரைத் தொடினும் வௌவுபு திரிந்து**

………………………………

…………………………………

**உளருங் கூந்த னோக்கிக் களர**

**கள்ளி நீழற் கடவுள் வாழ்த்திப்**” (புறம்.பா.எ: 260.,வ.ள்: 1-5)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 124-125) சீறூர்த் தலைவன் ஒருவன் தன்னூர் ஆநிரைகளைப் பகைவர் கவர்ந்த பொழுது, அதனை மீட்டுக் கொண்டு வந்தான். அவ்வாறு மீட்பதற்காகச் செய்த போரில் பகைவரின் அம்புகள் பல தைத்து உயிர் துறந்தான். அவனின் நினைவாக நடுகல்லை நட்டுச் சிறப்புச் செய்தனர் அவ்வூரார். ஆனால் இதனை அறியாத பாணன் ஒருவன் அத்தலைவனைக் காண வந்துகொண்டிருந்த வேளையில், (மனையாள்) பெண்ணொருத்தி தன் கூந்தலை விரித்து வருகின்றமையைக் கண்டாகன். இது தீ நிமித்தமாக உள்ளதென உணர்ந்தான். இதனால் தலைவனைக் காண இயலாதுபோலும் என்று எண்ணினான். இது நிமித்தங்களின் மீது பாணர் கொண்ட நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றன. மேலும்,

“**என்னை மார்பிற் புண்ணும் வெய்ய**

**நடுநாள் வந்து தும்பியுந் துவைக்கும்**

**நெடுநகர் வரைப்பின் விளக்கு நில்லா**

**துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்**

**அஞ்சுவரு குராகூற் குரலும் தூற்றும்**

**நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கு**

**செம்முது பெணடிண் சொல்லு நிரம்பா**

**துடிய பாண பாடுவல் விறலி**

**என்னா குவிர்கொ லளியீர் நமக்கும்**” (புறம்.பா.எ: 280.,வ.ள்: 1-10)

எனும் வரிகளும், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 160) தலைவன் ஒருவன் விழுப்புண்பட்டு இறுதிநிலையில் இருக்கின்றான். இதனைக் கண்ட நப்பசலையார், தலைவன் உயிர் பிழைப்பது அரிது என்பதைப் பல குறிகளால் அறிகிறார். அதாவது தலைவனின் மார்பில் உண்டாகிய புண்கள் பெரியனவாக உள்ளன. அதுமட்டும் அல்லாது, நண்பகற் காலத்தில் வண்டுகள் மொய்த்து ஒலிக்கின்றன. மனையில் ஏற்றி வைத்த

விளக்குகள் எல்லாம் நின்றெறியாமல் அவிந்து விடுகின்றன. உறங்குதல் ஒழிந்த என் கண்கள் உறக்கத்தை விரும்புகின்றன. அச்சம் தரும் கூகையும் தன் குழறு குரலெடுத்து ஒலித்துக்கொண்டே இருக்கிறது. மேலும் நெல்லும் நீரும் கொண்டு விரிச்சி கேட்கும் செம்மையுடைய முதுபெண்டிரின் வாய்மொழிகளும் பொய்யாகின்னறன. எனவே தலைவன் உயிர் நீட்டிப்பது என்பது அரிது. அவன் இறுதி எய்துவான் போலும் என்று கூறுகின்றார். இதன்மூலம் பாணர் நிமித்தங்களின் மேல் நம்பிக்கை உள்ளவரென்பதும், தன்னைப் புரந்த தலைவனை எண்ணி வாடி வருந்துவதனையும் அறியமுடிகின்றது.

### 4.4.4. பாணரின் உணவு முறை

பாணரின் உணவுமுறை என்பது அவர்கள் சார்ந்திருந்த சமுதாயத்தையும், வள்ளல்களையும் கொண்டே அமைந்துள்ளன. அவர்கள் தாம் தங்கிருந்த இடத்திற்கு ஏற்றவாறு தம்முடைய உணவுப் பழக்கத்தைக் கொண்ணடுள்ளனர். காய், கனி, கீரை, பால், தயிர், இறைச்சி உணவு, மீன், தேன், தினை, வரகு, சாமை, மூங்கில் அரிசி போன்றவை அவர்களின் உணவுப் பட்டியலில் இடம்பெறுவதனையும் சங்கநூல்கள் அறிவிக்கின்றன.

#### 4.4.4.1. நீர் ஆதாரம்

உலக வாழ்க்கையில் எல்லா உயிர்களுக்கும் ‘நீர்’ அடிப்படைத் தேவையானதாகும். இதனையே “நீர் இன்றிஅமையாது உலகு” (திரு.கு.,அதி.எ: 2.,கு.எ: 20) என்று வள்ளுவப் பெருந்தகை குறிப்பிடுகிறார். (மு. வரதராசனார்.(உ.ஆ).,1949: 4) அத்தகைய நீராதாரம் பாணரின் வாழ்வில் அவர்கள் எந்நிலத்தில், எச்சூழலில் சார்ந்துறைந்து உள்ளனரோ, அதற்கேற்றவாறு அவர்களின் நீராதாரம் அமைகின்றது. இதனைக்,

“***களிறு பொரக் கலங்கு கழன்முள் வேலி***

***அரிதுண் கூவ லங்குடிச் சீறூர்***” (புறம்.பா.எ: 306.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், சுட்டிச்செல்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 211) களிறு படிந்துழக்கக் கலங்கிச் சேறாகின்ற உண்ணும் நீர், கிடைத்தற்கு அரிதாகிய நீர் நிலையை உடைய சீறூர் என்று உணர்த்துகின்றன. மேலும்,

“***குழிகொள் சின்னீர்***” (புறம்.பா.எ: 325.,வ: 3)

எனும் வரியானது. பள்ளங்களில் தங்கிய சிறியதாகிய நீர் என்று உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 246-247) இதன்மூலம், வன்புலச் சமுதாயமான சீறூர்ச்

சமுதாயத்துடன் பெரிதும் இணக்கத்துடன் பாணர் வாழ்ந்துள்ளனர். அதுமட்டுமல்லாது அவர்களின் நீராதாரம் சிறிய குட்டைகளில் தேங்கிய நீரே ஆகும்.

அதேபோன்று பாணர் சென்று தங்கிய வையை ஆற்றங்கரை பற்றி மதுரைக்காஞ்சி எடுத்துரைக்கிறது. அதில்,

**"வையைத் துறை துறை தோறும்**

**பல்வேறு பூத்திரட் தணீடலை சுற்றி**

**அழுந்துபட் டிருந்த பெரும்பான் இருக்கையும்"** (மதுரைக்.,வ.ள்: 340-342)

எனும் வரிகள், மதுரை வையை ஆற்றங்கரைகளில் பாண் சுற்றத்தினர் தங்கி இருந்தனர் என்று கூறுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 125) மேலும்,

**"கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்"** (புறம்.பா.எ: 331.,வ: 1)

எனும் வரியால், கல்லை உடைத்துச்செய்த வலிய உவர்நீர் ஊறும் கிணறுகளைக் கொண்ட சீறூர் என்று உணர்த்தப்படுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 259) இதன்மூலம், கிணற்று நீறும் பாணரின் நீராதாரமாக விளங்கியுள்ளது.

பாணர் தாம் எங்கு சென்று தங்குகின்றனரோ, அங்குள்ள நீராதாரத்தையே தம்முடைய நீராதாரமாகக் கொண்டுள்ளனர் என்பது அறியப்படுகிறது.

**4.4.4.2. பாணரின் உணவில்- பயிர் வகைகள்**

பாணர் தாம் இடம் பெயர்ந்து சென்று தங்குகின்ற இடத்திற்கு ஏற்றவாறு தம்முடைய உணவுப் பழக்கத்தைக் கொணடனர். பாணர் பெரும்பாலும் சீறூர்ச் சமுதாயத்துடன் இணக்கமாக இருந்த காரணத்தால், அவர்கள் அங்கு கிடைத்த (அல்லது) வழங்கிய உணவினை மட்டும் உண்டு வாழ்ந்தனர்.

**4.4.4.2.1. வரகரிசியும் தேனும்**

பாணர் தம் உணவில் வரகரிசியால் சமைத்த உணவும், தேனும் உண்டனர். இதனைப்,

**"புறவுக் கருவன்ன புன்புல வரகின்**

**பாற்பெய் புன்கர் தேனொடு மயக்கி"** (புறம்.பா.எ: 34.,வ.ள்: 9-10)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 96-97) புறாவினது கருவாகிய முட்டைபோன்ற புல்லிய நிலத்து வரகினது அரிசியைப் பாலின்கண் பெய்து அடப்பட்ட சோற்றைத் தேனொடு கலந்துண்டனர். மேலும்,

“**கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்**” (புறம்.பா.எ: 321.,வ: 6)

எனும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 238)

“**சில்விளை வரகின் புல்லென் குப்பை**” (புறம்.பா.எ: 327.,வ: 2)

எனும் வரியும், வரகு பயிரிடப்பட்ட செய்தியை உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 238-251) இதன்மூலம் பாணர் தாம் தங்கியிருந்த (இடத்தினரால்) சமுதாயத்தினரால் வழங்கப்பட்ட வரகரிசிச் சோறும், அச்சோற்றைப் பாலும் தேனும் சேர்ந்து கலந்து உண்டமையும் அறியமுடிகிறது.

**4.4.4.2.2. தினையரிசி**

வரகரிசி உணவினைப் போலவே திணையரிசியும் பாணரின் உணவுமுறையில் முக்கிய இடம் பிடிப்பதனை,

“**வரகுந் திணையு முள்ளவை யெல்லாம்**” (புறம்.பா.எ: 328.,வ: 3)

எனும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 253)

“…………………**மனையோள் விரும்பி**

**வரகும் தினையு முள்ளவை யெல்லாம்**

**இரவன் மாக்க ளுனக்கொளத் தீர்ந்தெனக்**

………………………………………

……**விதைத் திணை யுரல்வாய் பெய்து**” (புறம்.பா.எ: 333.,வ.ள்: 8-12)

எனும் வரிகளும், புலப்படுத்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 263) சீறூர்த் தலைவி பாணராகிய இரவலர்க்கு உணவாகத் திணையரிசிச் சோறும், வரகரிசிச் சோறும் வழங்கினாள். மேலும் இரவலர்க்குத் தேவையான உணவுப்பொருள் தீர்ந்துபோன நிலையில் சீறூர்த் தலைவி விதைக்காக வைத்திருந்த தினையை உரலிலிட்டுப் பதம் பார்த்துச் சமைத்து வழங்கியுள்ளாள். இதன்மூலம், பாணர் தினையரிசிச் சோறு உண்டனர் என்பதை அறியமுடிகிறது.

**4.4.4.3. பழங்கள்**

பாண்சுற்றம் தாம் தங்கிய இடங்களில் வளர்ந்துள்ள மரங்களின் பழங்களையும் உண்டுள்ளனர். இதனை,

“**இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து**” (புறம்.பா.எ: 34.,வ: 12)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 96-97) பாணர் தங்கியிருந்த மனைகளுக்கு அருகில் உயர்ந்த இலந்தை மரங்கள் வளர்ந்திருந்தன. பாணர் இவ்விலந்தை மரக்கனியான இலந்தைப் பழத்தை உண்டுள்ளனர்.

"**வள்ளத் திடும்பா லுள்ளுறை தொடரியொடு**" (புறம்.பா.எ: 328.,வ: 7)

எனும் வரியானது, சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 253) தொடரிப்பழம் எனும் ஒருவகைப் பழத்தினை உண்ணும் வழக்கமுடையவராகப் பாணர் விளங்கினர். மேலும்,

"**களவுப் புளியன்ன**" (புறம்.பா.எ: 328.,வ: 8)

எனும் வரி, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 253) பாணர் களாப்பழம் உண்டனர் என்று புலப்படுத்துகிறது.

"**புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்**" (புறம்.பா.எ: 314.,வ: 4)

எனும் வரியானது, நெல்லிக்கனியைப் பாணர் சுவைத்தமையை புலப்படுத்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 224) மற்றும்,

........................ **வங்குடிச் சீறூர்**

**குமிழுண் வெள்ளை**.................." (புறம்.பா.எ: 324.,வ.ள்: 8-9)

எனும் வரிகளும், குறிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 224) குமிழம் பழங்களைக்கொண்ட மரமானது பாணரின் பொதியில்லின் அருகில் வளர்ந்திருந்தன. எனவே அப்பழங்களைப் பாணர் உண்டுள்ளனர் என்றும், பாணர் தம் பொதியில்லின் அருகில் வளர்ந்திருந்த மரங்களின் பழங்களை உண்ணும் பழக்கமுடையவர் என்பதையும் அறியமுடிகிறது.

#### 4.4.4.4. பாலும் தயிரும் நெய்யும்

இரவலராகிய பாண் சுற்றத்தினருக்குப் பால், தயிர், நெய் போன்றவற்றை வெண் சோற்றுடனும், ஊனுடனும் கலந்து கொடுக்கும் இயல்பினை உடையவர்களாகச் சீறூர்ச் சமுதாயத்தினர் விளங்கினர். இதனை,

"**விழுக்க நிணம் பெய்த தயிர்க்கண்**" (புறம்.பா.எ: 326.,வ: 10)

என்னும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 249)

"**வள்ளத் திடும்பால் உள்ளுறை**" (புறம்.பா.எ: 328.,வ: 7)

என்னும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 253)

“**கொய்குரல் அரிசியொடு நெய்யெய்து**……” (புறம்.பா.எ: 328.,வ: 10)

என்னும் வரியும், (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 253)

“**பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கி**” (புறம்.பா.எ: 34.,வ: 10)

என்னும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 96) பாணர் பாலில் உறையும் தயிரை உண்ணும் பழக்கம் உள்ளவர்களாக விளங்கினர். அவர்கள் தயிரினை ஊனுடன் கலந்து சமைக்கின்ற வழக்கத்தினை உடையவர்களாகவும் விளங்கினர். மேலும் அரிசிச்சோறுடன் நெய்கலந்து உண்ணும் வழக்கமும், பாலும், தேனும் கலந்து உண்ணும் வழக்கமும் உடையவர் பாணர் என்பது புலனாகிறது.

**4.4.4.5. பாண் சமூகத்தில் இறைச்சியின் பங்கு**

பாண்சுற்றத்தினருக்கு வள்ளல்களும், குறுநில மன்னர்களும், பெருவேந்தர்களும், சீறூர்த் தலைவர்களும் என அனைவரும் இறைச்சி உணவினைப் பெரிதும் விருந்தளித்துள்ளனர். மேலும் அக்கால மக்களின் உணவுப்பழக்கம் வேட்டைத் தொழிலை அடிப்படையாகக் கொண்டே அமைந்திருந்தன. எனவே அவர்களின் உணவுமுறையில் இறைச்சி உணவு பெரிதும் இடம்பிடித்திருக்கக் காரணமானது. இதனைக்,

“**கொல்லை உழுகொழு ஏய்ப்ப, பல்லே**

**எல்லையும் இரவும் ஊன்தின்று மழுங்கி**” (பொருந.,வ.எ: 117-118)

எனும் இவ்வரிகள், உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 69) கரிகாற் பெருவளத்தான் பொருநருக்குச் சுடச்சுட இறைச்சியைக் கொடுத்து உண்ணச் செய்துள்ளான். அவ்இறைச்சியின் சூட்டினை ஆற்றும் பொருட்டு வாயின் இடப்பக்கத்தில் இருந்து வலப்பக்கத்திற்கும், வலப்பக்கத்திலிருந்து இடப்பக்கத்திற்கும் கறியை வாய்க்குள்ளேயே சுழற்றிச் சுழற்றி ஆறவைத்து உண்டனர் என்று கூறுவதன் மூலம் அக்கால மக்களின் இறைச்சி உண்ணும் பழக்கத்தை அறியமுடிகிறது.

**4.4.4.5.1. மான்**

இரவலராகிய பாண் சுற்றத்தினருக்கு மான் இறைச்சிகொண்டு அக்கால மக்கள் விருந்தளித்துள்ளனர். இதனை,

“**மான்றசை சொரிந்த வட்டியு மாய்மகள்**

…………………………………………

…………………………………………

**ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்தும்**” (புறம்.பா.எ: 33.,வ: 2-14)

எனும் பாடலடிகள், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 92-93) மான் தசையோடு கூடிய பெருஞ்சோற்றுத் திரளையை பாண்சுற்றத்திற்கு அளித்தனர். மேலும்,

“................................**வேட்டத்தில்**

**தானுயிர் செடுத்த மானிணைப் புழுக்கோ**

**டானுருக் கன்ன வேரியை நல்கித்**” (புறம்.பா.எ: 152.,வ.ள்: 25-27)

எனும் வரிகளும், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 321-322) வல்வில் ஓரி தன்னை நாடி வந்த பாண் சுற்றத்திற்குத் தான் வேட்டையாடிய மானினது நிணத்தையுடைய தசையினது புழுக்குடனே சேர்த்து ஆவின் நெய்யை உருக்கினாற்போன்ற மதுவைத் தந்தான் என்று உணர்த்துகின்றன. மான் இறைச்சியை அக்காலச் சமூகத்துடன் பாண் சுற்றத்தினரும் உண்டமையை அறியமுடிகிறது.

4.4.4.5.2. உடும்பு

உடும்பின் தோலை உரித்து அதன் கொழுப்பு நிறைந்த தசைப் பகுதியைச் சமைத்து உண்டுள்ளனர். இதனை,

“**உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்**

**கடும்பின் கடும்பசி களையுநர்**............” (புறம்.பா.எ: 68.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 174-175) உடும்பினை உரித்தது போன்ற உருவத்தை உடையவர்கள் பாணர் என்று அவர்களின் தோற்றத்தை வெளிப்படுத்துகின்றன. இதன்மூலம் உடும்பினைத் தோலுரித்து அதன் ஊனைச் சமைத்து உண்டுள்ளனர். இதேபோன்று,

“**உடும்பிழு தறுத்த** ...........................

..................................................

**கொள்ளி வைத்த கொழுநிண நாற்றம்**” (புறம்.பா.எ: 325.,வ.ள்: 7-9)

எனும் வரிகளும், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 246) உடும்பினது தசையை நெருப்பால் வேகவைத்தனர் என்றும், அந்நிணத்தின் மணம் தெருவெல்லாம் மணத்தது என்றும் உணர்த்துகின்றன. மேலும்,

“**படுமடைக் கொண்ட குறுந்தா ளுடும்பின்**

**விழுக்கு நிணம் பெய்த** .................

........................ **பாணரொ டொராங்கு**

**வருவிருந் தயரும் விருப்பினள்**...........” (புறம்.பா.எ: 326.,வ.ள்: 9-12)

எனும் வரிகளும் சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 249) மடுக்கரையில் பிடித்துக் கொண்டு வந்த குறுகிய காலையுடைய உடும்பினது, விழுக்காகிய (கொழுப்பு நிறைந்த) தசையைப் பெய்து சமைக்கப்பட்ட தயிரோடு கூடிய கூழையும், வேறு நல்ல உணவுப் பொருட்களையும், பாணருக்கும் அவரோடு வந்த ஏனை விருந்தினருக்கும் ஒரு சேரக் கொடுத்து உண்பிக்கின்ற சீறூர்த் தலைவியின் விருந்தோம்பல் பண்பினை அறியும்படியாக அமைந்துள்ளது. இதன்வழிப் பாணரின் உடும்பினை உண்ணும் பழக்கத்தை அறியமுடிகிறது.

**4.4.4.5.3. பன்றியும், முள்ளம்பன்றியும்**

வேட்டை உணவுகளில் ஒன்றாகப் பன்றியும், முள்ளம்பன்றியும் அமைகின்றது. இதனைப் பாண்மரபினர் தங்கள் உணவுகளில் ஒன்றாக உட்கொண்டனர். இதனை,

“**முளவுமாத் தொலைச்சிய முழுச்சொலாடவர்**” (புறம்.பா.எ: 325.,வ: 6)

எனும் வரி, முள்ளம் பன்றியினைக் கொன்று உணவாகக் கொண்டனர் என்று உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 246) மேலும்,

“**களிறுநீ ராடிய விடுநில மருங்கின்**” (புறம்.பா.எ: 325.,வ: 1)

எனும் வரியும், பன்றியினைக் குறிக்கின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 246) இதன்மூலம் பன்றியும் அக்கால மக்களின் வேட்டை உணவுகளில் ஒன்றாக விளங்கியுள்ளது. மேலும்,

“**குறுந்தா ளேற்றைக் கொழுங்க ணல் விளர்**” (புறம்.பா.எ: 379.,வ: 8)

எனும் வரியும், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 386) குறுகிய கால்களையுடைய பன்றியின் கொழுவிய ஊன் துண்டங்களை நெய்யில் பொரித்து அளித்துண்டு மகிழ்ந்துள்ளனர்.

இதன்மூலம் அக்கால மக்களின் வாழ்வில் இடம் பெற்ற, பன்றி இறைச்சியும், முள்ளம் பன்றி இறைச்சியும், பாணரின் உணவு முறையிலும் பங்கேற்றன என்பது புலனாகிறது.

4.4.4.5.4. முயல்

முயல் வேட்டையும் அக்காலச் சமூகத்தின் உணவு வேட்டையுள் மிகவும் இன்றியமையாதது. இதனைச்,

"................... **சிறா அர் வில்லெடுத் தார்ப்பிற்**

**பெருங்கட் குறுமுயல் கருங்கல னுடைய**" (புறம்.பா.எ: 322.,வ.எ்: 4-5)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 240) சீறூர்ச் சமுதாயச் சிறுவர்கள் கையில் வில்லை எடுத்து வேட்டையாடும்போது மனை முன்றிலில் உள்ள கலன்கள் உருண்டு உடையும் என்று கூறுவதன்மூலம், முயல் உணவுப்பட்டியலில் இடம் பிடிப்பதை உணர்த்துகின்றன. மேலும்,

"**குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலோடு**" (புறம்.பா.எ: 34.,வ: 11)

எனும் வரியும், சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 96-97) குறிய முயலினது கொழுப்பு நிறைந்த சூடான இறைச்சியைத் தன் சுற்றத்தோடு தின்றதாகப் பாணர் கூறுவதன் மூலம் அவரின் முயல் இறைச்சி உண்ணும் பழக்கம் வெளிப்படுகிறது. இதேபோன்று,

"**முயல் வந்து கறிக்கு முன்றித்**" (புறம்.பா.எ: 328.,வ: 15)

எனும் வரியும், குறிப்பிடுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 253) முயல்கள் வந்து மேயும் முற்றத்தை உடையது பாணரின் பொதியில் என்பது புலனாகிறது. இதன்முலம் அவர்களின் வேட்டை உணவாக முயல் விளங்கியுள்ளது. மேலும்,

"................................**பொகுட்டுவிழிக் கண்ண**

**கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுயல்**" (புறம்.பா.எ: 333.,வ.எ்: 2-3)

எனும் வரிகள், குறிப்பிடுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 263) கொட்டைபோன்ற விழிபொருந்திய கண்களும், கரிய பிடரித் தலையும், பெரிய காதுகளையுடைய குறுமுயல் ஊருக்குள்ளே இருக்கும் குறிய புதரிடத்தே துள்ளி விளையாடும் என்று கூறப்படுகிறது. இதன்மூலம் முயல் அக்காலச் சமுகத்தின் அருகாமைக்குரிய விலங்காக விளங்கியுள்ளது. எனவேதான் அவர்கள் முயலை இறைச்சி உணவாகக்கொள்ளும் தன்மையைப் பெற்றுள்ளனர் என்பது புலனாகிறது.

4.4.4.5.5. எலிவேட்டை

சீறூர்ச் சிறார்கள் வேட்டையாடுவதைச் சங்கஇலங்கியங்கள் பதிவு செய்துள்ளன. அவ்வாறு வேட்டையாடத் தேவையான வில், அம்பினைத் தயார் செய்தமையையும், அதனைக்கொண்டு எலிகளை வேட்டையாடிய விதத்தையும் சங்கப்பாக்கள் விளக்குகின்றன. இதனைச்,

**"சிறியிலை யுடையின் சுரையுடை வான்முள்**

**ஊக நுண்கோற் செறிந்த வம்பின்**

**வலாஅர் வல்விற் குலாவரக் கோலிப்**

**பருத்தி வேலிக் கரும்பை பார்க்கும்"** (புறம்.பா.எ: 324.,வ.எ்: 4-7)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 244) வன்புலச் சமுதாயமான சீறூர்ச் சமுதாயத்தில் பயிரிடப்பட்ட வரகினைக் காக்கும் பொருட்டுச் சீறூர்ச் சிறுவர்கள் எலிகளை வேட்டையாடுகின்றனர். அதற்காக அவர்கள், உடைவேலமரத்தின் முள்ளை ஊகம்புல்லின் நுண்ணிய கோலில் செருகிய அம்பினைப் பயன்படுத்தியுள்ளனர். அவ்வம்புக்கு வில்லாக வளையும் தன்மைகொண்ட வளாரால் (இளங்கொம்பு) வில் செய்து வேட்டையாடினர். மேலும், அவ்வாறு எலிகளை வேட்டையாடும்போது அவை வரகின் உயர்ந்த தோகையிடையே சென்று மறையும். இதனையே,

**"புதுவர கரிகாற் கருப்பை பார்க்கும்**

**புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்"** (புறம்.பா.எ: 322.,வ.எ்: 3-4)

எனும் வரிகளும், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 240) வரகினை அறுவடை செய்தபின், அதன் அடிப்பகுதியை மேய வரும் எலிகளைப் பிடிப்பதற்க்குச் செவ்வி பார்த்திருக்கும் புல்லிய தலையையுடைய சிறுவர்கள் கையில் வில்லை எடுத்துக்கொண்டு ஆரவாரிப்பர். இதேபோன்று,

**"குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்டக்**

**கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்"** (புறம்.பா.எ: 321.,வ.எ்: 5-6)

எனும் வரிகளும், புலப்படுத்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 238) வளைந்த அழகிய காதுகளையுடைய கொல்லை வரப்பில் வாழும் எலியைப் பிடிக்க முற்படும்போது அவை வரகின் தோகையிடையே சென்று மறையும். இதன்மூலம், எலிவேட்டை அவர்களின் பசித்துயரைப் போக்கும் சிறுஉணவாகப் பயன்பட்டமையை அறியமுடிகிறது.

#### 4.4.4.5.6. கன்றும் ஆடும்

பாணர்சுற்றம் பயன்படுத்திய இசைக்கருவிகளால், அவர்கள் இசையறிவும் இசைத்தலறிவும் பெற்றவராவர் என்று உணர்த்துகின்றன. மேலும் அவ்விசைக் கருவிகள் யாவற்றையும் அவர்களே செய்துள்ளனர் என்பதைக்,

"**கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை**

**வள்ளுயிர்த் தண்ணுமை போல**" (நற்.பா.எ: 310.,வ.ள்: 9-10)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 383) ஆவின் கன்றையுரித்து உணவாகக் கொள்ளுகின்ற பாணன் கையிலுள்ள தண்ணுமை வாச்சியம்போல என்று உணர்த்துவதன் மூலம், கன்றின் இறைச்சியை உணவாகக் கொள்ளும் பழக்கம் பாண் சுற்றத்திடம் இருந்துள்ளது. ஆனால் கன்றினை வேட்டையாடியதாகக் குறிப்பிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. எனவே இயற்கையாக இறந்த கன்றின் இறைச்சியினை உணவாகவும், அதன் தோலைப் பதப்படுத்தி பறைக் கருவியாகவும் பயன்படுத்தியுள்ளனர்.

இதேபோன்று வெள்ளாட்டின் இறைச்சியையும் உணவாகக் கொண்டுள்ளனர் பாணர். இதனைக்,

"**குழுமின் வெள்ளை மறுவாய் பெயர்த்த**" (புறம்.பா.எ: 324.,வ: 9)

எனும் வரியும், உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 243-244) குமிழம் பழங்களை உண்ணும் வெள்ளாடு என்று கூறுவதன் மூலம், வெள்ளாடும் சீறார்ச் சமுதாயத்தில் வளர்க்கப்பட்டுள்ளது. இதன்மூலம், வெள்ளாடும் இறைச்சி உணவாகக் கொண்டுள்ளனர் என்பது பெறப்படுகிறது.

#### 4.4.4.5.7. மீன்பிடி தொழிலும் உணவும்

பாணர் பிறரை அண்டிவாழும் தன்மை கொண்ட இரவலர்கள். ஆனாலும் அவர்களும் சில வேளைகளில் சுயமாக மீன்பிடித்து அதனைப் பண்டமாற்றம் செய்துள்ளனர். அவ்வாறு தான்பிடித்த மீன்களை இட்டுவைத்த பாத்திரம் 'மண்டை' எனும் பெயரால் வழங்கப்பட்டுள்ளது. அம்'மண்டை' யாழுடன் சேர்ந்த கருவியாகப் பாணர் பயன்படுத்தியமையால் அவர்களுக்கு 'மண்டைப்பாணர்' என்றும் பெயர் வழங்கப்பட்டுள்ளது. இதனைப்,

"**பசுமீன் சொரிந்த மண்டை போல**" (குறுந்.பா.எ: 169.,வ: 4)

எனும் வரியானது குறிப்பிடுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 304) மேலும் இப்பாணர் வலை பின்னி மீன்பிடித்தனர் என்பதை,

"**வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்**

**வராஅல் சொரிந்த வட்டியுண்**" (ஐங்.பா.எ: 48.,வ.ள்: 1-2)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 77) பாணர் வலையால் மீன்பிடித்தலில் வல்லவராவர். இவர்கள் தாம் பிடித்த மீன்களுக்குப் பதிலாக மருதநிலத்து மனைக்கிழத்தியிடம் விலையாக ஓராண்டு கழிந்த பழைய வெண்ணெல்லைப் பெற்றுள்ளாள் பாணனுடைய மகள். இது பாணரின் மீன்பிடித் திறத்தையும், பாண்டமாற்று முறைத் திறத்தையும் வெளிப்படுத்துகின்றன. அவர்களின் உணவாக மீனும், வெண்ணெல் அரிசியும் விளங்கினர். இதுபோலவே பாணர் தூண்டில் கொண்டும் மீன் பிடித்துள்ளனர் என்பதை.

"**நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்**" (அகம்.பா.எ: 216.,வ: 1)

எனும் வரியும், சுட்டுகிறது. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,1944: 226) பாண்மகள் தூண்டிலால் மீன்பிடித்துள்ளாள். மேலும்,

"...................................**பாணன்**

**சூழ்கழி மருங்கி னாணிரை கொளீஇச்**

**சினைக்கயன் மாய்க்குந்**" (ஐங்.பா.எ: 111.,வ.ள்: 1-3)

எனும் வரிகளும் உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 169) தூண்டில் கயிற்றிலே இரையை வஞ்சகமாக மாட்டி வைத்துக் கருக்கொண்டுள்ள கயல் மீனைப் பிடித்துள்ளான் பாண்மகன் என்று உணர்த்துகின்றது.

மீன் பிடித்தலில் வல்லவராக விளங்கிய பாணர் தங்கிய இடம் 'பாண்சேரி' என்றும், அம்மீனைப் பதப்படுத்தும் பணி செய்தமையால் 'மீன் சீவும் பாண் சேரி' எனவும் வழங்கப்பட்டது. இதனைக்,

"**குருகுநரல மனைமரத்தான்**

**மீன்சீவும் பாண்சேரியொடு**" (மது.கா.,வ.ள்: 269-270)

எனும் வரிகள், உரைக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 109) குருகு எனும் பறவைகள் ஒலி எழுப்புகின்ற மனைகளின் முன்னர் உள்ள மரங்கள் (மரநிழல்) தோறும் மீனைத் திருத்தும் பாணரின் குடியிருப்புகள் இருந்தன.

இத்தகைய பாண் சுற்றத்தினர் தலைமுறை தலைமுறையாக நெடுங்காலம் குடியிருந்தனர் என்றும், எனவே அப்பகுதி பாணர் குடி என்று அழைக்கப்பட்டது எனவும் கூறப்படுவதை அறியமுடிகிறது. இதனை,

"**அழுந்துபட்டிருந்த பெரும்பாண் இருக்கையும்**" (மது.கா.,வ: 342)

எனும் அடியானது வலியுறுத்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 126) பாணர் மீன்பிடித்தும், அதனைப் பண்டமாற்றம் செய்தும், மிஞ்சிய மீன்களைச் சீவிப் பதப்படுத்தியும் வாழ்ந்துள்ளனர். மேலும் பாணரின் உணவினுள் ஒன்றாக மீனும் விளங்கியது என்பது புலனாகிறது.

**4.4.4.6. கள்ளுண்ணும் வழக்கம்**

சங்ககால மக்கள் போரில் வெற்றி பெற்ற களிப்பினைக் கொண்டாடும் விதமாகக் கள்ளுண்டு களித்திருந்தனர். அதேபோன்று வள்ளல்களும், குறுநிலமன்னர்களும், வேந்தர்களும் தம்மை நாடி வருகின்ற இரவலர்க்கு ஊனுணவும் கள்ளும் வழங்கி விருந்தளித்தனர். இதனைக்,

"**கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்**

**சென்றுவாய் சிவந்துமேல் வருக**" (புறம்.பா.எ: 316.,வ.ள்: 10-11)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.,1951: 228) கள்ளையுடைய கலங்களை உடையராகிய நாம் மகிழ்ச்சிகொள்ள அவன்பாற் சென்று விருந்துண்டு வாய் சிவந்து வருக என்று ஒரு பாணன் இன்னொரு பாணனிடம் கூறுகிறான். பாணர் கள்ளுண்டு களித்தனர். அக்கள்ளைச் சீறூர்த் தலைவர்கள் உண்ண வழங்கியுள்ளனர். மேலும்,

"**பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்**

**வாக்க வுக்க தேக்கட் டேறல்**" (புறம்.பா.எ: 115.,வ.ள்: 2-3)

எனும் வரிகளும், சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.,1947: 251) பாணருடைய மண்டைகள் (பாத்திரம்) நிரம்பும் அளவு இனிய கள்ளாகிய தேறலை வார்க்க வேண்டினர்.

இதேபோன்று, ஔவையும் அதியமானுடன் கள்ளுண்டு களித்திருந்தமையைச்,

"**சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே**

**பெரியகட் பெறினே**

**யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே**'' (புறம்.பா.எ: 235.,வ.ள்: 1-3)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.,1951: 76) அதியமான் இறந்த பின்னர் ஔவை அவனது கொடைத்திறத்தை எண்ணி வருந்திப் பாடுகிறார். அதில், அதியமான் சிறிய அளவினையுடை கள்ளைப் பெற்றிருந்தான் எனில், அதனை தமக்கே தந்துவிடுவான் என்றும், பெரிய அளவினை உடைய மதுவினைப் பெற்றிருந்தால், அதனை யாம் உண்டு பாடக்கொடுத்து அவனும் மிஞ்சியதை உண்டு மகிழ்வான் என்று கூறுகின்றார்.

பாணருடன் சீறூர்த்தலைவர் முதல் அனைவரும் கள்ளுண்டு களித்திருந்தனர். மேலும் கள் என்பது போதை என்னும் பொருளில் வழங்கப்படவில்லை. அதனைப் பெருமையாகவும், மகிழ்ச்சிக்கு அடையாளமாகவும் உண்டு களித்தனர்.

பாணரின் உணவு முறையானது அவர்கள் சார்திருந்த சமுதாயத்தைக் கொண்டே அமைந்திருந்தது. மேலும் பாணரின் வாழ்வில் பயிரிடப்பட்ட உணவுப் பொருட்களைவிடவும், வேட்டை உணவான இறைச்சியே பெரும்பங்கு வகித்துள்ளன. மேலும் அவர்கள் கள்ளினையும் உட்கொள்ளும் வழக்கம் உடையவராகவும் காணப்பட்டனர் என்பதும் அறியமுடிகிறது.

### 4.5. தகவல் தொடர்புமுறை

பாணரின் தகவல் தொடர்பு முறை பெரும்பாலும் ஆற்றுப்படுத்துவதாகவும், கேட்டுப் பெறுவதாகவும், அமைகின்றன. இத்தகைய தகவல்தொடர்பு முறையானது பாணர் தமக்காக பயன்படுத்திக்கொள்ளும் முறையாக அமைகின்றது. மேலும் அவர்கள் தம்முடைய கருத்தினைப் பதிவுசெய்யக் குறிப்பால் உணர்த்தும் முறையைப் பின்பற்றுகின்றனர். பாணரின் தகவல் தொடர்பு முறையானது தங்களுக்குள்ளேயும், தாம் சார்ந்திருக்கும் புரவலர்களிடத்தும் பரிமாறிக்கொள்ளப்படுகின்றன.

#### 4.5.1. கேளாமலே தகவலுரைத்தல்

ஒருவரின் முகக்குறிப்பினை அல்லது உள்ளக்குறிப்பினை அறிந்து அவர்கள் கேளாமலே தகவல் தெரிவிக்கும் முறையைப் பாணர் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

''**ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்**'' (புறம்.பா.எ: 103.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், விளக்குகின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 236) விறலி ஒருத்தி தன் சுற்றத்தோடு தங்கியிருப்பதைக் கண்ட ஔவையார், சில்வளை விறலி, சேய்மைக்கண் அன்றி அண்மையிலேயே நெடுமானஞ்சி உள்ளான். அவன்பாற் செல்வாய்

ஆயின், அவன் பகைபுலத்துத் திறையாகக் கொண்ட பொருள் நிரம்ப உடையவனாவான். உலகம் வறுமையுறுதலை உடைய காலமாயினும், அவன் பாதுகாத்தலில் வல்லவன் ஆவான். அவனிடம் செல்வாயாக! என்று கூறுகிறார். இதில், விறலியை வழிநடத்தும் பாங்கில் அவள் கேளாமலேயே ஔவை கூறுவது என்பது கேளாமலே தகவல் உரைக்கும் தகவல் தொடர்புமுறையினைக் குறிப்பிடுகிறது.

### 4.5.2. கேட்டுப்பின் தகவல் அளித்தல்

இதேபோன்று, பரிசில் பெற்ற ஒரு பாணனிடம் பரிசில் பெற விரும்பும் பாணன் ஒருவன் கேட்பதும், அதற்கும் பதிலுரைப்பதுமாக,

''***ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென***'' (புறம்.பா.எ: 179.,வ: 1)

எனத் தொடங்கும் பாடல், சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 390-391) பாணன் ஒருவன் பிறர்பால் ஏலாது கவிழ்ந்த தனது இரத்தலையுடைய மண்டையை ஏற்கும் பரிசு இட்டு மலர்த்த வல்லார் யார் என்று கேட்கிறான். அதற்குப் பரிசிலர்,

''***தோலா நல்லிசை நாலை கிழவன்***

***பருந்துபசி தீர்க்கும் நற்போர்த்***

***திருந்துவே னாகற் கூறினர்***……'' (புறம்.பா.எ: 179.,வ.ள்: 10-12)

எனும் வரிகளில், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 390-391) பருந்து பசி தீர்க்கும் நற்போரைச் செய்யும் நாகன் என்பான் உள்ளான் என்று பரிசிலர் பலரும் கூறினர். இதில், பலரும் ஒரே மாதிரியான பதிலுரைக்கும் தகவல் தொடர்பு முறையை உணரமுடிகிறது.

### 4.5.3. குறிப்பால் உணர்த்துதல்

அதியமானைக் காணச்சென்ற ஔவையை அவன் தன்னுடன் சில நாட்கள் தங்கும்படி கூறினான். அவ்வாறு தங்கிய ஔவைக்குப் பரிசில் கொடாது காலம் தாழ்த்தினான். இதனால் மிக்க வருத்தம் கொண்ட ஔவை, அவனது வாயிற் காவலரிடத்துத் தன்னுடைய கருத்தினைக் குறிப்பாக உணர்த்தினார். இதனை,

''**வாயிலோயே வாயிலோயே**

………………………………

……………………………

**கருமான் றோன்ற னெடுமா னஞ்சி**

**தன்னறி பலன்கொ லெனைறி யலன்கொல்**'' (புறம்.பா.எ: 206.,வ.ள்: 1-7)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 17) பரிசில் நீட்டித்த வழி மனம் வருந்திய ஔவை, அதியமான் நெடுமான் அஞ்சி தான் தன் தரம் அறிய வேண்டும். இல்லையெனில் என்னுடைய தரத்தையேனும் அறிய வேண்டும் என்று தன்னுடைய வறுமைத் துயரைக் குறிப்பால் உணர்த்தும் தகவல் தொடர்பினை அறியமுடிகிறது.

**4.5.4. குறிப்பால் உணர்தல்**

குறிப்பால் தன்னைப்பற்றிப் உணர்த்துவது போலவே, பிறரின் குறிப்பினை உணர்வதும், அதனை உரியவரிடத்துக் கொண்டு சேர்ப்பித்தலுமான தகவல் தொடர்பு முறையினை,

''**மலைவான் கொள்கென வுயர்பலி தூவய்**

………………………………………

……………………………………..

**யுரர் கொலஎரிய டானே**………………….

………………………………………

………………………………………

**வாயிற் றோன்றி வாழ்த்தி நின்று**

**நின்னூரின் மலையும் பாட வின்னா**

**திருத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்**

……………………………………

**குழலினை வதுபோ லழுதனர் பெரிதே**'' (புறம்.பா.எ: 143.,வ.ள்: 1-15)

என்னும் வரிகள், குறிப்பிடுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 300) பேகனைக் காணக் கபிலர் சென்று பாடியபோது, அங்கு கண்ணீர் மல்க வந்து நின்ற கண்ணகியின் நிலையினை உணர்ந்து, பேகனிடத்துச் சென்று கூறுகின்றார். மேலும், கபிலர் அவள் உன்னால் அளிக்கத்தக்கவாளாய் உள்ளாள் என்று கூறுவதன்மூலம் கண்ணகியின் மனக்குறிப்பினை கபிலர் உணர்ந்தமை புலனாகிறது.

**4.5.5. கேட்டுப் பெறுதல்**

பரிசிலராகிய பாணரின் வாழ்வாதாரம் அவர்களைப் புரக்கின்ற வள்ளல்களைச் சார்ந்தே அமைகின்றன. பாணர் பரிசிலுக்காக நாடிச் செல்கின்ற மன்னரிடம் தனக்கு வேண்டியவற்றை

உரிமையோடு கேட்டுப்பெறும் வழக்கம் உடையவராகக் காணப்படுவதை இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது. இதனை,

"**மண்ணகம் காவல் மன்னன் முன்னர்**

**எண்ணிய பரிசில் இதுஎன உரைத்தன்று**" (புறப்.பாடாண்.,கொ.எ:177.,வ.ள்:1-2)

எனும் புறப்பொருள் இலக்கண வரிகள், சுட்டுகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியம்., 2009: 284) நாட்டைக்காக்கும் மன்னன் முன்சென்று தான் கருதிய பரிசில் இதுவே என்று ஒரு பாணன் உரைப்பதனைக் குறிக்கின்றன. மேலும்,

"**வரிசை கருதாது வான்போல் தடக்கைக்**

**குரிசில் நீ நல்கயாம் கொள்ளும்~ பரிசில்**

**அடுகளம் ஆர்ப்ப அமரோட்டித் தந்த**

**படுகளி நால்வாய்ப் பகடு**" (புறப்.பாடாண்.,வெ.எ: 177.,வ.ள்: 1-4)

எனும் வெண்பாவால், உணரமுடிகிறது. (வ. த. இராமசுப்பிரமணியம்.,2009: 284) யாம் உன்னிடம் வேண்டிக் கேட்டுக்கொள்ளும் பரிசில், போரில் ஆரவாரம் செய்து பகைவரை ஓடச்செய்து வெற்றி பெற்ற மதமும் தொங்கும் வாயும் உடைய யானையாகும் என்று கேட்பதன் மூலம் பாணரின் கேட்டுப் பெறும் பழக்கத்தினையும், தாமாகவே முன்வந்து தனக்குத் தேவையானவற்றைக் கேட்பதாக அமைந்துள்ள தகவல் தொடர்பினையும் உணரமுடிகிறது.

**4.5.6. வழங்கச் சொல்லுதல்**

பரிசிலர்கள் தங்களுக்குத் தேவையான பொருட்களைக் கேட்டுப் பெறுவதைப் போலவே, தனக்குப் பிறர் வழங்கியதுபோல வழங்கச் சொல்லுதலும் உண்டு. அதேபோல் பிறருக்கு வழங்கியதுபோல வழங்கச் சொல்லுதல் உண்டு. இதனை,

"**முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்**

**எல்லை நீர ஞாலத்து இசைவிளங்கத்~தொல்லை**

**இரவாமல் ஈந்த இறைவர் போல் நீயும்**

**கரவாமல் ஈகை கடன்**" (புறப்.பாடாண்.,வெ.எ: 178.,வ.ள்: 1-4)

எனும் வெண்பாவானது, சுட்டுகிறது. (வ. த. இராமசுப்பிரமணியம்.,2009: 286) முல்லைக் கொடிக்குத் தேரினையும், மயிலுக்குப் போர்வையையும் அவைகள் இரவாமலேயே கொடுத்த வள்ளல்களைப்போலத் தாம் இரவாத நிலையிலும் வழங்குவதே மன்னின் ஈகைக் கடனாகும்

என்று கூறுகின்றனர். பரிசிலர் தமக்குத் தேவையானவை இவை என்று கூறாமலேயே அவரின் மனமறிந்து வழங்கச் சொல்லுவதன்மூலம், பாணரின் உரிமையான பேச்சுத்திறமும் தகவல் தொடர்பு முறையும் பெறப்படுகிறது.

### 4.6. கூட்டுவாழ்க்கை முறை

பாணர் எங்கு சென்றாலும் தம்முடைய சுற்றத்தையும் அழைத்துக்கொண்டு சென்றனர். அவ்வாறு அவர்கள் பெருஞ்சுற்றத்துடன் சென்றமைக்குக் காரணம், பல்வேறு இசைக்கருவிகள் பலரால் இசைக்கப்பட்டதும், அவ்வவ் இசைக்கருவிகளை அவரவர் சுமந்து சென்றதும் ஆகும். மேலும் அவர்கள் நிலத்தைப் பண்படுத்தி உழைத்து உண்டு வாழவில்லை. எனவே அவர்கள் தம்முடைய வாழ்வைக் கலைத் தொழிலுக்காகவே செலவிட்டுவிட்டனர். அதனையே தம் குலத் தொழிலாகவும் கொண்டனர்.

இப்பெருங் கூட்டுவாழ்க்கை அவர்களுக்கு மற்றுமொரு வகையில் நன்மையைக் கொடுத்துள்ளது. ஏனெனில், பாணர் ஒவ்வொருவரும் தனித்தனியே பரிசில் நாடிச் சென்றிருந்தால், அவரவர்க்குத் தேவையான அளவுடைய பரிசில் மட்டும் வழங்கப்பட்டிருக்கும். ஆனால் அவர்கள் பெருங்கூட்டமாகச் சென்றதாலும், அவர்கள் கூட்டு வாழ்க்கை வாழ்பவர் என்பதைப் பிறர் அறியும்படியாக வாழ்ந்ததாலும் அவர்களுக்குப் பெரும் பரிசில் வழங்கப்பட்டது. மேலும் பரிசில் வேண்டி ஒருவர் சென்றபோதும் கூட அவர்களின் பெருஞ்சுற்றத்தினை மனத்திற் கொண்டே புரவலர்களும் பரிசல் வழங்கினர்.

பாணர் பெறும் பரிசில் அவரின் பெருஞ்சுற்றத்திற்குப் போதுமானதாக அமையக் காரணம் அவர்களின் கூட்டு வாழ்க்கை முறையே ஆகும். இதில் வள்ளல்களின் பங்கு உள்ளதாயினும் பாணரின் கூட்டுவாழ்க்கை முறையே குறிப்பிடத்தக்கதாக அமைகிறது. இதனாலேயே ‘‘கூடிவாழ்ந்தால் கோடி நன்மை’’ என்னும் பழமொழியும் தோன்றிருக்கலாம் என எண்ண முடிகிறது.

#### 4.6.1. பாணர் பெற்ற பரிசில்கள்

பாணர் கூட்டு வாழ்க்கைமுறை வாழ்ந்ததால், அவர்கள் பெரும் பரிசில்களைப் பெற்றனர். இதனைப்,

‘‘............................. **பாணர்**

**பைதற் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்**’’ (புறம்.பா.எ: 212.,வ.எ்: 6-7)

எனும் வரிகள், புலப்படுத்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 32) பாண் சுற்றத்தின் பசிப்பிணிக்குப் பகைவனாக விளங்கினான் கோப்பெருஞ் சோழன் என்று உணர்த்துகின்றன. இதேபோன்று,

"**பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே**" (புறம்.பா.எ: 68.,வ: 19)

எனும் வரியானது, வெளிப்படுத்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 174-175) பிறர் மனையை நாடிச் செல்வதை மறக்கும் அளவு வழங்குவான் சோழன் நலங்கிள்ளி என உணர்த்துகிறது. மேலும்,

"**தேர்வீ சிருக்கை யார நோக்கி**

………………………………

**ஆடும்வண் டிமிராத் தாமரை**

**சூடா யாத லதனினு மிலையே**" (புறம்.பா.எ: 69.,வ.ள்: 18-21)

எனும் வரிகளும், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 177) தேரும், பொன்னால் செய்த தாமரைப் பூவால் தொடுத்த மாலையும் வழங்கினான் கிள்ளிவளவன் என்று உணர்த்துகின்றன. இதேபோன்று,

"**செல்வை யாயிற் செல்வை யாகுவை**" (புறம்.பா.எ: 70.,வ: 16)

எனும் வரியும், சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 179-180) கிள்ளி வளவனிடத்துச் செல்வாய் என்றால், செல்வந்தன் ஆவாய் என்று உணர்த்துகிறது.

"**நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து**" (புறம்.பா.எ: 148.,வ: 3)

எனும் வரியானது, பகருகின்றது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 311) பேகனிடம் சென்றால், அவன் நாள்தோறும் நல்ல அணிகலன்களைக் கொடுத்து அதனுடன் யானையும் வழங்குவான் என்று உணர்த்துகிறது. மேலும்,

"……………………….**பாணர்**

**பரிசில் பெற்ற விரியுளை நன்மான்**

**கவிகுளம்பு பொருத கண்மாசைச் சிறுநெறி**" (நற்.பா.எ: 185.,வ.ள்: 3-5)

எனும் வரிகள், உரைக்கின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 232) குதிரைகளைப் பரிசாக வழங்கியதைச் சுட்டுகின்றன. பாணர் பரிசிலாகப் பெற்ற விரிந்த புறமயிரையுடைய நல்ல குதிரையின் கால்குளம்பு என்று கூறுவதன் மூலம் குதிரைகள்

பரிசிலாக வழங்கபட்டுள்ளன. இதேபோன்று பொன்னால் செய்த தாமைரைப் பூவினைப் பரிசாக வழங்கியுள்ளனர். இதனை,

**"ஏறுடைய விழுக்கழஞ்சிற்**

……………………………

**ஒள்ளழல் புரிந்த தாமரை**

**வேள்ளி நாராற் பூப்பொற் றிசினே"** (புறம்.பா.எ: 11.,வ.ள்: 12-18)

எனும் வரிகள், விளக்குகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 32-33) தோற்றப் பொலிவையுடைய சிறந்த பல கழஞ்சால் செய்யபப்பட்ட நல்ல அணிகலன்களைப் பாடியும், பொன்னால் செய்த தாமரை பூவினை வெள்ளி நாரால் தொடுத்த மாலையைப் பாணனும் சேரமான் பாலை பாடிய பெருங்கருங்கோவிடமிருந்து பரிசாக பெற்றுள்ளனர். மேலும்,

**"பாணர் தாமரை மலையும்"** (புறம்.பா.எ: 12.,வ: 1)

எனும் வரியும், சுட்டுகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 34-35) பாணர்க்கும் பொன்னால் ஆன தாமரைப் பூவினைப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வழங்கியுள்ளான். மேலும்,

**"சுழல்புரிந்த வடர்தாமரை**

**ஐதடர்ந்த நூற்பெய்து"** (புறம்.பா.எ: 29.,வ.ள்: 1-2)

எனும் வரிகளும், குறிப்பிடுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 84) பாணருக்குப் பொற்றாமரைப் பூவினைத் தொடுத்த மாலையைச் சோழன் நலங்கிள்ளி வழங்கியுள்ளான். மற்றும்,

**"அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப்**

**புாணர் ஆர்ப்பப் பலகலம் உதவி**

**நாளவையிருநந்த நனைமகிழ் திதியன்"** (அகம்.பா.எ: 331.,வ.ள்: 10-12)

எனும் வரிகளும், மொழிகின்றன. (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.(உ.ஆ).,2008: 71) பாணருக்குப் பல அணிகலன்களை அளித்தான் நாளோலக்கம் கொண்டிருந்த திதியன். இரவலராகிய பாணர் சென்ற இடம் எங்கினும் அவர்களின் பசித்துயரை நீக்கி, அவர்களின் சுற்றத்திற்கேற்பப் போதுமான பெருஞ்செல்வமும், அணிகலன்களும் யானைகளும், குதிரைகளும், தேரும், நிலமும் பரிசிலாகப் பெற்றனர் என்று அறியமுடிகிறது.

### 4.6.2. இல்லறம் போற்றிய பாங்கு

பாணர் பெருஞ்சுற்றத்துடன் வாழ்ந்தனர் என்று சங்கஇலக்கியங்கள் உணர்த்துகின்றன. அவ்வாறு அவர்கள் பெருஞ்சுற்றமாக வாழக்காரணம் பெரும்பரிசில்களுக்காக மட்டுமன்று. அவர்கள் இல்லறத்தின் மேன்மையை அறிந்திருந்தனர் என்பதும் ஆகும். இதனைப் பேகனைப் பாடியவர்களின் பாடல்கள் மெய்ப்பிக்கின்றன.

பண்டைத் தமிழகத்தில் ஆவியர் குடியில் பிறந்தவன் பேகன். இவன் பெரு வள்ளலாவான். இவனுடைய மனைவி கண்ணகி என்னும் பெயருடையவள் ஆவாள். பேகன் தன் மனைவியுடன் வாழ்ந்து கொண்டிருந்த வேளையில். நல்லூர் எனும் ஓர் ஊரில் உள்ள ஒரு பரத்தையின்பால் அவனுக்குப் புறத்தொழுக்கம் உருகிவளரவே கண்ணகியாரைக் கைதுரந்து ஒழுகலுற்றான். இதனால் கண்ணகி பெரிதும் வருத்தம் அடைந்தாள். இவளின் பொருட்டுக் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குனறார் கிழார் போன்றோர் பேகனிடத்துச் சென்று, அவனுக்கு இல்லறத்தின் மேன்மையை உணர்த்த முயன்றனர். அதனால் கண்ணகியாரின் துயரினை எடுத்துரைத்து மீண்டும் அவளுடன் இணைந்து வாழவேண்டும் என்றும் எடுத்துரைத்தனர். இதனை,

> “**நின்னுநின் மலையும் பாடவின்னா**
>
> **திகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்**
>
> **முலையக நனைப்ப விம்மிக்**
>
> **குழலினை வதுபோ லழுதனள் பெரிதே**” (புறம்.பா.எ: 143.,வ.ள்: 12-15)

எனும் வரிகள், மெய்ப்பிக்கின்றனர். (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 299-302) கபிலர் பேகனைக் காணச்சென்றபோது, அவனையும் அவனது மலையையும் பாடினார். அப்பொழுது பேகனால் துறக்கப்பட்டுக் கவலையுற்றிருந்த கண்ணகியைக் கண்டார். கண்ணகியின் துயரத்தை உணர்ந்த கபிலர் பேகனிருக்கும் இடம் தேடிச்சென்று, அவளின் துயரத்தை எடுத்துரைத்தார். கண்ணகியார் உன்னுடைய அன்பினுக்கு ஏங்குபவளாய் உள்ளாள் என்று உணர்த்தி, இல்லறத்தின் மேன்மை பேகனுக்கு எடுத்துரைக்கின்றார்.

பரணரும் இவ்வாறே ஒருமுறை பேகனைக் காணச்சென்ற வேளையில், இளமகள் ஒருத்தி தன்முன் அழுது நிற்பதைக் கண்டார். அவ்வாறு அழுது நின்றவரைத் தொழுது நீவிர் யாரோ? நீவர் பேகனின் கிளைஞரோ? என்று விவை, அதற்கு அவள், எம்போல் ஒருத்தியின் நலத்தை விழைந்து நாள்தோறும் அவளுறையும் நல்லூருக்குத் தேர் ஏறி வந்து போகின்றானெனப் பலரும் கூறுகின்றனர் என்றுரைத்தாள். ஆதலால் நீ அவரை அருளா

யாகலோ கொடிதே காண் என்று பேகனிடம் நன்னெறி பகன்றார். இதைக் கேட்ட பேகன் பரணருக்குப் பெரும் பரிசில் நல்கினான். ஆனால் அவற்றை மறுத்து, பசித்துயரால் நான் உனைநாடி வரவில்லை. மேலும் என்னால் காக்கப்படும் சுற்றமும் என்னுடன் இல்லை. ஆதலால் இன்றிரவே புறப்பட்டுத் தேர் ஏறிச்சென்று அவளுடைய அருந்துயரைக் களைவாயாக!. இதுவே நான் உன்னிடம் வேண்டும் பரிசிலாகும் என்று கூறுகிறார். இது பேகனுக்கு இல்லறத்தின் மதிப்பினை எடுத்துரைக்கும் விதமாக விளங்குகிறது.

இதேபோன்று அரிசில் கிழாரும் பேகன்பால் செல்ல, அவனும் பெரும்பரிசில் வழங்கினான். ஆனால் அவரும் பரிசிலை வாங்க மறுத்து, யான் வேண்டும் பரிசில், நின் மனையாள் நின்னுடைய அருளைப் பெற்றுத் தன் கூந்தலை முடித்துப் பூச்சூட வேண்டும். இதுவே என்னுடைய பரிசிலாகும் என்றுரைப்பதன் மூலம் இல்லறச் சிறப்பினை எடுத்துரைக்கின்றார். இதனை,

“***ஒலிமென் கூந்தற் கமழபுகை கொளீஇத்***

***தண்கமழ் கோதை புனைய***” (புறம்.பா.எ: 146.,வ.எ்: 9-10)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 306) மேலும் பெருங்குன்றூர் கிழாரும் பேகனுக்கு இல்லறப்பாங்கினை எடுத்துரைக்கின்றார். இதனை,

“................................***அரிவை***

***நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்***

***மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்***

***புதுமலர் கஞல வின்று பெயரின்***

***அதுமனெம் பரிசி லாவியர் கோவே***” (புறம்.பா.எ: 147.,வ.எ்: 5-9)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 309) பேகன் தன் மனைவியான கண்ணகியுடன் சேர்ந்து வாழ்வதை எடுத்துரைக்கும் விதமாக, அவளின் கூந்தல் நெய்பூசி முடிந்து பூச்சூட வேண்டும் எனவும், அதுவே தாம் வேண்டும் பரிசில் எனவும் எடுத்துரைத்துப் பேகனுக்கு இல்லறத்தின் இன்றியமையாமை உணர்த்தியுள்ளனர்.

பேகனுக்கு இல்லறத்தின் மேன்மையை எடுத்துரைப்பதால் பாணர் இல்லறத்தின் மேன்மை உணர்ந்தவராகக் கருதப்படுகின்றனர். மேலும் இப்பாணர் தன்னைப் புரப்பவர் ஆயினும் இல்லறத்தில் ஒழுகுதல் வேண்டும் என்று எண்ணுபவர் ஆவர். அதே வேளையில்,

அவர்களுக்கு வழங்கிய பெரும்பரிசிலையும் வாங்க மறுத்துள்ளமையால் அவர்களின் பண்புநலன் வெளிப்படுவதும் பெறப்படுகிறது.

**4.6.3. இயற்கையோடு இயைந்த வாழிடம்**

சங்ககால மக்களின் வாழிடமானது பலநிலைகளில் இருந்தது. ஊர், சீறூர், கரம்பைச் சீறூர், மூதூர், சேரி, சிறுகுடிப்பாக்கம், பாக்கம், பட்டினம், குரம்பை, கானலம்சிறுகுடி, குடி, குப்பம் எனப் பலவாறு ஊர்ப்பெயர்கள் இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. (பக்தவத்சல பாரதி.,2015: 26)

சங்ககால மக்கள் வாழ்ந்த பகுதியில் பாண் சுற்றத்தினரும் வாழ்ந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. அவர்கள் ஊர் ஊராகச் சுற்றித் திரிபவராதலால், ஓரிடத்தில் நிலையான வாழ்க்கை முறையைப் பெறவில்லை. இதனை,

"**ஆனினங் கலத்த அதர்பல கடந்து**
**மானினங் கலித்த மலையி னொழிய**
**மீனினங் கலித்த துறைபல நீத்த**
**உள்ளிவந்த வள்ளுயிர்ச் சீறியாழ்**
**சிதாஅர் உடுக்கை முதாஅரிப் பாண**" (புறம்.பா.எ: 138.,வ.எ: 1-5)

எனும் வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 291) பாண் சமூகத்தினர் காடு, மலை, கடல் கடந்தும் சுற்றித் திரிந்தார்கள் என்பது புலனாகிறது. நாடோடி வாழ்க்கை முறையைக் கொண்ட பாணர் கூட்டம் தாம் சென்ற ஊர்களின் புறத்தே 'பொதியில்' (தற்காலிக உறைவிடம்) அமைத்துத் தங்கியுள்ளனர். இதனை,

"**அலங்கு கதிர் சுமந்த கலங்கற் சூழி**
**நிலைத் தளர்வு தொலைந்த ஒல்குநிலைப் பல்தாற்**
**பொதியில் ஒருசிறை பள்ளியமாக**" (புறம்.பா.எ: 375.,வ.எ: 1-3)

எனும் வரிகள், குறிக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 369) பாண்சுற்றம் தங்குவதற்காக அமைத்த பொதியிலைக் கவனிக்கப் போரில் சிறைப் பிடிக்கப்பட்ட மகளிரைப் பயன்படுத்தினர். இதனைக்,

"**கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி**
……………………………………
……………………**மெழுக்க மேறிப் பலர்தொழ**

**வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியார்**" (பட்டினப்.,வ.ள்: 246-249)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 83) போரில் சிறைப் பிடிக்கப்பட்ட மகளிர் அப்பொதியிலைச் சாணத்தால், மெழுகித் தூய்மையாக வைத்திருந்தனர் என்று உணர்த்துகின்றன.

பாணர் கூட்டம் ஊர் சுற்றித்திரியும் நாடோடி வாழ்க்கை வாழும் கூட்டம் ஆதலால், அவர்கள் நிலையற்ற குடிகளாகப் பிறரை அண்டி வாழ்ந்தனர். இதனால் அவர்கள் ஊரின் புறத்தே பொதியில் அமைத்துத் தங்கினர். இப்பாணர் மதுரையில் வையை ஆற்றங்கரைகளில் வாழ்ந்துள்ளனர். இதனை,

"**வையைத் துறைதுறை தோறும்**

**பல்வேறு பூத்திரட் தண்டலை சுற்றி**

**அழுந்துபட் டிருந்த பெரும்பாண் இருக்கையும்**" (மது.கா.,வ.ள்: 340-342)

எனும் வரிகள், புலப்படுத்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2008: 125) வையை ஆற்றின் நீர்த் துறைகள் தோறும் பூந்தோட்டங்கள் சூழ்ந்த இடத்தில் பாணர் குடியிருப்புகள் இருந்தமையைச் சுட்டுகின்றன. மேலும்,

"**பாடுவார்ரெ பாக்கம் கொண்டென**

**ஆடுவார் சேரி அடைந்தென**" (பரி.பா.எ: 7.,வ.ள்: 31-32)

எனும் வரிகள், உரைக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 152) பாணர் குடியிருந்த பகுதியினைப் பாக்கம் எனவும், ஆடுவராகியக் கூத்தர் குடியிருந்த பகுதியினைச் சேரி எனவும் வழங்கியுள்ளன. பாணர் மீன்சீவும் பணியினைத் தம் மனையிடத்தே செய்தமையால் அவர்கள் தங்கிய இடம், பாண்சேரி என வழங்கப்பட்டது. இதனைச்,

................................"**சிறுசின்**

**மீனசீவும் பாண்சேரி**" (புறம்.பா.எ: 348.,வ.ள்: 3-4)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 296-297)

பாணர் வாழிடங்கள் பெரும்பாலும் நீர்த்துறையின் அருகில் அமைந்திருந்தன. அதன் பொருட்டே அவர்கள் மீன் பிடிப்பதிலும் வல்லவராக விளங்கினர். அவர்கள் குடியிருந்த பகுதியானது கனிதரும் மரங்களும், பூஞ்சோலைகளும் நிறைந்த இயற்க்கை எழில் சூழ்ந்த பகுதியாகக் காணப்பட்டுள்ளது.

4.7. பாணர் மக்களுடன் கொண்ட தொடர்புநிலை

பாணர் சங்ககால மக்களுடன் மிகநெருங்கிய தொடர்புநிலை உடையவராகக் காணப்படுகின்றனர். அக்கால மக்களின் வாழ்க்கையில் தலைவன், தலைவிக்காகப் பாணர் தூது சென்றுள்ளனர். தலைவிக்காக தலைவன் பொருட்டும், தலைவனுக்காகத் தலைவியிடத்தும் தூது சென்றுள்ளனர். பாணர் பெரும்பாலும் தலைவனுக்காகவே தூது சென்றுள்ளனர். சில நேரங்களில் தலைவனுக்காகப் பரத்தையர் மாட்டும் தூது சென்றுள்ளனர். தலைவன் பொருட்டுப் பாணன் தூது செல்கிறான். இதனைப்,

"**பாண் தெரி பனுவல் பைதீர் பாண**" (நற்.பா.எ: 167.,வ: 6)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 210) தலைவனுக்காகத் தூது வந்த பாணனைத் தோழி, தலைவனிடம் நீ பெறும் பயனுக்குத் தக்கபடி கூறும் பனுவலை உடையவன் என்று கூறுகிறாள். இதேபோன்று,

"**காண்குவை மன்னாற் பாணவெந் தேரே**" (ஐங்.பா.எ: 477.,வ: 5)

எனும் வரியும், சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 750 தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான். அவன் கூறிய பருவத்துள் திரும்ப இயலாத காரணத்தினால் பாணனைத் தூது அனுப்புகின்றான். இதேபோன்று தலைவியும் பாணனைத் தூது அனுப்புகிறாள். இதனை,

"**முல்லை நல்யாழ் பாணமற் றெமக்கே**" (ஐங்.பா.எ: 478.,வ: 5)

எனும் வரி, தெளிவுபடுத்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 751) தலைவியின் பால் தூது சென்ற பாணனிடம் தலைவன், தலைவியின் நிலையாது? அதனைக் கூறுவாயாக! என்று கேட்கின்றான்.

பாணர், தலைவன் தலைவிக்காகத் தூதுசெல்லும் அளவிற்கு மிக்க இணக்கமுடையவராக விளங்கியுள்ளனர். பாணர் தம் தலைவனுக்காக வாயில் வேண்டுவதும் உண்டு. தலைவன் பரத்தமை மேற்கொண்டுப் பின் தன் மனைக்குத் திரும்ப எண்ணிப் பாணனைத் தூது அனுப்புகிறான். பாணனும் தன் தலைவனுக்காகத் தோழியிடம் வாயில் வேண்டும் பொழுது பெரும்பாலும் பழிக்கப்படுகின்ற நிலைக்கு ஆளாவான். இருப்பினும் தலைவன் கூறிய பணியினை நிறைவேற்ற அப்பழியினையும், இழிவுபடுத்துதலையும் பொறுத்துக்கொள்கின்றமையைச் சங்கப்பாக்கள் உணர்த்துகின்றன. இதனைத்,

"..........**துறைவன் தூதொடும் வந்த**

**புயன்தெரி பனுவல் பைதீர் பாண**

**நினவாய்ப் பணிமொழி…………..**" (நற்.பா.எ: 167.,வ.ள்: 5-7)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 210) தலைவனால் விடுக்கப்பட்டு வந்த பாணனைத் தோழி, நீ தலைவன் வழங்கும் பரிசுக்குத் (பயனுக்கு) தக்கபடி பேசும் பேச்சினை உடையவனாய் உள்ளாய். நீ கூறும் பொய் மொழிகளால் தலைவயின் பசலைநோய் நீங்காது என்றுகூறி வாயில் மறுக்கிறாள். இதேபோன்று வாயில் வேண்டி வந்த பணனைப் பற்றித் தோழி தலைவனிடம் கூறுகிறாள். இதனை,

"**ஒருநின் பாணன் பொய்யன் ஆக**

**உள்ள பாணர் எல்லாம்**

**கள்வர் போல்வர்………**" (குறுந்.பா.எ: 127.,வ.ள்: 4-6)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 235) அவள் தலைவனிடம், தலைவனே! நின்னால் தூதனாகிய ஒரு பாணன் பொய்பேசுபவன் ஆகிவிட்ட காரணத்தால், நின்னால் கைவிடப்பட்ட மகளிருக்கு உலகிலுள்ள பாணச் சாதியினர் எல்லோரும் பொய்யரைப்போலவே காணப்படுகின்றனர் என்று கூறுகின்றாள்.

பாணன், தலைவனுக்காக வாயில் வேண்டும் பொழுது பொய்யன் என்றும், சூழ்ச்சிக்காரன் என்றும் பழிக்கப்படுகின்றான். காரணம், தலைவனுடனான பாணரின் நட்புறவும், தலைவன் மீது அவர்கள் கொண்டிருந்த தொடர்புநிலை உறுதியும் ஆகும். அக்கால மக்களுடன் நெருங்கிய தொடர்பினைப் பாணர் கொண்டிருந்தனர். அதனால், மக்களின் பேச்சில் பாணனைப் பற்றிப் பேசும் வழக்கம் அதிகமாகக் காணப்படுகிறது. யாழ்ப்பாணர் தம் கையில் யாழ் வைத்திருப்பர். அவர்கள் யாழினை மீட்டும்போது ஏற்படுகின்ற நாதத்தைப்போன்று வண்டுகள் இம்மென ஒலிப்பதாக உவமை கூறுகின்றனர். இதனைப்,

"**பாணன் கையத பண்புடைச் சீறியாழ்**

**பாணர் வண்டின் இம்மென இயிரும்**" (நற்.பா.எ: 30.,வ.ள்: 2-3)

எனும் வரிகள் சுட்டுகின்றன. (அ. நாராயனசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 40) மக்களுடன் பாணர் இணக்கமுற வாழ்ந்தனர் என்பதால், அவர்களைத் தங்களின் வாழ்வியலோடு பிணைத்துக் கொண்டிருந்தனர். மேலும் மக்களின் பேச்சின் வாயிலாக இவ்வாறான உரையாடல்கள் பல வெளிப்படுமாறு சங்கப் பனுவல்கள் பாடப்பட்டுள்ளன.

நெய்தல் நில மக்கள் வலம்புரிச் சங்கின் ஒலியினைப் பாணரின் மெல்லிய இசைப்பாட்டோடு ஒப்பிட்டுப் பேசுவதனை,

**“விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப**

**வலம்புரி வான்கோடு**..............” (நற்.பா.எ: 172.,வ.எ்: 7-8)

என்னும் வரிகள், பகருகின்றன. (அ. நாராயனசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 216) புதியராக வந்த பாணரின் இளையதாகிய (மெல்லிய) பாட்டுப்போல வலம்புரிச் சங்கின் ஒலியானது இருந்தது என்று உரைக்கப்படுகிறது. எவ்வி என்னும் தலைவன் இறந்தமையால், பாணர் வறுமையுற்றனர். இதனால், பரிசில் வழங்குவார் இன்றிப் பாணர் தம் தலையில் பொன்பூச் சூடாமல் வறுந்துதலை உடையவராயினர். அவர்களைப் போலத் தலைவியின் ஊடலால் தன்னுடைய நிலையும் ஆனது என்று ஒரு தலைவன் புலம்புகிறான். இதனை,

**“எவ்விஇழந்த வறுமையாழ்ப் பாணர்**

**பூவில் வறுந்தலை போலப் புல்லென்**

**றினைமதி வாழிய நெஞ்சே**.........” (குறுந்.பா.எ: 19.,வ.எ்: 1-3)

என்னும் வரிகள், உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 57) பரத்தமைமாட்டுப் பிரிந்து சென்ற தலைவன் மீது ஊடிமிருந்த தலைவி தன் ஆற்றாமையைக் கூறுகின்றாள். அப்பொழுது பாணர் தாம் பிடித்த மீனை இட்ட மண்டை(பாத்திரம்) அப்பாணருக்கே பிறிதொன்றுக்கும் பயன்படாது புலவுநாறிக் கெடும். அதுபோன்று, எமக்கும் வெறுக்கத்தக்கதாகி விட்ட உயிர் நுமக்கும் ஆகாது கெடுக என்று கூறுகிறாள். இதனைப்,

**“பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோல**

**எமக்கும் பெரும்புலவு ஆகி**

**நும்மும் பெறஎம் இறீஇயர் எம்உயிரே**” (குறுந்.பா.எ: 169.,வ.எ்: 4-6)

என்னும் வரிகள் சுட்டுகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 304) பாணர் மக்களுடன் மிக்க நெருக்கமாக வாழ்ந்த காரணத்தினால், அவர்களை எப்பொழுதும் தம் வாழ்வில் எண்ணிப் பார்ப்பவர்களாகவே காணப்படுகின்றனர்.

பாணர் மீன்பிடித்தல் தொழிலைச் செய்துள்ளனர். அவர்கள் பிடித்த மீன்களை இட்டுவைத்த பாத்திரம் ‘மண்டை’ என்று வழங்கப்பட்டது. அவ்வாறு அவர்கள் தூண்டிலாலும், வலைகொண்டும் பிடித்த மீன்களைத் தம் சுற்றத்தினருக்கு வழங்கினர். அம்மீனைப் பண்ட

மாற்றாக மருதநில மக்களிடத்துக் கொடுத்து வெண்நெல்லும் பெற்றுள்ளனர். இதேபோன்று வரகு சாமை போன்ற உணவுப் பொருட்களை பதிலியாகப் பெற்றுள்ளனர். இதனை,

"**வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்**

**வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்**

***யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும்***......" (ஐங்.பா.எ: 48.,வ.ள்: 1-3)

என்னும் வரிகள் மெய்ப்பிக்கின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 77) மருதநில மனைக்கிழத்தி ஒருத்தி பாணர் கொணர்ந்த மீனுக்கு பதிலியாக அவர்களின் மண்டையில் (பாத்திரம்) ஓராண்டு கழிந்த மிக்க பழைய வெண்ணெல்லை இட்டு நிறைத்தாள் என்று கூறுகின்றன.

பாணர் மக்களுடன் பண்டமாற்றம் செய்தும், அவர்களின் இல்லற வாழ்க்கையில் ஏற்படுகின்ற இடர்பாடுகளைக் களைய வேண்டித் தூதுரைத்தும், தலைவனுக்காக வாயில் வேண்டியும், தலைவிக்கு ஆற்றுவித்தும் மிக்க நெருக்கம் உடையவர்களாக விளங்கியுள்ளனர். எனவே மக்களின் பேச்சில் பாணரின் பதிவுகளும், பாணர் பற்றிய பதிவுகளில் மக்களுடன் கொண்ட தொடர்பு நிலையும் இடைவெளியற்ற இணக்கமான உறவாகக் காணப்படுகிறது.

**4.8. பாணர் சீறூர்த் தலைவர்களுடன் கொண்ட தொடர்புநிலை**

பாணர் மக்களுடன் கொண்ட தொடர்பினைப் போன்றே சீறூர்த் தலைவனிடத்தும், அச்சமுதாயத்தினிடத்தும் தொடர்பு கொண்டிருந்தனர். இதனை,

"........................***வன்புலச் சீறூர்க்***

***குடியு மன்னுந் தானே***..............." (புறம்.பா.எ: 314.,வ.ள்: 4-5)

எனும் வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 224) சீறூர்த் தலைவன் குடிகளோடு குடிகளாய் வாழ்ந்தான். அவ்வாறு வாழ்ந்த சீறூர்த் தலைவன் பாணருடன் நெருக்கமானவனாக திகழ்ந்தான் என்று குறிக்கின்றன. இதனைப்,

"**பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை**" (புறம்.பா.எ: 324.,வ: 12)

எனும் வரி, உணர்த்துகிறது. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 244) மக்களோடு மக்களாக வாழ்ந்த சீறூர்த் தலைவனுடன் பாணர் நெருக்கமானவரக இருந்துள்ளனர். போரில் வென்று அக்களிப்பினைக் கள்ளுண்டு களித்த தலைவனுடன் பாணரும் கள்ளுண்டு களித்திருந்தனர். மேலும்,

சீறூர்த் தலைவன் பெரும்பாலும் உடைமையற்றவனாகவே காணப்படுகின்றான். என்றாலும் அவன் தன்னை நாடிவரும் இரவலர்க்குக் கடன் பெற்றேனும் வழங்குபவனாகவும் விளங்குகின்றான். இதனை,

"**வரகு கடன் இரக்கும் நெடுந்தகை**" (புறம்.பா.எ: 327.,வ: 7)

எனும் வரியானது சுட்டுகிறது. (சு. துரைசமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 251) சீறூர்த்தலைவியும் தலைவனைப் போன்றே ஈகைக் குணம்கொண்டு விளங்குகிறாள். தம் இல்லை நாடிவந்த இரவலராகிய பாணருக்கும், அவர்களுடன் வந்த மற்ற விருந்தினருக்கும் உணவளித்து விருந்து பேணுவதை,

"...................................**மனைவியும்**

**வேட்டைச் சிறாஅர் சேட்புலம் படராது**

**படுமடைக் கொண்ட குறற்தாளுடும்பின்**

**விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் விதவை**

**பாணர் நல்லவை பாணரொ டொரங்கு**

**வருவிருந் தறரும் விருப்பினள்**" (புறம்.பா.எ: 326.,வ.ள்: 7-12)

எனும் வரிகள் உணர்த்துகின்றன. (சு. துரைசமிப்பிள்ளை.(உ.ஆ).,1951:249) மடுக்கரையில் பிடித்துக் கொண்டுவந்த குறுகிய கால்களை உடைய உடும்பினது கொழுவிய தசையைத் தயிருடன் சேர்த்துச் சமைத்த கூழையும், வேறு நல்ல உணவுப் பொருளையும் பாணருக்கும் அவருடன் வந்த ஏனைய விருந்தினருக்கும் கொடுத்து உண்ணச் செய்யும் விருப்பம் உடையவளாகத் தலைவி விளங்குகிறாள்.

சீறூர்த்தலைவன் பாணருக்குத் தன்னுடைய பழைய வாளை ஈடுவைத்துப் பொருள் வழங்குவதாலும், சீறூர்த்தலைவித் தன் இல்லத்திற்க்கு வந்த இரவலர்களுக்கு விதைத் தினையை உணவாக்கி விருந்து அளித்ததாலும் பாணர் மீது இரக்கமும் கருணையும் கொண்டவர்களாக விளங்கினர். பாணரும் அவர்களுடன் நெருக்கமான தொடர்பு நிலையைக் கொண்டிருந்தனர் என்பதும் புலனாகிறது.

### 4.9. பாணர் குறுநில மன்னர்களுடன் கொண்ட தொடர்புநிலை

பாணர் குறுநில மன்னர்களிடமும் சென்று தம் வறுமையைப் பாடியுள்ளனர். அவர்களும் பாண் சுற்றத்துக்குத் தேவையான பரிசிலை வழங்கியுள்ளனர். சிலர் பாணர் தம்முடன் தங்கியிருக்க விருப்பம் கொண்டு அவர்கள் பரிசிலை நீட்டித்துள்ளனர். காரணம் அவர்களின்

பண்ணிசைக்கும் திறனையும், பாடும் திறனையும் ஊக்குவித்தற்காகவே ஆகும். ஆனால் பாணர் குறுநில மன்னர்களுடன் மிக்க நெருக்கம் உடையவராகக் காணப்படவில்லை. எனினும் அவர்கள் தங்களை புரக்கும் மன்னர்களின் நல்வாழ்விற்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளனர். பேகனின் தவறான ஒழுக்கத்தினை நெறிப்படுத்திய பெருமை கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் போன்றோரைச் சாரும். மேலும், வள்ளல்களுடன் பாணர் நட்புரிமை பூண்டவர்களாகவும் விளங்கினர் என்பது அதியமான் ஔவையின் நட்புணர்வு உணர்த்துகிறது. பாணர் தங்களைப் புரக்கின்ற குறுநில மன்னர்களுடன் நட்பு கொண்டவர்களாகவும், அவர்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டுபவர்களாகவும் விளங்கியுள்ளனர். ஆயினும் குறுநில மன்னர்கள் தங்களை 'மன்னர்' என்னும் உயர் முறைமையை விடுத்துப் பாணருடன் நெருங்கிப் பழகியவர்களாகத் தெரியவில்லை. அவர்கள் தங்களின் அதிகாரத்தை விடுத்துப் பழகியவர்களாவும் காணப்படவில்லை.

எனவே பாணர் குறுநில மன்னர்களுடன் கொண்ட தொடர்பு நிலையானது சீறூர்த் தலைர்களைப் போல் அல்லாது, சிறு இடைவெளியுடன் கூடிய நட்புறவாக விளங்கியது புலனாகிறது.

**4.10. பாணர் - வேந்தர் தொடர்புநிலை இடைவெளிக்கான காரணங்கள்**

பாணர் சீறூர்த் தலைவனிடத்துக் கொண்ட உறவுபோன்று வேந்தர்களிடத்துக் கொள்ளவில்லை. அதுபோல பாணர் குறுநிலமன்னர் இவர்களிடையே காணப்படுகின்ற இடைவெளியுடன் கூடிய நட்புறவும் இங்கு காணப்படவில்லை. மாறாக பெருவேந்தர்கள் வாரி வழங்குபவர்களாக, நன்கு உபசரிப்பவர்களாக விளங்கினாலும், பாணரின் உற்சாகமூட்டும் புகழமைந்த பாடல்களை மதித்தனர். அதேவேளையில் அப்பாடல்களால் தங்களின் புகழ் பரவுவதையே விரும்பினர். மேலும், பெருவேந்தர்கள் தம்மை நாடிவரும் பாணருக்குப் பொன்னால் ஆன தாமரைப் பூவினைப் பரிசாக வழங்கியுள்ளனர்.

பசி என்று வந்த பாணருக்கு அறுசுவை உணவளித்து விருந்து படைத்தபோதும் இப்பெருவேந்தர்கள் அவர்களுடன் அமர்ந்து உணவருந்தியதற்குச் சான்றுகள் இல்லை. சீறூர்த் தலைவன் - தலைவியரிடத்துப் பழகியது போலவும், குறுநில மன்னர்கள் மற்றும் அவரின் தலைவியருடன் கொண்ட நட்பினைப் போலவும், பெருவேந்தர்களுடன் பாணர் தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ளவில்லை. காரணம், பெருவேந்தர்கள் உருவான காலச்சமூகம் நாடுபிடி சமூகமாக மாறிப்போனது குறிப்பிடத்தக்கதாகும்.

நிலவுடைமைச் சமுதாயத்தில் பாணர் என்போர் பாடல் பாடும் இரவலராகவே போற்றப் பட்டுள்ளனர். அவர்கள் பசித்துவரும் இயல்புடையவர் என்பதால் வயிற்றுக்குச் சோறும், நைந்துபோன ஆடையை உடுத்தியவராதலால் அவர்களுக்குப் பட்டாடைகளும் கொடுத்து மகிழ்ந்தனரே அன்றி, அவர்களுடன் நெருங்கி வாழ்ந்தவராகப் பெருவேந்தர்கள் காணப்படவில்லை.

இப்பெருவேந்தர்கள் போரில் பெற்ற வெற்றியோடு, பகைவரின் செல்வங்களைக் கவர்ந்து வந்தள்ளனர். அவ்வாறு கவர்ந்து வந்த செல்வத்தை தாம் வைத்துக்கொள்வதும் பயன்படுத்துவதும் பாவம் என்று கருதி அதனை இரந்துண்டு வாழ்பவருக்குப் பரிசாக வாரி வாரி வாழ்கியுள்ளனர். எனவே ‘‘இரப்போர்க்கு ஈதல் கடன்’’ என்னும் முறைமையை ஏற்படுத்திக் கொண்டுள்ளனர்.

பெருவேந்தர்கள் தகுதியாலும், தரத்தினாலும், ஆட்சிமுறையாலும், செல்வளத்தாலும், ஆளும் திறத்தாலும் தம்மை உயர்த்திக் கொண்டே சென்றதால், பாணர் போன்ற இரந்துண்ணும் வாழ்வைப் பெற்றோர் வேந்தரை அணுக முடியாத தொலை தூரத்திற்குச் சென்றதைப் போன்ற மிகப்பெரிய இடைவெளி உருவானது. அவ்இடைவெளி காலப்போக்கில் பெரிதாக வளர்ந்ததே தவிர இணைக்கப்படவில்லை. எனினும் பாணர் புலவர் போன்றோரைப் பெருவேந்தர்கள் ஆதரித்தமைக்குக் காரணம் அவர்களின் புகழ் பரவுவதற்கு இவர்கள் காரணமாயினர் என்பதே ஆகும்.

பாணரின் சுற்றம் பெருவேந்தர்களின் போர், வெற்றி, கொடைத்திறன் என அனைத்துச் செயல்களையும் கண்டு வியந்து போற்றும்படியான எண்ணற்ற பாடல்களைப் பாடினர். அதற்காக அவர்கள் போர்க்களத்திற்கும் சென்றுள்ளனர்.

பாணர் மற்றவருடன் கொண்ட தொடர்பினைப் போன்று அல்லாமல் வேந்தர்களுடன் இரவலராக மட்டும் தொடர்பு கொண்டுள்ளனர். மேலும், அவர்கள் மன்னர்களின் சாதனைகளைச் சரித்திரமாக்கும் பெட்டகமாக விளங்கினர். அதனால் அவர்கள் மதிப்பிற்கு உரியவர்களாக கருதப்பட்டனர். ஆனாலும் பாணர் பாடல் பாடுபவராகவும், இரந்துண்ணும் இரவலராக மட்டுமே வலம் வந்துள்ளனராதலால், பாணர் வேந்தர் இடையே மிக நீண்ட நிரந்தரத் தொடர்புநிலை இடைவெளி இருப்பதை உணரமுடிகிறது.

**4.11. முடிவுரை**

பாணரின் சமூகம் பெருஞ்சுற்றத்தைக் கொண்டது என்றாலும், அவர்கள் எப்போதும் ஓர் குழுவாகவே வாழ்ந்தனர். அக்குழுவாழ்க்கை முறையே அவர்களின் பொருள் தேடலுக்கு

ஊற்றாகவும், பலமாகவும் அமைந்தது. இக்குழுவாழ்க்கை முறைக்கு இசையே ஆதாரமாக விளங்கியது.

பாண்மரபினர் ஒருவருக்கொருவர் எப்போதும் துணையாக விளங்கினர். அவர்கள் பொருள் தேடி ஒரு வள்ளலைக் காணச் செல்லும்போதும் தன் சுற்றத்துடனேயே சென்றுள்ளனர். அவ்வாறு செல்லும்போது உடன் தம் இசைக்கருவிகளைக் கொண்டுசென்றனர்.

பாணரின் வறுமை வாழ்விற்குக் காரணம் அவர்களின் உழைப்பின்மையே ஆகும். உழைத்துப் பிழைக்காதவர்களாக விளங்கியதால், ஓரிடத்தில் நிலைக்கவும் இயலவில்லை.

பாணர் தம்மைப்போன்றோரை வழிநடத்தும் பண்பு உடையவராகவும், நட்புக்கு முதன்மைன வழங்குபவராகவும் விளங்கினர். இதனால் எண்ணற்ற பழிச்சொல்லுக்கும் ஆளாகின்றனர்.

பாணர் சீறூர்ச் சமுதாயத்துடன் மிக்க நெருக்கமுடையவர்களாக விளங்கினர் என்பதைச், சீறூர்ச் சமுதாய மக்களின் பழக்க வழக்கங்கள் பாண்மரபினருள்ளும் காணப்படுவதைக் கொண்டு உணரமுடிகிறது.

அரசனை இறைவனாக எண்ணும் பாணர் நிமித்தம் பார்க்கின்ற வழக்கம் உடையவராகவும் காணப்படுகின்றனர். பாணர் அக்காலச் சமூகத்துடன் நல்ல தகவல் தொடர்பாளராக விளங்கினர் என்பதும் பெறப்படுகிறது.

குறுநில மன்னர்களுடன் பாணர்கொண்ட தொடர்பானது, சீறூர்த்தலைவனிடத்துக் கொண்ட தொடர்பினைப்போன்று அல்லாமல் சிறு இடைவெளியுடன் கூடிய உறவாக விளங்குகிறது. அதேபோன்று பெருவேந்தர்களும் இரவலர்களுக்குப் பரிசில் நல்கினார்களே அன்றி, நெருக்கமான உறவுபூண்டு பழகவில்லை என்றே அறியப்படுகிறது.

இப்பாண்சமூகம் வறுமையுள் வாடியவர்களாகவும், பொருள் தேடிச்செல்லும் பறவைகளாகவும் நிலையற்ற வாழ்க்கையையே வாழ்ந்தனர் என்பது புலனாகிறது.

## இயல்: 5 பாணர் மரபின் நீட்சி

### 5.0. முன்னுரை

சங்ககாலத்தில் மன்னர்களுடனும், மக்களுடனும் மிக்க இணக்கமுடையவர்களாக விளங்கிய பாணர், காலப்போக்கில் அந்நிலையிலிருந்து திசைமாறினர். அவர்கள் தமிழகத்தில் ஏற்பட்ட ஆட்சி மாற்றங்களினாலும், பல்வேறு போர்ப் பூசல்களாலும் நிலைகுலைந்து போகும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். வறுமையின் பிடியில் சிக்குண்ட பாணர் வயிற்றுப் பிழைப்பிற்காகத் தங்கள் கலையறிவைத் துறக்கும் அவலநிலைக்கும் தள்ளப்பட்டனர். வயிற்றுப்பாட்டிற்காக வேறு வேறு பணிகளைத் தேடிச் சென்று அதிலேயே நிலைகொள்ளவும் துணிந்தனர். காலம் அவர்களின் பாரம்பரியக் கலை உணர்வுகளை மலுங்கடிக்கச் செய்தது. மறக்கவும் செய்தது. இத்தகைய சூழலில், மன்னனையேத் தம் இறைவனாக எண்ணிய பாணர்கள், இறுதியில் இறைவனிடத்திலேயேக் கையேந்தினர். தம் வறுமையை இறைவனிடம் எடுத்தோதி முறையிட்டனர். இவ்வாறாக மீண்டும் துளிர்விடத் தொடங்கிய பாணர் மரபின் நீட்சியை இவ்வியல் ஆராய்கின்றது.

### 5.1. சங்ககாலத்துப் பாணரின் உச்சநிலை

சங்ககாலத்தில் பாணர் மிகப்பெரிய சுற்றமாக வாழ்ந்தனர். அப்பெருஞ் சுற்றத்தோடு வள்ளல்களை நாடிச் சென்றனர். மிகப்பெரிய சுற்றமாக விளங்கியபோதும் அவர்கள் ஓரிடத்ததில் நிலைத்து வாழவில்லை. நடோடி வாழ்க்கை முறையையே மேற்கொண்டனர். இதனைக்,

“**கைவன் ஈகைக் கடுமான் கொற்ற**
**வையக வரைப்பில் தமிழகம் கேட்பப்**
**பொய்யாச் செந்நா நெளிய ஏத்திப்**
**பாடுப என்ப பரிசிலர் நாளும்**
**ஈயா மன்னர் நாண வீயா**
**பரந்தரின வசையில் வான்புகழே**” (புறம்.பா.எ: 168.,வ.எ்: 17-22)

என்னும் வரிகள் உணர்த்துகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 363) கொடுப்போரைத் தேடியே பாணர் சென்றனர். அதுமட்டுமன்றி கொடாத மனமுடையோர் காணும்படியாக வழங்கியவர்களைப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

ஊர் ஊராகச் சுற்றித்திரிந்த பாணர் தமிழகத்தின் ஐவகை நிலங்களையும் கடந்து சென்றுள்ளனர். அவர்கள் பல இடங்களுக்கும் சென்று இரந்து பரிசில் பெற்றுள்ளனர். இதனை,

"**ஆனினங் கலித்த அதர்பல கடந்து**

**மீனினங் கலித்த மலையி னொழிய**

**உள்ளிவந்த வள்ளுயிர்ச் சீறியயாழ்**

**சிதாஅர் உடுக்கை முதாஅரிப் பாண**" (புறம்.பா.எ: 138.,வ.எ்: 1-5)

எனும் வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 291) பாணர் காடு, மலை, கடல் எனும் நிலங்களைக் கடந்து சென்றனர். பெரிய சுற்றமாகப் பாணர் வாழ்ந்தனர் எனினும், அவர்கள் சங்ககாலச் சமூகத்தில் நன்மதிப்பு உடையவராக விளங்கினர். மன்னரிடத்து மிக்க அன்புடையவராகவும், அவர்களின் நலனில் அக்கறை உள்ளவராகவும் காணப்பட்டனர். அதேபோன்று அக்காலச் சமூக மக்களிடத்தில் மிக்க நெருக்கமான உறவுடையவராய்ப் பாணர் விளங்கினர். அக்காலத்தில் மக்களிடத்தும் மன்னரிடத்தும் நற்பெயருடன் பாணர் வாழ்ந்தனர் என்று அறியமுடிகிறது.

### 5.1.1. மன்னர்களுடன் நட்புறவு

பாணர் சங்ககாலத்தில் மிகுந்த பெருமைக்கு உரியவராக விளங்கினர். அவர்கள் மன்னர்களுடனும் வள்ளல்களுடனும் மிகுந்த நட்புறவுடன் விளங்கினர். கபிலர், பரணர், அரிசில்கிழார் போன்றோர் பேகனிடம் பரிசில்வேண்டி மட்டும் செல்லவில்லை. மாறாக அவனுடைய இல்லற வாழ்வில் ஒழுக்கநெறி தவறியவிடத்து அதனைச் சுட்டிக்காட்டவும் செய்துள்ளனர். அவனை நன்நெறிப்படுத்தவும் முயன்றுள்ளனர்.

வையாவிக் கோப்பெரும்பேகன் என்று போற்றப்படும் கடைஎழு வள்ளல்களுள் ஒருவனான பேகன் தன் இல்லறமாண்பினை இழந்து பரத்தையிடம் புறத்தொழுக்கம் பூண்டு ஒழுகினான். தன் மனைவியாகிய கண்ணகியாரைக் கைதுறந்தான். இந்நிலையை உணர்ந்த கபிலர் அவனை நன்னெறிப்படுத்த முயன்றுள்ளார். இதனை,

"**வாயிற் றோன்றி வாழ்ந்து நின்று**

**நின்னுநின் மலையும் பாடவின்னா**

**திகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்**

**முலையாக நனைப்ப விம்மாக்**

**குழலினை வதுபோ லழுதனன் பெறுதே**" (புறம்.பா.எ: 143.,வ.எ்: 11-15)

என்னும் வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ.).,1947: 300) உன்னையும் உன் மலையையும் வாழ்த்திச் சென்று உன் வாயிலின்கண் நின்றேன். அப்போது அழுதுகொண்டிருந்த கண்களை உடையவளாகிய நின் மனைவி மிகவும் உன்னுடைய பிரிவினைத் தாளாது துயரம் மிகவுற்று அழுதவண்ணம் நின்றுந்தாள் என்று பேனுக்கு எடுத்துரைத்துள்ளார். இதேபோன்று பேகனிடத்துப் பரணரும் இல்லற மாண்பினை எடுத்துரைப்பதனைக்,

"..................**காந்தன்**

**முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா**

**யாமவன் கிளைஞரே மல்லேங் கேளினி**

**எம்போ லொருத்தி நலனயந் தென்றும்**

**வரூஉ மென்ப வயங்குபுகழ்ப் பேகன்**

**ஒல்லென வொலிக்குந் தேரொடு**

**முல்லை வேலி நல்லூரானே**" (புறம்.பா.எ: 144.,வ.எ்: 8-14)

என்னும் வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ.).,1947: 302) பேகனின் புறத்தொழுக்கத்தைக் கேள்வியுற்ற பரணரும் பேகனிடத்துக் கண்ணகியின் நிலையினை எடுத்துரைக்கிறார். நாங்கள் உனது கானத்தைப் பாடினோம். அப்போது அங்கே இளமகள் ஒருத்தி அழுதுநின்றாள். உடனே நாங்கள் அவரைத் தொழுது பேகனுக்குக் கிளைமை உடையீரோ? என்று வினவினோம். அதற்கு அவளோ தம் கண்ணீரைத் துடைத்தவாரே, எம்போல்வாள் ஒருத்தியின் நலத்தை விழைந்து நாள்தோறும் அவளுறையும் நல்லூர்க்குத் தேரேறி வந்து போகின்றானெனப் பலரும் கூறுகின்றனர் என்று உரைத்தாள் எனக் கூறுகின்றார். இவர்களைப் போலவே அரிசில்கிழாரும், பெருங்குன்றூர் கிழாரும் பேகனிடத்து அவன் மனைவியைக் கைதுறந்து வாழும் நெறிபிறழ்ந்த சூழலைச் சுட்டிக்காட்டியுள்ளனர். இதனைப் புறநானூறு – 146 மற்றும் 147ஆம் பாடல்கள் உணர்த்துகின்றன. (சு. துரைச்சாமிப்பிள்ளை.(உ.ஆ.).,1947: 306-309)

பேகனின் வாழ்வில் மாற்றத்தைக் கொண்டுவர அக்காலப் பாண்மரபினர் முயற்சித்துள்ளனர். தாம் பரிசில் வேண்டிச் செல்லும் மன்னர்களாக இருப்பினும் அவர்களின் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களுக்குத் தீர்வுகாணும் அளவிற்குப் பாணர் பெரும் மதிப்பிற்குரியவர்களாக விளங்கியுள்ளனர். மேலும் அம்மன்னர்களிடத்துப் பாணர்

மதிப்புடையவர்களாக விளங்கியதுபோன்று மன்னர்களும் பாணர்களிடத்து அன்புடையவர்களாக விளங்கியுள்ளனர்.

ஔவை அதியமானின் நட்பு உலகறிந்ததாகும். ஔவையின் புலமையை விரும்பிய அதியமான், ஔவைக்குப் பரிசிலை நீட்டித்துக் காலம் தாழ்த்தினான். இதனால் மிகுந்த வருத்தம் அடைந்த போதும் ஔவை தன்னைத் தானே சமாதானம் செய்துகொண்டு, தனக்குரிய பரிசில் எப்போதும் யானையின் துதிக்கையிடத்தே உள்ள கவளத்தைப் போன்றது. எனவே எப்பொழுதேனும், பரிசிலைப் பெற்றுக் கொள்ளலாம் எனப் பகருகின்றார். இதனை,

"**அதியமான் பரிசில் பெறூஉங் காலம்**

**நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்**

**கோட்டிடை வைத்த கவளம் போலக்**

**கையகத் ததுவே பொய்யாகாதே**" (புறம்.பா.எ: 101.,வ.எ்: 5-8)

எனும் வரிகள் உரைக்கின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1947: 232) இதேபோன்று மற்றொருமுறை சென்றபோதும் அதியமான் பரிசிலை நீட்டித்தான். ஔவை தன் மனக்கருத்தை அதியமானிடம் தெரிவிக்க எண்ணிப் பலமுறை முயன்று முடியாது போயிற்று. அப்போது அவர் அரண்மனை வாயிலோனிடம் சென்று, "வாயிலோயே வாயிலோயே" (புறம்.பா.எ: 206.,வ: 1) எனத் தொடங்கும் பாடலிலும் உணர்த்துகிறார். (சு. துரைசாமிப் பிள்ளை.(உ.ஆ).,1951: 16) வாயிற்காப்பாளனே நீ எப்போதும் பரிசிலர் பரிசிற்கு வருந்தும் வாழ்க்கை உடையவர் என்பறிந்து, அவருக்கு அவ்வாயிலை அடைப்பதில்லை. ஆயினும் என்னிடம் மட்டும் வாயிலை அடைக்கின்றாய். இது நின் செயலன்று என்று அறிவேன். நின் தலைமகனான அதியமான் தன் தகவுடமையை அறியவேண்டும். இல்லையெனில், என் தரமறிய வேண்டும். ஆயினும் அறிவும் புகழுமுடைய வேள்பாரி போன்றோர் இறந்ததால், இவ்வளமிக்க உலகம் வறிதாகிவிடவில்லை. நாங்கள் எத்திசை செல்லினும் எங்களுக்குச் சோறு குறை கிடையாது. சோறு என்று நான் வேண்டுவது என எண்ணி எனக்கு விடைதர நீட்டிப்பது விழுமிதன்று கூறுகிறார்.

ஔவை அதியமானிடக்து உரிமையோடு கூறுவதன் மூலம், அதியமான் ஔவையின் மீதுகொண்ட உயர்ந்த நட்புள்ளமும், ஔவை அதியமான் மீது வைத்திருந்த நம்பிக்கையும், நட்பும், மதிப்பும் உணர்த்தப்படுகிறது. அக்காலச் சமூகத்தில் மன்னர்களுடன் பாணரும், பாண்மரபினரும் நல்ல நட்புறவு கொண்டு விளங்குமளவு உயர்ந்த மதிப்பினைப் பெற்றிருந்தனர் என்பது தெளிவாகிறது.

### 5.1.2. போர்க்களத்திலும் பாணர்

பாணர் பரிசில் வேண்டி மன்னரின் அவைக்களம் மட்டும் செல்லவில்லை அவர்கள் தம் மன்னரின் போர்ச்சிறப்பு பற்றியும், வெற்றி, வீரம் பற்றியும் பாடவேண்டிப் போர்க்களத்திற்கும் சென்றுள்ளனர். மேலும் அவர்கள் போரில் வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு இறுதிக்கடன் செலுத்துவதையும் தம் கடமையாகக் கொண்டுள்ளனர். இதனை,

"**வெண்கோட்ட களிறு எறிந்து செங்களத்து வீழ்ந்தார்க்குக்**

**கைவல்யாழ்ப் பாணர்கடன் இறுத்தன்று**" (புறப்.கொ.எ: 123.,வ.ள்: 1-2)

என்னும் வரிகள், உணர்த்துகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(வி.ஆ).,2009: 207-208) யாழினை இசைக்கும் பாணர் இரத்த வெள்ளம் பெருகும் சிவந்த போர்க்களத்திடையே பகைவரின் யானையைக் கொண்று தாமும் இறந்து வீழ்ந்த தும்பை வீரர்களுக்குச் செய்யவேண்டிய இறுதிக்கடனைச் செய்து அவர்களுடைய புகழைப் பாடியுள்ளனர். இதற்குப் பாண்பட்டு என்று புறப்பொருள் வெண்பாமாலை உணர்த்துகிறது. மேலும்,

"**தளரியல் தாய் புதல்வர் தாம் உணராமைக்**

**களரிக் கனல் முழங்க மூட்டி~ விளரிப்பண்**

**கண்ணினார் பாணர் களிறுஎறிந்து வீழ்ந்தார்க்கு**

**வீண்ணினார் செய்தார் விருந்து**" (புறப்.வெ.எ: 123.,வ.ள்: 1-4)

எனும் இவ்வரிகளும், விளக்குகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(வி.ஆ).,2009: 207-208) போர்க்களத்தில் பகைவருடைய யானையைக் கொண்று தாமும் இறந்து வீழ்ந்தான் ஒரு தும்பை வீரன். அவனுக்குத் தேவர் உலகில் உள்ளோர் விருந்தளித்தார்கள். அவ்வீரனுடைய தளர்ந்த இயல்புடைய மனைவியும், தாயும் புதல்வரும் போர்க்களத்தில் அவ்வீரன் இறந்ததை அறியாத முன்னரே பாணர்கள் அவரின் உடலுக்கு நெருப்பிட்டுப் புகழ்பாடல்களைப் பாடி இறுதிக்கடன் செய்தனர்.

மேலும் பாணர் போரில் பெற்ற வெற்றிக் களிப்பினைத் தம் தலைவனுடன் சேர்ந்து கள்ளுண்டு மகிழ்ந்துள்ளனர். இதனைக்,

"**கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்திக்**

…………………………………………

…………………………………………

**அவமானம் மாறைவன் யாமவன் பாணர்**" (புறம்.பா.எ: 316.,வ.ள்: 1-4)

எனும் வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 227) வேந்தன் ஒருவன் பகை வேந்தனுடன் போருடற்றி வெற்றி எய்தினான். பகை வேந்தன் அப்போரில் இறந்துபட்டான். வெற்றி பெற்ற வேந்தனுடன் தானைத்தலைவரும் பிற சான்றோரும் சேர்ந்து கள்ளுண்டு மகிழ்ந்தனர். தன் மனைக்கு மீண்டு வந்த தலைவன் கள்ளை விடியலிலும் மிகவுண்டு அக்கள்ளை வாழ்த்தி உறங்குவோனாயினான். அவன்பால் சென்ற ஒரு பாணர் தலைவன் பரிசில் பெற்று வந்தான். அவன் வரும் வழியில் வேறு சில பாணரைக்கண்டு, அவர்களிடம் மனை முன்றிலில் துஞ்சுவோனாகிய அவனே எம் தலைவன். யாம் அவன் பாணராவோம் என்று கூறுகிறான். இப்படிப் போர்க்களத்தில் வீரமரணம் அடைந்தவர்களின் வீரத்தைப் புகழ்ந்து பாடியும், அவர்களுக்கு இறுதிக் கடன்களை நிறைவேற்றியும் பெரும்பொறுப்பு உடையவர்களாக அக்காலச் சமூகத்தால் பாணர் மதிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் வெற்றிக் களிப்பின்போதும் தன் தலைவனுடன் இருந்து கொண்டாடியுள்ளனர்.

இப்பாணர்கள் போர்க்களத்தில் மன்னன் பெற்ற பெருஞ்செல்வத்தையும் பாராட்டிப் பாடியுள்ளனர். இதனைச்,

‘‘**செங்களத்துச் செழுஞ் செல்வம்**

**வெண்துறை யாழ்ப்பாணர் விளம்பின்று**’’ (புறப்.கொ.எ: 188.,வ.ள்: 1-2)

என்னும் வரிகள் சுட்டுகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன்.(வி.ஆ).,2009: 301) மேலும்,

‘‘**ஈண்டி எருவை இலிகுளரும் வெங்களத்து**

**வேண்டியாம் கொண்ட விறல்வேழம் ~வேணிடாள்**

**வளைகள் வயிர் இயம்பும் தானை வேந்தே**

**விளைகள் பகர்வாள் விலை**’’ (புறம்.வெ.எ: 188.,வ.ள்: 1-4)

என்னும் வரிகள், குறிப்பிடுகின்றன. (வ. த. இராமசுப்பிரமணியன். (வி.ஆ).,2009: 301) சங்குகளும் ஊதுகொம்பும் முழங்க விளங்க வாளேந்திய வேந்தே! முற்றிய கள்ளை விற்பவர் அதற்கு விலையாக நின்னிடமிருந்து பெற்றுக்கொண்ட வெற்றிக்களிற்றை விரும்பமாட்டார் என்று புகழ்ந்துரைக்கின்றன. பாணர் இவ்வாறு போர்க்களத்திற்குச் சென்று தம் மன்னனின் வீரம், வெற்றி, போர்த்திறம் போன்றவற்றைப் புகழ்ந்து பாடியுள்ளனர். எனவே பாணர் மன்னர்களுடன் அவைக்களத்திலும், போர்க்களத்திலும், அவர்களின் மனத்திலும் முதன்மையானதொரு இடத்தைப் பெற்றிருந்தனர் என்பதை உணரமுடிகிறது.

### 5.1.3. பாணருக்குச் செய்தல் (மன்னரின்) ஆண்கடன்

பாணர் தம் பாட்டுத்திறம், இசைமீட்டும் ஆற்றல், கூத்து போன்றவற்றால் மன்னர்களாலும், வள்ளல்களாலும் பெரிதும் மதிக்கப்பட்டனர். எனவேதான் கலையைப் போற்றிய மன்னர்கள், அக்கலையை வளர்ப்போரையும் போற்றிப் புரந்தனர். மேலும் பாணருக்குச் செய்தலைத் தங்களின் கடமையாகவும் எண்ணினர். இதனை,

**"ஆண்கட னுடையமையிற் பாண்கட னாற்றிய**

**ஒலியற் கண்ணிப் புலிகடி மாசுல்"** (புறம்.பா.எ: 201.,வ.எ்: 14-15)

எனும் வரிகள் சுட்டுகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 1) அக்கால மன்னர்கள் தம் ஆண்தன்மையைக் (ஆளுந்தன்மையை) கடப்பாடாகக்கொண்டு விளங்கினர். அவர்களின் அத்தகைய கடப்பாட்டினால் பாணருக்குச் செய்வது முறைமையுடையது என்றும் நம்பினர். அதன்படியே பாண்மரபினரைப் பெரிதும் போற்றினர். அவர்களின் இசையாற்றலில் மூழ்கித் திளைத்தனர். இதேபோன்று,

**"பாண்கட னிறுக்கும் வள்ளியோய்**

**பூண்கட னெந்தையேரவலர் புரவே"** (புறம்.பா.எ: 201.,வ.எ்: 14-15)

என்னும் வரிகளும், பகருகின்றன. (சு. துரைசாமிப்பிள்ளை.(உ.ஆ).,1951: 9) பாணருக்குக் கொடுப்பதனைத் தமது கடமையாகக் கொண்டு ஆட்சி புரிந்தனர் என்றும், அவர்கள் அவ்வள்ளல் தன்மையோடு கூடிய வெற்றிகளைப் பெற்று ஆட்சி செலுத்தியமையால் பாணருக்கு இறைவனாகவே விளங்கினர் என்றும் அறியமுடிகிறது. பாணர் சங்ககாலச் சமூகத்தில் மன்னர்களுடன் மிகுந்த நட்புறவு கொண்டவர்களாகவும், மன்னர்கள் போற்றும் மாண்புடையவர்களாகவும் விளங்கினர். அவர்களின் இசை ஆற்றலால் அவைக்களத்திலும் போர்க்களத்திலும் தம் முத்திரையைப் பதிவு செய்துள்ளனர். அவர்களின் இத்தகைய பணியானது சரித்திரம் உணர்த்தும் சான்றுகளாக அமைந்துள்ளன என்பது பெறப்படுகிறது.

### 5.1.4. மக்களுடன் கொண்ட நல்லுறவு

பாண்மரபினர் மன்னருடன் மட்டுமல்லாது மக்களுடனும் நல்லுறவு கொண்டவர்களாக விளங்கியுள்ளனர். தலைவனின் தேவைகளை நிறைவேற்ற உதவும் உதவியாளனாகவும், அவனுடைய தகவல்களைக் கொண்டுவந்து சேர்ப்பிக்கும் தூதுவனாகவும் விளங்கினர். அவ்வேளைகளில் தலைவியாலும், தோழியாலும் பழிக்கப்பட்டாலும், வெறுக்கப்பட்டாலும் அதனை மிக்க பொறுமையுடன் தலைவனுக்காக ஏற்றுக்கொள்கின்றவனாகப் பாணன்

விளங்கியுள்ளான். அதேபோன்று பாணன் தலைவனின் செயல்களால் வெறுக்கப்பட்டாலும், தலைவனுடன் மதிக்கப்படுகின்றவனாகக் காணப்படுகின்றான். இதனைத்,

"............................**துறைவற்கு நீயுங்**

**கண்டாங்கு உரையாய் குணமோ பாண**

.............................................

.............................................

**பல்லான் கிழவரின் அழிந்கவிவள் நலனே**" (நற்.பா.எ: 291.,வ.எ்: 5-9)

எனும் வரிகள், மொழிகின்றன. (அ. நாராயணசாமி ஐயர்.(உ.ஆ).,1952: 360) பரத்தையிற் பிரிந்த தலைவன் விடுப்பவந்த பாணனை நோக்கித் தோழி, பாணனே! தலைவியின் நலமானது அழிந்துபோவதை நீ கண்கூடாகக் கண்டபடித் தலைவனிடத்து உரைக்கவில்லை. இது உனக்கு இயல்பாகுமோ? கூறியிருந்தால் அவன் முன்னரே வந்து தலையளி செய்திருப்பான். நீ உள்ளவாறு கூறாமையால் அவனும் வந்திலன். இவளது நலனும் அழிந்தது காண் என்று கூறிப் பாணனைத் தோழி பழித்துரைக்கின்றாள்.

இதேபோன்று பாணன் பொய்யன் என்று தோழியால் பழிக்கப்படுகின்றான். இதனைக்,

"**குருகு கொளக் குளித்த கெண்டை அயலது**

...................................................

...................................................

**ஒருநின் பாணன் பொய்யன் ஆக**

**உள்ள பாணர் எல்லாம்**

**கள்வர் போல்வரிநீ அகன்றிசி னோர்க்கே**" (குறுந்.பா.எ: 127.,வ.எ்: 1-6)

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,2007: 235) பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைவன் தலைவியின் ஊடலைத் தீர்க்கப் பாணனை அனுப்பினான். அப்பொழுது தோழி, நின்னுடைய பாணன் முழுப்பொய்யன் அவன் அங்ஙனமாகலின், நின்னால் பிரியப்பட்ட மகளிருக்கு உலகத்தில் உள்ள பாணர் எல்லாம் கள்வர் போலவெ காணப்படுவாராயினர் என்று தூற்றுகின்றாள்.

தோழியானவள் இவ்வாறு பாணனைத் தூற்றுவதன் மூலம் பாணனுக்குத் தலைவன் பாலுள்ள மதிப்பும், அதனால் அவன் கொண்ட பொறுமையும் உணர்த்தப்படுகிறது. இதுபோலவே பாணனைத் தலைவியும் தூற்றுகிறாள். இதனைப்,

“**பாணன் பொய்யன் பலசூ ளினனே**” (ஐங்.பா.எ: 43.,வ: 4)

எனும் வரியானது, உணர்த்துகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 70) பரத்ததமை மேற்கொண்டு மீண்டு வந்த தலைவன், தலைவியின் ஊடலைத் தீர்க்கப் பாணனை விடுக்கின்றான். அப்போது தலைவி நின்னைக் காட்டிலும் நின்னனுடைய பாணன் பொய் கூறுவதில் வல்லவன். ஆதலால் நின்னுரை கேட்டு இனி யான் மயங்கேன் என்று தலைவனிடத்துப் பாணனைத் தூற்றுகிறாள். இதேபோன்று,

“**பண்பிலை மன்ற பாண விவ்வூ**

**ருன்பில கடிய கழறி**

**மென்புலக் கொண்கனைத் தாரா தோயே**” (ஐங்.பா.எ: 138.,வ.ள்: 1-3)

என்னும் பாடலும், சுட்டுகிறது. (பொ. வே. சோமசுந்தரனார்.(உ.ஆ).,1961: 195) பாணனைத் தலைவி எள்ளி நகையாடுமாறு அமைந்துள்ளது. தலைவியின் ஊடல் தீர வேண்டிப் பாணனை அனுப்பினான் தலைவன். ஆனால் பாணன் செல்லும் முன்னமே தலைவன் இல்லத்திற்குச் சென்று வாயில் வேண்ட, தலைவியும் வரவேற்றுக் கொண்டாள். இதனை அறியாத பாணன் தலைவியின்பால் வந்து நிற்க, அது கண்ட தலைவி அவனை எள்ளி நகையாடுகிறாள்.

தலைவனால் பலவாறு பழிச்சொல்லுக்கும், அவப்பெயருக்கும் தான் ஆளானபோதும் அதனை ஒருபோதும் எதிர்க்காது ஏற்றுக்கொண்ட பாணன் உயர்ந்த பண்பினனாகக் காணப்படுகிறான். மேலும் பாணன் தலைவனால் பழிச்சொல்லுக்கு ஆளாகியபோதும், தலைவி, தோழியால் முற்றிலுமாக வெறுக்கப்பட்டதில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. ஏனெனில், சில நேரங்களில் தலைவிக்காகத் தலைவனிடத்துத் தூது செல்பவனாகவும் பாணன் காணப்படுகிறான்.

பாணர் சங்ககாலச் சமூகத்தில் மக்களுடனும் மன்னர்களுடனும் நன் மதிப்பினையும், நல்லுறவினையும் பெற்றுத் திகழ்ந்தனர். பரிசிலுக்காக மட்டுமே நாடிச்செல்லாது அவர்களிடம் அன்பு கொண்டவர்களாகவும் வாழ்ந்துள்ளனர். அவர்களின் அன்பு உண்மையானதாக இருந்தமையாலே மன்னர்களும் பாணரைப் போற்றிப் புரந்துள்ளனர். அவர்களின் புலமையை மட்டும் ஆதரிக்காது, அவர்களின் அன்புள்ளத்தையும் ஆதரித்துள்ளனர். அதேபோன்று பாணரும் ஏர்க்களம், போர்க்களம், அவைக்களம் என அனைத்திலும் உயர்ந்த மதிப்புடையவர்களாகக் காணப்படுகின்றனர். சங்ககாலம் காதல், வீரம் என்ற இரண்டும் நிறைந்த காலம், எனவே பாணரும் தாம் சார்ந்திருந்த சமூகத்தின் சூழலுக்கு ஏற்றவாறு

மக்களின் வாழ்க்கையில் ஏற்படும் காதல் வீரம் இரண்டிலும் தொடர்புடையவர்களாக விளங்கினர். சங்ககாலச் சமூகத்தில் பாணரின் வாழ்க்கைநிலை அவர்களின் கலையுணர்வோடு உச்சநிலையைப் பெற்றிருந்தது புலனாகிறது.

### 5.2. சங்ககாலத்தை அடுத்து பாணர்நிலை

சங்ககாலத்தில் தமிழகம் செழிப்புற்று விளங்கியதுபோல் பாணரும் உச்சநிலையை அடைந்திருந்தனர். அவர்களின் பண்ணாலும் பாடல்களாலும் சங்ககால மன்னர்களின் கொடை, வீரம், ஆட்சி, போர், வெற்றி என்னும் அரசியல் நிலைகளை அறியமுடிந்தது. இதனை அடுத்து சங்ககாலத்தின் இறுதிநிலை என்று கூறுமளவு அந்நியர்களின் படையெடுப்பு தொடங்கியது. அந்நியர்களின் படையெடுப்புக்கு ஆளான தமிழகம் அதன் வளமையிற் குன்ற ஆரம்பித்தது.

#### 5.2.1. சங்ககாலத்தின் இறுதிநிலை

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரையில், கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கடைச்சங்கம் நிறைவுற்றது. மேலும் பாண்டி நாட்டில் மிகக் கொடியதொரு பஞ்சம் நேர்ந்ததாகவும் பன்னிரண்டு ஆண்டுகள் அப்பஞ்சம் நீடித்திருந்து மக்களை வாட்டியதாகவும், பாண்டிய வேந்தன் சங்கப் புலவர்களைப் பாதுகாக்க இயலாதவனாய் வெளியே பல இடங்கட்கும் சென்று வாழும்படி அவர்கட்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டான் என்றும் கூறப்படுகிறது. (கே. கே. பிள்ளை.,2009: 182) அத்துடன் தமிச்சங்கம் இறுதியான முடிவை எய்தியது எனவும் செவிவழி வரலாறுகள் கூறுகின்றன.

#### 5.2.2. களப்பிரரும் தமிழகமும்

சங்காலம் கி.மு.300 முதல் கி.பி.300 வரை என்று அறுநூறு ஆண்டுகளைக் கொண்டதென வரையறை செய்கின்றனர் ஆய்வறிஞர்கள். (மா. இராசமாணிககனார்.,2009: 57) அதன்பின்னர் தமிழகத்தின் வடஎல்லையான வேங்கடத்துக்கும் மேற்பாலில் வாழ்ந்திருந்த களவர் என்போர் தெற்கு நோக்கிக் குடிபெயர்ந்தார்கள். இவர்கள் தமிழகம் முழுவதிலும் பரவினார்கள். தொண்டைமண்டலம் சோழமண்டலம், பாண்டிமண்டலம் ஆகியவற்றுள் ஒன்றேனும் இவர்களுடைய கொடுமையிலிருந்து தப்பவில்லை என்று கூறப்படுகிறது. (கே. கே. பிள்ளை.,2009: 184) இக்கூற்று மா. இராசமாணிககனாரின் கூற்றுடன் ஒத்துச்செல்கிறது.

தமிழகத்தில் பரவிய இக்களப்பிரர் மாபெரும் சூறாவளியைப்போல் நாட்டில் நுழைந்து மக்களைக் கொன்று குவித்து உடைமைகளைச் சூறையாடினார். (கே. கே. பிள்ளை.,2009: 183) தமிழகத்தில் கி.பி 3, 4ஆம் நூற்றாண்டுகளில் தொண்டை மண்டலத்தில் மிகப் பெரியதோர் அரசியற் குழப்பம் ஏற்பட்டது. இதனால் களப்பிரர், (பல்லவ, சோழ, பாண்டியரை)

மூன்று பேரரசர்களை ஒடுக்கித் தமிழகத்தில் கலகமும், கொள்ளையும், கொலையும் விளைவித்தனர். அவ்வாறு சோழ நாட்டைக் கைப்பற்றி ஆண்டு வந்தவன் களப்பிர மன்னனான அச்சுதவிக்கிராந்தன் என்பவன் ஆவான். (கே. கே. பிள்ளை.,2009: 185) களப்பிரர் தமிழகத்தின் வளத்தைச் சிதைத்தனர். அதற்குக் காரணம், அயல்நாட்டினர் வேறு ஒரு நாட்டை வென்று கைக்கொண்ட பிறகு அவர்களுடைய மொழி, இலக்கியம், கலை, நாகரிகம் ஆகியவற்றை அழிப்பதையே தம்முதற் கடமையாகக் கொள்வர். இது வரலாறு கண்ட உண்மையாகும் என்று கூறும் கே. கே. பிள்ளையின் கருத்து ஏற்புடையதாகிறது. இதன் காரணமாகவே களப்பிரர் தமிழகத்தில் செலுத்திய ஆட்சிமுறைக் காலத்தை 'இருண்ட காலம்' என்று அழைக்கலாயினர் வரலாற்றறிஞர்கள்.

**5.2.3. களப்பிரரின் சமயமும் சங்கமும்**

களப்பிரர் முதலில் பௌத்தராகவும் பிறகு சமனராகவும் என இரண்டு சமயச் சார்புடையவராகக் காணப்பட்டனர். களப்பிர மன்னனான அச்சுதவிக்கிராந்தன் காலத்தில் புத்ததத்தர் என்ற பௌத்த அறிஞர் 'விநய விநிச்சயம்' என்னும் நூலை அவர் எழுதியதாகக் கருதப்படுகிறது. மேலும் களப்பிரர் காலத்தில் ஆக்கத்துறைகள் பலவற்றில் வளர்ச்சி காணப்பட்டது. பௌத்த சமண ஒழுக்கங்கட்குச் செல்வாக்கு உயர்ந்தது. பௌத்தரும் சமணரும் வைதிகச் சடங்குகளையும், வேள்விகளையும் ஆரிய சமய தத்துவங்களையும் மறுத்தனர். பாண்டிநாட்டில் சமண நிர்க்கிரந்தர்கள் எண்ணற்றவர்கள் வாழ்ந்து வந்தனர் என யுவான் சுவாங் என்னும் சீன யாத்திரிகர் குறிப்பிட்டுள்ளார். (கே. கே. பிள்ளை.,2009: 185-186) இது களப்பிரர் பௌத்த சமண மதத்தை தழுவியவர்களாகக் காணப்பட்டதைக் குறிக்கின்றது. இந்நிலையில், அவர்தம் பௌத்த, சமண மதக் கருத்துக்களைத் தமிழ் மக்களிடையே பரப்ப எண்ணினர். ஆனால் களப்பிரரின் ஆட்சியில் பிராகிருத மொழியும், பாலி மொழியும் வலுப்பெற்று விளங்கியது. தமிழ்மொழி ஆட்சிமொழி என்னும் உயர்விலிருந்து பின்னடைவு அடைந்தது. இருப்பினும் இவர்களின் மதக்கருத்துக்களைப் பரப்புவதற்காகப் பௌத்தரும், சமணரும் தமிழ்மொழியை ஏற்கலாயினர்.

பூஜ்ஜியபாதர் என்பவரின் மாணவரான வச்சிரநந்தி என்பார் மதுரையில் 'திராவிட சங்கம்' ஒன்றை நிறுவினார். (கி.பி.470) சமண அறத்தைப் பரப்புவதும், சமணக் கொள்கைகளை விளக்கக் கூடிய நூல்களைத் தோற்றுவிப்பதுமே இச்சங்கத்தின் நோக்கமாகும். பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் பல இக்காலத்தில் இயற்றப்பட்டவையே

ஆகும். (கே. கே. பிள்ளை.,2009: 186) இதன்மூலம் களப்பிரர் ஆட்சியின் போது தமிழகம் நிலை குலைந்து, மொழியின் வனப்பும் இழந்து காணப்பட்டமையை அறியமுடிகிறது.

### 5.2.4. தொலைந்துபோன பாணரின் வாழ்வும் கலையும்

தமிழகத்தின் இருண்டகாலம் எனக்கூறுமளவு (கி.பி.300 - கி.பி.575) வரையிலான காலத்தைச் சிதிலமடையச் செய்தனர் களப்பிரர். இவர்களின் ஆட்சியில் சமண சமயம் மேலோங்கி இருந்தது. சமணர்களின் கொள்கைகளுக்கு விரோதமான தமிழர்களின் பழக்கவழக்கங்கள் யாவற்றையும் மறுத்தனர். அதுமட்டுமல்லாது மாற்றவும், ஒழிக்கவும் செய்தனர். இசை என்பது சமணர்களின் கொள்கைக்கு மறுப்பானது என்பதால் களப்பிரர் அதனை ஏற்கவில்லை. நாட்டில் அமைதி இன்றி எப்பொழுதும் போர் மூண்டுகொண்டே இருந்ததாலும், செல்வ வளங்கள் அனைத்தும் கொள்ளையடிக்கப்பட்டதாலும் பாணரின் வாழ்க்கைக்கு வழிகாட்ட இடமின்றிப்போனது. பாணரும் தம்மைப் புரந்தருளுவதற்கு யாருமற்றவர் ஆயினர். இவர்கள் தம் மதக் கருத்துக்களை பரப்ப முனைந்தனரே அன்றித் தமிழரின் கலையை உணரக்கூட முயற்சிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதன்மூலம் தமிழ்மொழியானது சமண, பௌத்த மதக் கருத்துக்களை மக்கள் மத்தியில் பரப்புவதற்காக மட்டுமே அவர்களால் பயன்படுத்தப்பட்டது. எனவே பாணர் தம் வறுமையைப் போக்கிக்கொள்ள மன்னர்களை நாடிச்செல்லும் நிலையும் மறைந்து போனது. கொடுங்கோலர்களாக விளங்கிய களப்பிரரிடத்துக் கருணையையும், கொடைத்தன்மையையும் எதிர்பார்க்க இயலாது என்பதைப் பாணர் உணர்ந்திருந்தனர்.

அரசனை இறைவனாக எண்ணிப்போற்றியவர் பாணர். ஆனால் களப்பிரர் காலத்தில் ‘கோ’ என்பவன் கூற்றுவனாக விளங்கிய நிலையை வரலாறு உணர்த்துகிறது. ஒரு நாட்டினை அழிக்க வேண்டும் என்றால், அந்நாட்டின் இலக்கியம், மொழி, கலை, நாகரிகம் போன்றவற்றை அழிக்க வேண்டும் என்ற நோக்கோடு ஆட்சி புரிந்தவர்கள் களப்பிரர். அதனாலேயே பாட்டும், இசையும், கூத்தும் அறவே வெறுக்கப்பட்டன. ஒடுக்கப்பட்டன. கலைகள் அழிக்கப்பட்டன என்று வரலாறு உணர்த்துகிறது. தம்மைப் புரப்பதற்கு யாருமற்ற நிலையில்தான் பாண் மரபினரும் தம் கலையை இழக்கத் தலைப்படும் சூழல் உருவானது. காலம் செல்லச் செல்லப் பாண்மரபினர் தம் கலையறிவைத் தலைமுறை தலைமுறையாக மறந்து போயினர்.

அதேவேளையில் களப்பிரர் ஆட்சியின் போது ‘திரமிளசங்கம்’ (திராவிட சங்கம்) எனும் சங்கம் ஒன்றினை நிறுவித் தமிழ்ப்பணி செய்துள்ளனர். ஆயினும், இக்கால கட்டத்தில் தோன்றிய இலக்கியங்கள் அனைத்தும் சமண, பௌத்த சமயச் சார்புடையனவாக

இயற்றப்பட்டது. அதிலும் பெரும்பாலும் சமண சமய இலக்கியங்களே தோன்றின என்பதும் இன்றியமையாதது. மற்றும் இச்சங்கம் வாயிலாக தோற்றுவிக்கப்படும் நூல்களின் மூலம் சமண சமயக் கருத்துக்களை மக்களுக்குப் பரப்பினர். அதற்காகவே சங்கம் நிறுவினர். இருப்பினும் இச்சங்கத்தின் வாயிலாகத் தோன்றிய இவக்கியங்கள் தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் இன்றுவரைத் தொண்டு செய்து வருகின்றன என்பதும் முக்கியமானதாகிறது. ஆயினும் தமிழரின் பண்டைய பழக்கவழக்கங்களும், பண்பாடும் மாறிப்போயின. இதனால், பாணர் என்னும் மரபினரும் அருகிப்போயினர். அவர்களின்றிப் பாட்டும், இசையும், கூத்தும் அருகிப்போயின. இவ்வாறு ஆதரிப்பதற்கு யாருமற்ற காரணத்தால், பாணரும் அவரின் இசையறிவும், பாட்டும், கலையும் என்று அனைத்தும் ஒளியை இழந்த விளக்கைப்போல மங்கி மறையத் தொடங்கின.

**5.3. பக்தி இயக்கங்களும் பாட்டின் உயிர்ப்பும்**

தமிழகத்தில் களப்பிரரின் ஆட்சியால் கி.பி.250 முதல் கி.பி.575 வரையிலான ஆண்டுகள் (ஏறத்தாழ 300 ஆண்டுகள்) இருள் சூழ்ந்து கொண்டன. இக்காலகட்டத்தில் குறைந்தது பத்து தலைமுறையாவது ஆகியிருக்கும். இரண்டு தலைமுறை போனாலே வாழ்க்கையும் வரலாறும் விளங்கவில்லை. பத்துத் தலைமுறை அன்னியர் ஆட்சி. அடக்குமுறை ஆட்சியில் கலைவாணர்களான பாணரின் கலைகள் ஒடுக்கப்பட்டது மாத்திரமல்லாமல், அவர்களே பாணராக இருந்தநிலை அழிந்துவிட்டது. அதாவது வறுமையில் மடிந்தவர்கள் போக எஞ்சியவர்கள் பாணராக வாழமுடியாமல், தங்கள் பண்பாட்டைக் கைவிட்டு வேறு பிழைக்கும் தொழிலை மேற்கொண்டமையால், பாண்டிநாட்டில் பாணர் குலம் பூண்டற்றுப் போய்விட்டது. (மு. அருணாசலம்.,2009: 571) களப்பிரர் காலத்து சமணர் ஒரு சங்கத்தை நிறுவியபோதும், அதில் பல நூல்களைப் படைத்த போதும், அவ்அனைத்து நூல்களும் பெரும்பாலும் நீதியை போதிப்பனவாகவே படைக்கப்பட்டுள்ளன என்பதும், பாணர் எனும் ஒரு குலம் காணாமற்போனதும் குறிப்பிடத்தக்கது.

‘‘பாணர்குலம் தம் வாழ்வாதாரத்திற்காகக் கூலிவேலை செய்யக் கற்றுக்கொண்டார்கள். உழவுத்தொழிலில் அனேகர் ஈடுபட்டார்கள். இன்றுபோலவே அன்றும் உழவுவேலை - பயிர்த்தொழில் - எத்தனைபேர் வந்தாலும் அத்தனை பேரையும் இழுத்துக்கொள்ளும், வேலைகொடுக்கும். சோறும் போடும். தவிர இத்தொழிலில் ஆணும் பெண்ணும் ஈடுபட இடமுண்டு. சிலர் கட்டிட வேலையில் உதவியாளராகக் கூலிக்கு அமர்ந்தார்கள். சிலர் வெறும் கூலிகளாகவும் அமர்ந்திருக்கலாம்’’ என்கின்றனர். (மு. அருணாசலம்.,2009: 571) பலவாறு

பிரிந்து சென்ற பாணர் தம் குலத்தொழிலை மறந்துபோகவேண்டிய சூழலுக்குத் தள்ளப்பட்டனர். அரசனை இறைவனாக எண்ணிய பாணர், பின் நாளடைவில் இறைவனையே எண்ணித் துதித்துப் போற்ற ஆரம்பித்தனர் என்று வரலாறு உணர்த்துகிறது. கடுங்கோன் என்னும் பாண்டியன் களப்பிர அரசனைப் போரில் வென்று பாண்டி நாட்டில் மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிறுவினான் என்று வேள்விக்குடிச் செப்பேடும், தளவாய்புரச் செப்பேடும் உணர்த்துகிறது. இதனை,

**“அளவரிய ஆதிராசரை யகலநீக்கி யகலிடத்தைக்**

**களப்ரனென்னம் கலியரசன் கைக்கொண் டதனையிறக்கியபின்**

**படு கடன் முறைத்த பருதிபோற் பாண் டியாதீராசன் வெளிப்பட்டு**

**விடுகதி ரவிரொளி விலகவீற் றிருந்து**

**வேலைசூழ்ந்த வியலிடத்துக்**

**கோவும் குறும்பும் பாவுடன் முருக்கிச்**

**செங்கோ லோச்சி வெண்குடை நீழற்**

**றங்கொளி நிறைந்த தரணி மங்கையைப்**

**பிறர்பா லுரிமை திறவிதினீக்கித்**

**தன்பா லுரிமை நன்கன மமைத்த**

**மானம் போர்த்த தானை வேர்தன்**

**ஒடுங்கா மன்ன ரொளிநக ரழித்த**

**கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்**

**மற்றவற்க மகனாயி மகீதலம் பொதுநீக்கி**

**மலர்மங்கையொடு மணனயர்ந்த**” (வேள்வி.,செப்பேடு.,வ.எ: 36-46)

என்னும் வேள்விக்குடிச் செப்பேட்டின் இவ்வரிகள் சுட்டுகின்றன. (ஆ.கு.,1967: 22-23 மற்றும் 38-39) கடுங்கோன் என்னும் பாண்டியன் தமிழகத்தில் களப்பிரரின் ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வந்தான். தமிழனிடத்தும் தமிழ்ப் பண்பாட்டினிடத்தும் பற்றுதல் உடைய பாண்டியர் கி.பி.575-இல் இருந்து முன்புபோல் ஆண்டார்கள். இதன்பின் பாணர் பாண்டி நாட்டிலேயே அச்சமற்ற சுதந்திர வாழ்வு வாழ்ந்து தங்கள் பாடற்கலையையும், ஆடற்கலையையும் ஆண்டவனுக்கு அர்ப்பணித்து வந்தனர். ((மு. அருணாசலம்.,2009: 569-570) ஆள்பவனைப் போற்றிய நிலைமாறி ஆண்டவனைப் போற்றும் நிலை உருவானது.

### 5.3.1. சைவசமயம் வளர்த்த இசை

களப்பிரர் காலத்திற்குப் பிறகு சோழர் ஆட்சியில் கி.பி.7, 8, 9 ஆம் நூற்றாண்டுகளில் ‘ஆலயப் பணியே ஆண்டவன் பணி’ என்னும் சிந்தனை வேரூன்றியது. சங்கஇலக்கியங்கள் மன்னரையும் மக்களையும் பாடின. பக்திஇலக்கியங்கள் இறைவனையும் இறையடியாரையும் சிறப்பித்தன. ‘கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்’ ‘(திரு)நீறில்லாத நெற்றி பாழ்’ என்னும் எண்ணம் மக்கள் மனத்தில் ஊன்றப்பட்டது. நாடெங்கும் கோயில்கள் எழுப்பட்டன. இயற்றப்பட்ட இலக்கிய வகைமைகள் அனைத்தும் சைவ சமயம் சார்ந்ததாகவே உருவாக்கப்பட்டன. சைவ சமய எழுச்சியில் கோயில்கள் இலக்கியங்கள் போலவே சைவமடங்களும் பங்கேற்றன. (பாக்கியமேரி.,2008: 294) சைவ சமயத்தை எழுச்சி பெறச்செய்த நாயன்மார்கள் அனைவரும் இறைவன் மீது பாடல்களைப் பாடினர் என்பது குறிப்பிடத்தக்கது. ஆயினும் நாயன்மார்கள் அறுபத்து மூவருள் ஒருவர் மட்டுமே பாணர் எனும் குலப்பெயர் கொண்டு வழங்கப்படுகிறார்.

பாணர் குலத்தில் பிறந்தவர் என்று குறிப்பிடப்படும் இவரே திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஆவார். இதேபோன்று பாண்டியர் ஆட்சியில், வரகுண பாண்டடியனின் அவைக்களத்தில் பாணபத்திரன் என்னும் ஒரு புலவர் இருந்ததாக வரலாற்றுச் செய்திகள் உணர்த்துகின்றன. இதனை அடுத்து திருநீலகண்ட யாழ்ப்பாணரது வழியில் வந்த ஒரு பெண்ணை தேவாரத்திற்குப் பண் அமைத்துத் தருமாறு கேட்டுள்ளனர் என்றும், இப்பணியானது இராசராசன் காலத்தில் நிகழ்ந்தது என்றும் கூறப்படுகிறது.

#### 5.3.1.1. திருநீலகண்ட யாழ்ப்பாணர்

அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவராக விளங்குபவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஆவார். இவருடைய பெயரிலேயே பாணர் குலமும், அவரின் இசைத்திறனும் வெளிப்படுகிறது. இவர் தென்னார்க்காடு ஜில்லாவில், இராசேந்திரபட்டணம் என்று இன்று வழங்குகிற பாடல் பெற்ற தலமாகிய திருஎருக்கத்தம் புலியூரில் பிறந்தார். இவரது மனைவி மதங்க சூளாமணி ஆவார். இருவரும் யாழிசையில் வல்லவர்கள். ஆதலால் பல தலங்கள் சென்று பின் மதுரையை அடைந்தனர். தம் குலம் காரணமாக கோயிலுள் புகாமல், முன்புறத்தில் சந்நிதிக்கு எதிரே இவர்கள் யாழிசை நிகழ்த்தினர். (மு. அருணாசலம்.,2009: 585) பெருமான் கட்டளையினால் ஊர் மக்கள் இவர்களைக் கோயிலுள் சந்நிதியருகே அழைத்துச் சென்றனர். அப்பொழுது பாணர் யாழினைத் தரையில் வைத்துப் பாடியதைக் கேட்ட இறைவன், அசரீரி ஒலியால் கட்டளை இட்டார். இதனை,

**"அன்பினில் பாணர் பாடும்**

**சந்தயாழ் தரையில் சீதம்**

**தாக்கில் வீக்கு அழியும் என்று**

**சுந்தரப் பலகை முன்நீர்**

**இடும் எனத் தொண்டர் இட்டார்"** (பெரிய – 4225.,வ.ள்: 2-6)

என்னும் பெரியபுராணத்து வரிகள் உணர்த்துகின்றன. (பி. ரா. நடராசன்.(உ.ஆ).,2006: 530) இறைவன் கூறியது போலவே பொன் பலகை இட்டனர். திருவாரூர் முதலான தலங்களில் யாழ் வாசித்து, திருஞான சம்பந்தர் வரலாற்றைக் கேட்டறிந்தனர். பின்னர் சீகாழி அடைந்து, அவர் தம் பாடல்களைப் பாடுந்தோறும் அவற்றை யாழில் இட்டு இசைக்க அனுமதி பெற்று அவருடைய குழாத்தில் கலந்துகொண்டு பாடிவந்தனர். (மு. அருணாசலம்.,2009: 585) சம்பந்தருடன் இணைந்து பல தலங்கள் சென்று, அவருடைய பதிகங்களைப் பண்ணில் அமைத்தார் பாணர்.

**5.3.1.1.1. சம்பந்தரும் யாழ்மூரிப் பண்ணும்**

சம்பந்தருடனேயே சென்ற பாணர் ஒரு முறை தன் மனைவியொடு திருத்தருமபுரம் சென்றார். அங்கு இவருடைய சுற்றத்தார் கூடி இவர் சம்பந்தருக்கு இசை வாசிப்பதைப் போற்றினர். போற்றியபோது "நீர் இசைப்பதால் அவருடைய பாசுரங்கள் உலகெலாம் பரவியுள்ளன" என்றார்கள். இதைக்கேட்ட பாணர் அவர்களுக்கு நல்லறிவு புகட்டும் முறையில், "யாழில் அடங்காத இசையுடைய பதிகம் பாட வேண்டும்" என்று சம்பந்தரை வேண்டினார். அவரும் அவ்வாறே யாழில் வாசிக்க இயலாத தன்மை பொருந்திய இசையுடைய யாழ்மூரிப் பதிகம்தனை "மாதர் மடப்பிடியும்" எனத் தொடங்குமாறு பாடினார்.

பாணர் அதை யாழில் வாசிக்க முயன்றபோது முடியவில்லை. அப்போது அவர் "சம்பந்தர் பாடலை நான் யாழில் இசைப்பேன் என்று செருக்கு விளைவிக்கும் என்ற எண்ணங் கொண்டது இந்த யாழினால் அல்லவா?" என்று கூறி அவ்யாழை உடைக்க முற்பட்டார். அப்போது சம்பந்தர் அவரைத் தடுத்து, "அருளினால் வந்த பாடல் கருவியில் அளவுபடாது" என்று காட்டி இயன்றவரை வாசித்து வருமாறு பணித்தார். (மு. அருணாசலம்.,2009: 586) அவ்வாறே பாணரும் வாசித்து வரலானார் என்று கூறப்படுகிறது.

### 5.3.1.1.2. பாணர் சம்பந்தருடன் கலத்தல்

திருநீலகண்ட யாழ்ப்பாணர் சம்பந்தருடன் பல தலங்களுக்குச் சென்று, அவரின் பதிகங்களுக்கு யாழ் வாசித்தார். முடிவில் சம்பந்தரின் திருமணம் திருநல்லூர்ப் பெருமணத்தில் நிகழ்ந்தபோது இறைவன் திருவருளால் அங்கு தோன்றிய பெருஞ்சோதியில், சம்பந்தர், மற்றும் அவரின் உற்றாருடன் பாணரும் தம் மனைவியுடன் இரண்டறக் கலந்து முக்தி பெற்றார் என்று கூறப்படுகிறது. (பி. ரா. நடராசன்.,2005: 532) இதன்வழித் திருநீலகண்ட யாழ்ப்பாணர் தம் இசைப்பணியை இறைவனுக்காக அர்ப்பணித்துக் கொண்டமையையும், சங்ககாலப் பாணரிலிருந்து மாறுபட்ட யாழ்ப்பாணரின் வாழ்க்கையையும் அறியமுடிகிறது.

### 5.3.1.2. பாணபத்திரர்

மதுரையில் வரகுண பாண்டியனின் அவையில் பத்திரன் என்ற பாணன் இசைவாணளாக இருந்தான். இவ்வரகுண பாண்டியன் சைவப் பற்றுடையவன். இவனது காலம் கி.பி.792 - கி.பி.835 வரை என்று கூறப்படுகிறது. (கே. கே. பிள்ளை.,2009: 378) இப்பாண பத்திரன் மதுரைச் சொக்கநாதன் மீது மிகுந்த பக்திகொண்டவர். மாலைதோறும் கோயிலுக்குச் சென்று, கோயிலின் வெளிவாயிலின் புறத்தே நின்று யாழை மீட்டி இசையமுதம் இறைவனுக்குப் பொழிந்து வந்தார். ஒருநாள் ஏமநாதன் என்ற பெயருடைய அயல்நாட்டு இசைவாணன் ஒருவன் அரசவைக்கு வந்து தனக்கு இணையாக இங்குப் பாடுவார் உளரா? என்று சவால் விடுத்தான். அச்சவாலை “நீ ஏற்க முடியுமா?” என்று பத்திரனை அரசன் கேட்கவும், “சோமசுந்தரக் கடவுள் அருளால் இசைப்போட்டியில் அவனை வென்று மதுரை அரசவையின் நற்பெயரை நான் காப்பேன்” என்று பத்திரன் கூறிவிட்டார்.

வீடுதிரும்பும் வழியில் தெருவெங்கும் ஏமநாதனுடைய மாணாக்கர் இசைபாடிக் கொண்டிருந்ததைக் கண்டு வந்த பாணபத்திரர் திகில் அடைந்தார். சீடரே இவ்வளவு சிறப்பாகப் பாடும்போது, ஆசிரியன் இசை எவ்வளவு உயர்வாய் இருக்கும்! அவனை நான் வெல்வது எங்ஙனம்? என்று கவலையுற்றார். கோயிலுக்குச் சென்று, ‘பெருமானே அரசனிடம் வாக்குக் கொடுத்துவிட்டேன். ஆதலால், இசையில் ஏமநாதனை வெல்வதும், என்னைக் காப்பதும் உன்கடன்” என்று குறையிரந்துவிட்டு வீட்டை அடைந்தார் என்று கூறப்படுகிறது. (மு. அருணாசலம்.,2009: 589-592) பாணபத்திரர் இறைவனைப் போற்றியதும், வேண்டியதும் புலப்படுகிறது.

#### 5.3.1.2.1. பாணருக்கு இறைவன் அருளல்

பாணனுக்கு உதவி செய்ய இறைவன் திருவுளங்கொண்டான். தலையில் விறகுக்கட்டைச் சுமந்து மிக்க முதிய வேடத்தோடு, ஏமநாதன் தங்கியிருந்த வீட்டுத் திண்ணையில் விறகுக்கட்டைச் சாத்திவிட்டு, உட்கார்ந்து சாதாரிப் பண்ணில் மூன்று பாடல் பாடினான். அதனை,

> "**விரைசேர் மலரோன் அறியா விகிர்தன்**
> **அரசாய் மதுரை அமர்ந்தான் என்னே!**
> **அரசாய் மதுரை அமர்ந்தான் அவானன்**
> **புரைசார் மனனும் புகுந்தான் என்னே!**"

எனும் வரிகள், உணர்த்துகின்றன. (மு. அருணாசலம்.,2009: 589.,வ.ள்: 1-4) இறைவன் பாடிய சாதாரி இசையை அண்டசராசரம் அனைத்தும் கேட்டு உருகிறது. வீட்டினுள்ளிருந்து ஏமநாதனும் கேட்டான். "சாதாரிப் பண்ணை இவ்விதம் எலும்பையும் உருக்குமாறு ஒருவன் பாடி இதுவரை நான் கேட்டதில்லையே என்று எண்ணினான். வீட்டின் வெளியே வந்து தாங்கள் யார்? எனக் கேட்டான்.

நான் பாணபத்திரரிடம் இசை கற்ற ஒரு முதியமாணாக்கன். முதுமை அடைந்தமையால், இனி நீ கற்க இயலாது என்று என்னைப் பத்திரர் நீக்கிவிட்டார். வயிற்றுப் பிழைப்புக்காக விறகுவெட்டிச் சீவிக்கிறேன் என்றார். இதைக் கேட்ட ஏமநாதன், பத்திரரிடத்து இசையைக் கற்கத் தகுதி இல்லை என்று விலக்கப்பட்ட முதியவரே இவ்வாறு பாடினால், பத்திரன் பாடல் எவ்வாறு இருக்கும் அவரோடு நான் எவ்வாறு போட்டியிட முடியும் என்று அஞ்சினான். ஆதனால் ஓடிவிட்டான்.

இதை அறிந்த பாணபத்திரர் இறைவன் தனக்கு அருளிய பெருங் கருணையை எண்ணி மகிழ்ந்தார். பின்னர் அரசனும் பாணனுக்குப் பெருஞ்சிறப்பு செய்தான். ஒருமுறை பாணபத்திரர் வறுமையால் வாடினார். அவரின் மேல் கருணைகொண்டு ஒரு திருமுகம் அளித்து, அதனைச் சேரமன்னன் பால் கொடுத்து பொருள் பெற்றுக் கொள்க என்று பணிந்தார். (மு. அருணாசலம்.,2009: 589-592) பாணரும் அவ்வாறே சென்று கொடுத்துப் பெரும்பரிசில் பெற்றுச் சுகமாக வாழ்ந்தார் எனக் கருதப்படுகிறது.

#### 5.3.1.2.2. பாணரின் மனைவியும் இசைவல்லாள்

பத்திரரின் மனைவியும் அவரைப்போல இசையில் வல்லவளாகத் திகழ்ந்தார். வரகுண பாண்டியனுக்குப் பின் அவனுடைய காமக்கிழத்திக்குப் பாணர் மனைவியின் மீது பொறாமை

மிகுந்திருந்தது. இதனால் வேறு ஓர் ஊரிலிருந்து ஒரு இசைவல்லாளை அழைத்துவரச் செய்து இசைப்போட்டிக்கு ஏற்பாடு செய்தாள். போட்டி நடந்தது. முதல்நாள் போட்டியில் பாணரின் மனைவி வெற்றி பெற்ற போதும், அரசன் தன் காமக்கிழத்திக்குச் சார்பாகத் தீர்ப்பு வழங்க, அதனை அவையோர் அனைவரும் ஒருதலைப்பட்சமாக ஏற்றுக்கொண்டனர். பாணரின் மனைவி இறைவனிடம் வேண்டினாள். மறுநாளும் போட்டி நடந்தது. அப்போதும் அரசன் தன் காமக்கிழத்தியால் அழைத்துவரப்பட்டவளுக்குச் சார்பாகத் தீர்ப்பு வழங்கவே,

மூன்றாம் முறை போட்டியானது இறைவனின் சன்னதியில் நடக்க வேண்டும் என்று கூற அனைவரும் சென்றனர். இசைவாணர்களின் மத்தியில் இறைவனும் அமர்ந்தார். பாணரின் மனைவியும் பாடினார். இதனைக்,

> “**குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்**
> **குமையாக் குஞ்சரமும்**
> **புடங்கோள் பாயும் பூவணையும் தருவாய்**
> **மதுரைப் பிராட்டீ**
> **படங்கோள் பாயும் பூவணையும் தருவாய்**
> **கையிற் பருதலை கொண்டு**
> **இடங்கள் தோறும் இரப்பாற் என்றேசு**
> **வார்க்கென் பேசுவனே.**” (மு. அருணாசலம்.,2009: 589.,வ.எ்: 1-8)

எனும் வரிகள் பகருகின்றன. (மு. அருணாசலம்.,2009: 589-592) வேற்று ஊரிலிருந்து வரவழைக்கப்பட்டவளைப் போற்ற வாய் திறந்த அரசன் இறையிருளால் “பாணர் மனைவியே வென்றாள்” என்று சொல்லிவிட்டான். புலவர்கள் ஒருமுகமாக அவ்வாறே கூறினார்கள். புலவரோடு புலவராக வீற்றிருந்த இறைவனும் “அற்புதம் அற்புதம்” என்று சொல்லி மறைந்துவிட்டார். அனைவரும் அதிசயித்தனர். அரசன் இருவருக்கும் தக்க பரிசில்கள் நல்கினான். இப்பாணபத்திரர் பற்றிய வரலாறு நம்பி திருவிளையாடல், பரஞ்சோதி திருவிளையாடல் என்ற இரு புராணங்களிலும் சிறப்பித்துப் பாடப் பெற்றுள்ளது என்று கூறப்படுகிறது.

வரகுண பாண்டியன் காலத்தில் சைவ சமயம் போற்றப்பட்டுள்ளது. அதன் மூலமாக இசையும் ஆதரிக்கப்பட்டுள்ளது. சங்ககாலத்தை அடுத்துப் பாணர் தம் தொழில் முறையை மாற்றி அமைத்துக் கொண்டபோதும் ஆங்காங்கே சிலர் தம் குலவித்தையைப்

போற்றியுள்ளனர். ஆயினும் அதனைக் கொண்டு அவர்கள் பெரும் பரிசில்களை வேண்டி ஊர் ஊராகச் சுற்றித்திரியவில்லை. மேலும் அவர்கள் தம் இசைப் பணியினை இறைவனுக்கே அற்பணித்தனர் என்பதும் அறியப்படுகிறது.

### 5.3.1.3. எருக்கத்தம்புலியூர் நங்கை

சோழர் வரலாற்றில் மிகப்பெரும் பேறு பெற்றவன் இராசராச சோழ மன்னனாவான். இவனது ஆட்சிகாலத்தில் கோயில் பணிகள் பல செய்யப்பட்டன என்று வரலாறு உணர்த்துகிறது. அவ்வகையில், இராசராசனின் விருப்பமாகத் தேவாரத் திருப்பதிகங்களை நம்பியாண்டார் நம்பி தொகுத்து வகுத்தமைத்தார். பின்னர் மன்னனுடன் திருஎருக்கத்தம் புலியூர் அடைந்தார். இது திருநீலகண்ட யாழ்ப்பாணர் பிறந்து வாழ்ந்த தலம். அங்கு திருக்கோயிலை வணங்கி ‘‘அரனே இப்பதிகங்களுக்கு இசையாகிய பண்முறையை உணர்த்தியருள வேண்டும்’’ என்று குறையிரந்தார்கள். அப்போது அசரீரியானது, ‘‘யாழ்ப்பாணர் மரபில் வந்த ஒரு பெண்ணுக்கு இசையறிவு அளித்திருக்கிறோம். அவளைத் தில்லைக்கு அழைத்துவரச் சென்று நடராசர் சந்நிதியில் பண்ணடைவு செய்யச் சொல்லி அறிந்து கொள்க’’ என்று கூறியதாக விளக்குகிறது. பின்னர் அதன்படியே அரசன் அவளைத் தேடியறிந்து நடராசர் முன் கொண்டுபோய், அவள் மூலம் பண்களும் அவற்றுக்குரிய கட்டளைகளும் வகுத்துத் தரப் பெற்றுக்கொண்டார்கள். தேவாரப் பண்களுக்கு அவள் வகுத்தளித்த கட்டளை அமைப்பைப் பத்துச் செய்யுள்களில் உமாபதி சிவாச்சாரியார் திருமுறைகண்ட புராணத்துள் கூறியுள்ளார் என்றும் கூறப்படுகிறது (மு.அருணாசலம்.,2009: 592) தேவாரம் மீண்டும் புத்திசையால் உயிர்த்தெழுந்தது.

#### 5.3.1.3.1. நங்கை வகுத்தளித்த பண்கள்

திருஎருக்கத்தம் புலியூர் நங்கை, சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் போன்றோரின் பதிகங்களுக்குப் பண்கள் அமைத்துள்ளாள் என்று கூறப்படுகிறது.

#### 5.3.1.3.2. சம்பந்தரின் தேவாரத்திற்கு வகுத்த பண்கள்

நட்டபாடைக்கு 8 கட்டளைகள் தக்கராகம் - 7, பழந்தக்கராகம் - 3, தக்கேசிக்கு - 2, குறிஞ்சி -5, வியாழக்குறிஞ்சி - 6, மேகராகக் குறிஞ்சி - 2, இந்தளம் - 4, காமரம் (சீகாமரம்) - 2, பியந்தைக் காந்தாரம் - 3, நட்டராகம் - 2, செவ்வழி - 1, காந்தார பஞ்சமம் - 1, சாதாரி - 9, புறநீர்மை - 1, அந்தாளிக் குறிஞ்சி - 1 என்று பண்கள் அமைத்தததாகக் கருதப்படுகிறது. (மு. அருணாசலம்.,2009: 592) இங்ஙனம் சம்பந்தரின் தேவாரத்திற்குப் பண்கள் வகுக்கப்பட்டன.

### 5.3.1.3.3. நாவுக்கரசர் தேவாரத்திற்கு வகுத்த பண்கள்

பல பண்களுக்கும் ஒன்று வீதம், நேரிசை கொல்லி – 2, குறுந்தொகை - 1, தாண்டகம் - 1 என்று பண்கள் அமைத்தமை பற்றி விளக்குகின்றது. (மு. அருணாசலம்., 2009: 592) நாவுக்கரசர் தேவாரத்திற்கும் பண்கள் வகுத்தளிக்கப்பட்டன.

### 5.3.1.3.4. சுந்தரர் தேவாரத்திற்கு வகுத்த பண்கள்

இந்தளம் - 2, தக்கராகம் - 2, நட்டராகம் - 2, கொல்லி - 3, பழம் பஞ்சமம் - 1, தக்கேசி - 6, காந்தராம் - 2, காந்தார பஞ்சமம் - 1, நட்டபாடை - 2, புறநீர்மை - 2, காமரம் - 1, குறிஞ்சி - 2, செந்துருத்தி - 1, கவுசிகம் - 2, பஞ்சமம் - 1 எனும் இப்பண்களைத் திருஎருக்கத்தம் புலியூர் நங்கை வகுத்தளித்தாள் என்றும், அன்றுமுதல் அடியவர்கள் இக்கட்டளையைத் தழுவிய பண்களால் பாடி வருகிறார்கள் என்றும் கூறப்படுகிறது. (மு. அருணாசலம்.,2009: 593) இங்ஙனமே சுந்தரர் தேவாரத்திற்கும் பண்கள் வகுக்கப்பட்டன.

### 5.3.1.4. சோழர்கால தேவரடியார்கள்

இராசராச சோழனின் ஆட்சியில் தேவாரப் பதிகங்களுக்குப் பண்கள் அமைத்ததுபோல, இசையிலும், கூத்திலும் வல்லுநரான பெண்கள் பலர் கோயில் பணிகளில் ஈடுபட்டிருந்தனர். கல்வெட்டுகளில் இவர் தேவரடியார்கள் என்று அழைக்கப்பட்டுள்ளனர். தேவரடியார்களுக்குத் தலைக்கோலிகள், தளிச்சேரிப் பெண்டுகள், பதியிலார், கோயிற்பிணாக்கள் என்றும் பெயர் வழங்கின எனக் கருதப்படுகிறது. (கே. கே. பிள்ளை.,2009: 336) சோழர் ஆட்சியில் இறையடிகள் மூலம் பக்தித்தொண்டும், தமிழ்ச் சிறப்பும் மலர்ந்தது.

### 5.3.1.4.1. தேவரடியார்களின் திருப்பணிகள்

இத்தேவரடியார்கள் கோயிலில் திருவலகிடுதலும், திருமெழுக்கிடுதலும், மலர் தொடுத்தலும் என்று தொண்டுகள் செய்துவந்துள்ளனர். தேவாரம், திருவாசகம் ஓதுவதும், நடனம் ஆடுவதும், அவர்கள் சிறப்பாக ஈடுபட்டிடுருந்த கலைத்தொண்டுகளாம் என்று கூறப்படுகிறது.

### 5.3.1.4.2. தேவரடியார்களின் வாழ்க்கை

இத்தேவரடியார்கள், இசை கூத்து என்பவை தவிர கல்வியிலும், கலைகளிலும் சிறந்த பயிற்சி மேற்கொண்டு விளங்கினர். இவர்கள் எல்லாக் கோவில் தலங்களிலும் தொண்டுசெய்து வந்துள்ளனர். மேலும் அவர்களின் பிழைப்புக்கென்று மானியங்கள் வழங்கப்பட்டுள்ளன. இவர்களுள் சிலர் திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்திவந்தனர் என்றும்

கல்வெட்டுகள் கூறுகின்றன எனவும் அறியமுடிகிறது. (கே. கே. பிள்ளை.,2009: 336) தேவரடியாரின் வாழ்க்கை இறைத்தொண்டுக்காகவே அர்ப்பணிக்கப்பட்டது.

**5.3.1.4.3. தேவரடியார்களின் தொண்டும் கூத்தும்**

சங்ககாலத்தில் விறலியரும், பாணரும் வளர்த்து வந்த இசையையும், கூத்தையும் தேவரடியார்கள் தொடர்ந்து வளர்த்து வந்தனர். மக்களின் நெஞ்சை அள்ளும் இசையிலும், கூத்திலும் வல்லுநராக விளங்கிய தேவரடியார்கள் மக்கள் சமூகத்தில் பெருமதிப்புப் பெற்றிருந்தனர். கோயில் நிருவாகிகளும் அவர்களைப் போற்றிப் பாராட்டி வந்தனர். இக்கலையரசிகளுள் பலர் திரண்ட செல்வத்தையும் மேலாம் செல்வாக்கையும் பெற்றிருந்தனர். கோயில்களுக்கும், கலைவளர்ச்சிக்கும் தேவரடியார்கள் நன்கொடைகள் வழங்கியுள்ளார்கள். மேலும் அவர்கள் பலவகையான கூத்துக்களை நிகழ்த்தியுள்ளனர். அவற்றுள் சாந்திக்கூத்து, ஆரியக்கூத்து, சாக்கைக்கூத்து, தமிழக்கூத்து, தெருக்கூத்து எனச் சில வகைகள் உண்டு. சில கூத்துகளில் பெண்களுடன் ஆண்களும் கலந்து கொள்வதுண்டு. கூத்தாடுபவர்களைக் கூத்தப்பெருமக்கள் என்று அழைத்தனர். (கே. கே. பிள்ளை.,2009: 337-338) இவர்கள் அக்காலங்களில் கோயில்களில் இறைவனைப் போற்றிப் பாடல்கள் பாடுவதிலும், தெய்வ சன்னிதானத்தில் இறைவனை எண்ணி ஆடுவதும், கோயிலின் சுற்றப்புறச் சூழலைத் தூய்மையாக வைத்துக்கொள்ளவதுமான தொண்டு புரிந்தனர். அவ்வகையில் இராசராசன் காலத்தில் கோயில்களில் மார்கழிதோறும் திருவெம்பாவை ஓதப்பட்டு வந்தது. இதற்காகவே தேவரடியார்கள் அமர்த்தப்பட்டிருந்தனர் என்பதும் பெறப்படுகிறது. (கே. கே. பிள்ளை.,2009: 338) இதேபோன்று கோயில்களில் ஆண்களும் தேவாரத் திருவாசகங்களை ஓதும் வழக்கம் கொண்டிருந்தனர். அவர்களுக்கு ஓதுவார் என்று பெயர் வழகங்கப்பட்டது. மேலும் இவர்களை திருப்பாட்டு ஓதும் மகேசுரர் என்றும் வழங்கினர். (கே. கே. பிள்ளை.,2009: 338) இப்பிடாரர்கள் உடுக்கை வாசித்தும், தாளம்தட்டியும் தேவாரப் பதிகங்கள் பாடுவதுண்டு என்னும் கே. கே. பிள்ளையின் கூற்றுக்கு ஏற்ப, இராசராச சோழனின் மெய்கீர்த்திகள், ஸ்ரீராசராசதேவர்க்கு யாண்டு 29ஆவது வரை ‘உடைவார் ஸ்ரீராசராசசேச்சுரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீராசராசதேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும், இவர்களிலே நிலையாய் உடுக்கை வாசிப்பவன் ஒருவனும், இவர்களிலே நிலையாய்க் கொட்டிமத்தளம் வாசிப்பான் ஒருவனும் ஆக ஐம்பதின்மர்க்குப் பேரால் நிசதம் நெல்லு முக்குறுனி நிவந்தமாய்…………” என்று கூறப்பட்டுள்ளது. (மு. அருணாசலம்.,2009: 594)

இதன்படி திருப்பதியம் விண்ணம் செய்பவர் 48 பேர்களின் பெயர்கள் வரிசையாகச் சொல்லப்பட்டுள்ளன என்று கருதுவது குறிப்பிடத்தக்கது.

கோயில்களில் தேவாரம் திருவாசகங்களை ஓதுவார் பிடாரர்கள் என்று வழங்கப்பட்டதும், அவர்களின் 48 பேருடன் உடுக்கை மற்றும் மத்தளம் வாசிப்பவர்கள் இருவரைச் சேர்த்து 50 பேருக்கு நிவந்தங்கள் வழங்கப்பட்டுள்ளது. இத்தகைய பிடாரர்களால் கோயில்களிலும், மடங்களிலும் வேதங்களும் உருத்திரமும் ஓதப்பட்டன. (கே. கே. பிள்ளை.,2009: 339) அவற்றை வீணையுடன் அத்தியயனம் செய்து வந்தார்கள் என்றும் கூறப்படுகிறது.

**5.3.1.5. இராசராசனின் இறைத்தொண்டும் இசைவளர்ச்சியும்**

தஞ்சை பெருவுடையார் கோயில் திருத்தொண்டுக்காக இராசராசன் நானூறு (400) தேவரடியார்களை அமர்த்தினான் என்றும், அவர்கள் அனைவருக்கும் தனித்தனி வீதிகள் வகுத்து அவற்றில் வரிசை வரிசையாக வீடுகள் அமைத்துக் கொடுத்தான் என்றும் தஞ்சைக் கோயில் கல்வெட்டு ஒன்று கூறுகின்றது. (கே. கே. பிள்ளை.,2009: 336) மேலும் சோழர் காலக் கட்டடக்கலை மிகவும் சிறப்புக்குரியது. அதில் தஞ்சை மாநகரானது உள்ளாலை என்றும், புறப்பாடி என்றும் இரு பிரிவுகளாக அமைந்திருந்தது. உள்ளாலையில் மன்னரின் அரண்மனைகளும் ஏனைய சில குடியிருப்புகளும் அமைந்திருந்தன என்றும் கூறப்படுகிறது.

அரண்மனைப் பணியாளருக்கெனச் சில பகுதிகளும் புறப்பாடியில் ஒதுக்கப்பட்டிருந்தன. புறப்பாடியில் அமைந்திருந்த தெருக்களில் சிறப்புற்றிருந்தவை காந்தர்வத்தெரு (இசைவல்லார் குடியிருப்பு) என்று கூறப்படுவதும் குறிப்பிடத்தக்கது. இதன்மூலம் இராசராசன் ஏற்படுத்தித் தந்த நானூறு வீடுகளின் தொகுப்பமைந்த தெருக்கள் ‘காந்தர்வத் தெரு’ என்று சிறப்பிக்கபட்டது. மேலும் இந்நானூறு வீடுகளில் தளிச்சேரிப் பெண்டுகள் என்று பெயர்வழங்கப்படும் தேவரடியார் பெண்கள் குடியமர்த்தப்பட்டனர். அவர்களுடைய பெயர்களும், அவர்களுடைய வீடுகளின் கதவு இலக்கமும் இராசராசன் கல்வெட்டு ஒன்றில் பொறிக்கப்பட்டுள்ளது. (கே. கே. பிள்ளை.,2009: 341) இராசராசன் இறைத் தொண்டினைச் செய்து வந்தான் என்று உணர்த்தப்படுகிறது.

**5.3.1.5.1. இராசராசன் கட்டிக்கொடுத்த வீடுகள்**

சோழ வரலாற்றில் இராசராசனின் ஆட்சிமுறை மிகவும் சிறப்பு வாய்ந்தது. கலை வளர்ச்சிக்கு மிக்க உதவி புரிந்தான் என்று வரலாறு உணர்த்துகிறது. இசையைப் போற்றும் விதமாகவும், சைவ சமயத்தை வளர்க்க எடுத்த முயற்சியும் என தேவார திருவாசகங்களைக்

கோயில்களில் ஓதும்படிச் செய்தான். அதன் தொடர்ச்சியாகக் கோயில்களில் தேவாரம் ஓதுவார் என்று பிடாரர்களை நியமித்ததும் மெய்க்கீர்த்தியில் குறிப்பிட்டுள்ளது. மேலும் கோயில்களில் நியமிக்கப்பட்ட தேவரடியார்கள் என்னும் தளிச்சேரிப் பெண்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுத்துள்ளான். தளிச்சேரிப் பெண்டுகள் 400 பேருக்குக் கோயில் நான்கு வீதிகளில் இருசரகுகளிலும் வீடுகட்டிக்கொடுத்துள்ளான். (மு. அருணசாலம்.,2009: 595) இவனது ஆட்சி காலத்தில் கட்டடக்கலையில் மிகுந்த ஒழுங்குமுறை விதிகள் பின்பற்றப்பட்டுள்ளன. அதாவது நகரங்களில் குடிமக்கள் வாழும் இடங்கள் வேறாகவும் அங்காடித் தெருக்கள் வேறாகவும் நிறுவப்பட்டிருந்தன. இன்ன இடத்தில் இன்ன வகையான வீடுகள்தாம் கட்டலாம் என்றும், இன்ன இடத்தில் இன்னவர்கள் இத்தனை மாடிகளுடன் தாம் வீடுகள் கட்டவேண்டும் என்றும், கட்டடங்கள் கட்டுவதற்குச் சுட்டசெங்கல்லைத்தான் பயன்படுத்த வேண்டும் என்றும் ஒழுங்குமுறை விதிகள் பிறப்பிக்கப்பட்டிருந்தன.

தஞ்சை மாநகரானது உள்ளாலை என்றும், புறப்பாடி என்று இரு பிரிவுகளாக அமைந்திருந்தது. உள்ளாலையில் மனனரின் அரண்மனையும், ஏனையசில குடியிருப்புகளும் இருந்தன. சாலியத் தெருவும் உள்ளாலையில் தான் இருந்தது. புறப்பாடியில் அங்காடித்தெருக்கள் இருந்தன. மேலும் அரண்மனைப் பணியாளருக்கெனச் சில பகுதிகளும் புறப்பாடியில் ஒதுக்கப்பட்டிருந்தன. அப்புறப்பாடியில் அமைந்திருந்த தெருக்களில் சிறப்புற்றிருந்தவை காந்தர்வத் தெரு (இசைவல்லார் குடியிருப்பு) என்று கூறப்படுகிறது. இதுவே இராசராசன் தளிச்சேரிப் பெண்டுளுக்காகக் கட்டிக்கொடுத்த வீடுகள் அமைந்த தெருக்கள் ஆகும். மேலும் இத்தெருக்கள் கிழக்கு மேற்காக அமைந்த இரண்டு தெருக்கள் ஆகும். அதில் 400 தளிச்சேரிப்பெண்டுகள் குடியமர்த்தப்பட்டிருந்தனர். அவர்கள் பெருவுடையார் கோயிலில் பணியில் அமர்த்தப்பட்டவர்கள் என்றும், அவர்களுடைய வீடுகள் கதவு இலக்கமும் முதலாம் இராசராசன் கல்வெட்டு ஒன்றில் காணக்கிடைக்கிறது என்றும் கருதப்படுகிறது. (கே. கே. பிள்ளை.,2009: 341)

சைவசமயம் தன்னை வளர்த்துக் கொண்ட முயற்சியில் இசையின் வளர்ச்சியும் சேர்ந்தே நடக்கலானது. சங்ககாலத்தை அடுத்து களப்பிரரின் ஆட்சியினால் தமிழகம் இருளில் மூழ்கினாலும், அறஇலக்கியங்களின் வாயிலாகவும், பௌத்த சமண சமயத்தவர் தம் கொள்கைகளைப் பரப்புவதற்காகவும் தமிழும் இசையும் பயன்பட்டதோடு, உயிரை நீட்டித்துக்கொண்டது என்று கூறலாம். மேலும் சோழர் ஆட்சியில் இசையின் வளர்ச்சி இறைவனுக்குச் செய்யும் தொண்டாகக் கருதப்பட்டதால், இடைவிடாமல் தன்னைக் காத்துக்

கொள்ள வாய்ப்பு ஏற்பட்டமையும் அறியமுடிகிறது. சைவசமய அடியவர்கள் மூலம் இசையும் தழைத்து இசையால் அடியவரும் இறைவனைக் காண விழைந்துள்ளனர். இராசராசன் இவ்இசை வல்லார்களுக்கென்று 400 வீடுகள் கட்டிக் கொடுத்தும், அவர்களுக்குப் பெருவுடையார் கோயிலில் இறைப்பணி அமர்த்தியும் இறைத்தொண்டு செய்தள்ளான். மேலும் அக்குடியிருப்புகள் அடங்கிய தெருக்களுக்குக் 'காந்தர்வத்தெரு' எனப் பெயர் வழங்கப்பட்டமையால் இசைக்கும், கலைவளர்ச்சிக்கும் சோழன் வழங்கிய பெருமதிப்பும் விளங்கி நிற்கிறது. எனவே சங்ககாலத்தில் மன்னரைப் புகழ்ந்து பரிசில் பெற்று வாழ்ந்த பாணரின் நிலைமாறி, இறைவனைப் போற்றி அருளைப் பரிசாகப் பெற்றனர் என்பது புலப்படுகிறது.

**5.3.2. வைணவம் வளர்த்த இசை**

சங்ககாலத்தை அடுத்து களப்பிரர் ஆட்சியால் தமிழகம் இருள் சூழ்ந்து இருந்தது. சமண பௌத்த சமயங்களின் வேரூன்றலால், தம் நிலையிற் சரிந்துபோயிருந்த சைவ, வைணவ சமயங்கள் பல்லவ, சோழர்களின் ஆட்சி காலத்தில் மெல்ல மெல்ல தழைக்கத் தொடங்கின. பின்னர் தமிழகத்தில் சைவ சமயத்தைப் போல வைணவமும் வீறுகொண்டு எழுந்தது. இரண்டாம் நந்திவர்மன் காஞ்சிபுரத்தில் வைகுண்டப் பெருமாள் கோயில், பரமேசுர விண்ணகரத்து கோயில், மதங்கேசுரர் கோயில் ஆகியவற்றை எழுப்பினான். நந்திவர்மன் காலத்தில் வாழ்ந்தவர் திருமங்கையாழ்வார். இவருடைய பாசுரங்கள் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தில் 'பெரிய திருமொழி' என்னும் பெயரில் இரண்டாம் ஆயிரமாகத் தொகுக்கப்பட்டுள்ளன. திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்கள் முழுமைக்கும் பண்களும் தாளங்களும் வகுக்கப்பட்டிருந்தன என்று வரலாறு கூறுகிறது. (கே. கே. பிள்ளை.,2009: 231) வைணவர் இவ்வாறு தம் இறைத் தொண்டின் மூலம் இசையை வளர்த்தனர் என்று அறியமுடிகிறது.

**5.3.2.1. நாலாயிரம் விளக்கம்**

வைணவ சமய பக்தி இலக்கியங்களில் முதன்மையானது 'நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்' ஆகும். இதனை நாதமுனிகள் தொகுத்தளித்தார். இந்நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தை நான்கு ஆயிரமாகப் பகுத்துள்ளனர் ஆழ்வார்கள். முதலாயிரத்தில் பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகரப்பெருமாள், திருமழிசையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாண்ஆழ்வார், மதுரகவியாழ்வார் ஆகியவர்களின் பாடல்கள் அடங்கியுள்ளன.

இவ்வாயிரத்துக்குத் ‘திருமொழி’ என்று பெயர். இரண்டாம் ஆயிரத்தில் திருமங்கையாழ்வாரின் பாசுரஙங்கள் மட்டும் தொகுக்கப்பட்டுளள்ளன. இவ்வாயிரத்துக்குப் ‘பெரிய திருமொழி’ என்று பெயர். மூன்றாம் ஆயிரத்தில் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியவர்களின் பாடல்களுடன் திருமழிசை யாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், ஆகியவர்களுடைய பாடல்கள் சிலவும் சேர்ந்துள்ளன. இவ்வாயிரத்துக்கு ‘இயற்பா’ என்று பெயர். நான்காம் ஆயிரத்தில் சேர்க்கப்பட்டுள்ள பாசுரங்கள் யாவும் நம்மாழ்வார் அருளியவை. இவ்வாயிரத்துக்குத் ‘திருவாய் மொழி’ என்று பெயர். (கே.கே.பிள்ளை.,2009: 232) நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் இங்ஙனம் நான்கு (ஆயிரங்களாகப்) ஆயிரப் பாசுரங்களாகப் பகுத்துத் தொகுக்கப்பட்டதால், நாலாயிரம் எனப்பெயர் பெற்றது புலனாகிறது.

### 5.3.2.2. திருப்பாணாழ்வார்

வைணவ ஆழ்வார்கள் பன்னிருவருள் திருப்பாணாழ்வாரும் ஒருவர். இவர் பாணர் குலத்தில் தோன்றியவர். இவரது காலமாகக் கி.பி 500ஆம் ஆண்டு முதல் கி.பி 800 ஆம் ஆண்டு வரையிலான ஒரு கால அளவில் வாழ்ந்தவர்கள் எனக் கருதுகின்றனர். (கே. கே. பிள்ளை.,2009: 232) இத்திருப்பாணாழ்வாரின் பாசுரங்கள் முதலாமாயிரத்துள் தொகுக்கப்பட்டுள்ளன. அதற்குத் ‘திருமொழி’ என்று பெயர் வழங்கப்படுகிறது.

சங்ககாலப் பாணர் மரபிற் தோன்றியவர்கள் பிற்காலத்தில் மன்னரைப் புகழும் வாய்ப்பு கிடைத்தவர்களாகத் தெரியப்படவில்லை. காரணம் களப்பிரர் ஆட்சியில் தமிழகம் சிர்குலைந்து போனது. புரக்கின்ற வள்ளல்கள் இன்றிப் பாணர் குலம் தடுமாறித் தத்தளித்தது. அவர்கள் வயிற்று பிழைப்புக்காக வேறு வேறு தொழில்களில் ஈடுபடலாயினர். அவ்வாறு வேறுவேறு ஊர்களுக்குச் சென்று தம் வாழ்வாதாரத்தைத் தேடிக்கொண்டவர்களுள் சோழநாட்டுக்குச் சென்று உறையூரில் வாழ்ந்தவர் சிலர். அவர்களுள் ஒருவர் திருவரங்கநாதருக்கு அடிமைபூண்டு வாழ்ந்தார். அவர் ஒருநாள் தம் மனைவியுடன் நெல்வயல்களின் வழியே போய்க் கொண்டிருந்தபோது பயிர்களுக்கிடையில் ஒரு குழந்தையைக் கண்டு எடுத்துப் பகவான் அருள் எனக்கருதி வளர்த்தனர். இவர் திருமாலின் ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய் பூமியில் தோன்றினார் என்பது வைணவர் கருத்து. இக்குழந்தையே திருப்பாணாழ்வாராகப் பெயர் பெற்று விளங்கியது.

திருப்பாணாழ்வார் பாணர் குலத்தைச் சார்ந்தவர் ஆதலால் அவர் காவிரி ஆற்றின் தென்கரையில் நின்றபடியே திருவரங்கநாதனுக்கு யாழால் இசைமீட்டித் தன்

இறைத்தொண்டினை ஆற்றிவந்தார். அப்போது லோகசாரங்க முனிவர் என்பவர் பெருமாளுக்குத் திருமஞ்சனத்திற்காக நீரெடுக்க ஆற்றுக்கு வந்தார். அப்போது பாணர் அங்கே நிற்பதைக் கண்ட அம்முனிவர் அவரை விலகிச் செல்லும்படி சைகையில் (கைச்சாடையால்) உணர்த்தினார். ஆனால் இவற்றை உணரமுடியாத நிலையில் இறைவனை எண்ணி மூழ்கித் திழைத்திருந்த பாணர் விலகவில்லை. தவறாக உணர்ந்த முனிவரோ அவர் மீது கல்லை எறிந்தார். உடனே சுயத்தை உணர்ந்த பாணர் தன் தவறுணர்ந்து விலகினார். மீண்டு சென்ற லோகசாரங்கமுனிக்கு அதிர்ச்சி, இறைவனின் நெற்றியில் காயம் ஏற்பட்டு இரத்தம் வழிந்தது. (மு. அருணாசலம்.,2009: 587)

பின்னர் பாணரின் பக்தி உணர்ந்து, இறைவனின் கட்டளையால், தன் தோள் மீது சுமந்து வரப்பட்டார் பாணர். கோயிலுள் சென்று இறைவனை பாதாதிகேசமாகப் பாடித்துதித்தார். அதுவே பத்து பாசுரங்கள் கொண்ட பதிகமாக விளங்குகிறது. அப்பாசுரமானது ‘அமலனாதி பிரான்’ என்று பெயர் பெற்றது. பின்னர் அரங்கனின் அருளால் அவனுள் இரண்டறக் கலந்தார் (மு. அருணாசலம்.,2009: 588-589) வைணவ சமயத்து ஆழ்வார்களுள் ஒருவர் பாணர் மரபிற் தோன்றியவர். இவரும் யாழில் பண்ணிசைத்துப் பாசுரங்கள் பாடியுள்ளார். இசையால் இறைத்தொண்டு புரிந்து இறைவனுடன் கலந்தார். பக்திஇயக்கக் காலத்தில் பாணர் இறைவனைப் போற்றித் துதித்து வந்துள்ளனர். சங்ககாலத்தில் மன்னர்களின் அருகாமையில் இருக்கும் பேறுபெற்ற பாண்மரபினர் அதனை அடுத்து சாதிய அடிப்படையில் பின்னுக்குத் தள்ளப்பட்டனர்.

திருப்பாணழ்வாரும், திருநீலகண்ட யாழ்ப்பாணரும், பாணபத்திரரும் ஆலயங்களுக்குள் செல்லாது, கோயிலின் புறத்தே நின்று யாழிசைத்துப் பாடியமையால் அவர்கள் இழிகுலத்தவராகக் கருதப்பட்டமையை உணர்த்துகிறது. இச்சூழலில் இராசராசன் காலத்தில் இவர்களின் மதிப்பு சற்று உயர்ந்துள்ளது எனபதை, இராசராசனின் இறைத்தொண்டும், அவன் வீடுகள் கட்டித் தந்துள்ளமையும் தெரிவிக்கின்றன. இருப்பினும் சங்ககாலத்தில் மிகப்பெரும் பெயர் பெற்ற பாண்மரபினர், அதனை அடுத்துக் காலமாற்றங்களின் விளைவால் பின்னுக்குத் தள்ளப்பட்டுள்ளனர். மேலும் அவர்கள் வருணாசிரமக் கொள்கையின் படி தாழ்ந்த வகுப்பினராக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**5.4. கால மாற்றங்களில் பாணரின் இன்றையநிலை**

சங்ககாலத்தில் மன்னர்களுடனும், வள்ளல்களுடன் இணக்கமானவர்களாகக் காணப்பட்ட பாண்மரபினர், பிற்காலத்தில் அந்நிலையிலிருந்து விலகிக் காணப்பட்ட

நிலையைப் பக்தி இலக்கியங்களும், அவ்இயக்கங்கள் சார்ந்த பாணரின் வாழ்க்கையும் அறிவிக்கின்றன. சங்ககாலத்தை அடுத்துக் களப்பிரர் ஆட்சியின் விளைவால் தமிழகம் எண்ணற்ற மாற்றங்களை கண்டது. அதனால் வறுமையின் பிடியில் சிக்குண்ட பாண்மரபினர் அதனைப் போக்கிக்கொள்ள வேறுவேறு வழிகளை நாடிச் சென்றனர். காலப்போக்கில் இம்மரபினர் அருகினர். மக்களுடன் மக்களாகக் கலந்தனர். பல்வேறு பணிகளைச் செய்து தம் வறுமையைப் போக்க முனைந்தனர். பின்னர் தம் வயிற்றுப் பிழைப்புக்காகச் செய்து வந்த தொழிலையேத் தங்கள் தொழிலாக மேற்கொள்ளும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். சோழரின் ஆட்சியின்போது முதலாம் இராசராசன் செய்த பெருமுயற்சியின் விளைவு, தேவாரத் திருவாசகங்களுக்கு பண்ணமைத்தது ஆகும். இதன்காரணமாக மறைந்துபோன பண்களை மீண்டும் உயிர்த்தெழச் செய்தனர். அவ்வாறு பண்களை உயிர்த்தெழச் செய்தபோது திருநீலகண்ட யாழ்ப்பாணரின் வழிவந்தவரை மீண்டும் தமிழ்ச் சமூகம் தேடிக்கண்டெடுத்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இருப்பினும் அவர்களின் தலைமுறையும் நிலைபெறவில்லை.

இவ்வாறெல்லாம் கடந்து வந்த பாண்மரபினர் தற்போது தமிழகத்தில் பாணர் என்றும், பாண்டிய வேளாளர் என்றும் சாதியப் பெயர்களால் அழைக்கப்பட்டு வருகின்றனர். இவர்களுக்குப் பிள்ளை என்ற சாதியப் பெயரும் வழங்கப்படுகிறது. இப்பாணரின் இன்றைக்காலத் தொழில் என்பது பெரும்பாலும் தையல் தொழில் என்பதும் பெறப்படுகிறது.

**5.4.1. இன்றைய பாணரின் மக்கள்தொகை**

தமிழகத்தில் தற்போது பாணர் என்போர் கோவில்பட்டி, தூத்துக்குடி, திருநெல்வேலி, இராமநாதபுரம், திருச்சி, மதுரை, விருதுநகர், சென்னை போன்ற மாவட்டங்களில் வாழ்ந்து வருகின்றனர். தமிழகம் முழுதும் பரவலாக வாழ்ந்துவரும் இப்பாணர் சுமார் ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் பேர் உள்ளனர் என்று கூறுகின்றன. (அவ்வையார் மணி.,15.02.2017) இன்றைய தமிழகத்தில் பாணரின் சமூகம் நீரின் சில துளிகளைப்போலக் காணப்படுகின்றன.

**5.4.2. மறந்த கலையும் வளர்ந்த கலையும்**

பாணர் சங்ககாலத்தில் பண்ணாலும் பாட்டாலும் நிலைபெற்று விளங்கினர். அப்பண்ணும் பாட்டுமே அவர்களை பெயர்பெற்று விளங்கச் செய்தது. அவர்களுக்கென்று ஒரு தனித்த அடையாளத்தையும் கொடுத்தது. பாட்டாலும், யாழிசையாலும் பெயர்விளங்கப் பெற்ற பாணர் காலப்போக்கில் அக்கலைகளை முற்றிலுமாக மறந்துபோனதும் குறிப்பிடத்தக்கது. சங்ககாலத்தில் இவர்களின் கைகளில் ததும்பிய இசை எனும் கலை இன்று

கேள்விக்குறியாக நிற்கிறது. பாணர் தம் இசைக்கலையை மறந்துவிட்டனர் என்பதே இன்றைய நிலை. ஆனால் அதேவேளையில் இப்பாணர் தம் இசைக்கலையை மறந்தபோதிலும் தற்போது தையற்கலையைக் கற்றுக்கொண்டுள்ளனர். இன்று இவர்களின் பிரதான தொழிலாகத் தையற்தொழில் விளங்குகிறது. (அவ்வையார் மணி.,15.02.2017) தையல் தொழிலையே அவர்கள் தம் குலத்தொழிலாகக் கருதுகின்றனர் என்பது இன்றியமையாததாக அமைகின்றது.

### 5.4.3. தேர்த் தொழிலில் தையல்

இன்று பாணர் என்போர் குறிப்பாகத் தையற் தொழில் செய்து வருகின்றனர். அதில் இவர்கள் தேரின் அலங்காரத்திற்கான துணிவகைகளைத் தைப்பதில் சிறந்து விளங்குகின்றனர். மற்றும் கோயில் திருவுருவச் சிலைகளுக்கும் ஆடை வகைகள் தைத்துக் கொடுப்பதையும் வழக்கமாகக் கொண்டுள்ளனர். இவ்வாறு இவர்கள் தேர்த்தொழில் செய்து வருவதால் இவர்களுக்கு ‘மேஸ்திரி’ என்று சிறப்புப் பெயர் வழங்கப்படுகிறது.

பாணர் தமது தொழிலான இசைபாடுதலும், யாழ்வாசிப்பதிலும் இருந்து கொஞ்சம் கொஞ்சமாக ஒதுங்கி, பக்தியின் மேலீட்டால் அக்கோயிலின் தேர், பல்லக்கு, குடை முதலிய அலங்காரப் பணியில் ஈடுபட்டதுடன், இறைவனுக்கு ஆடை ஆபரணங்கள் தைப்பதிலும் தன் காலத்தைச் செலவிட்டு வறுமையில் உழன்றனர் என்று பாணர் சமூக மாநில மாநாட்டின் சிறப்புமலர் கட்டுரைச் செய்தியானது உறுதிப்படுத்துகிறது. (ஏ. கே. பாபு.(ஆசி).,2007: 5) இசைக்கலையை மறந்தாலும் இன்று பாணர் பெரும்பாலும் தையற்கலையை அறிந்தவர்களாகக் காணப்படுகின்றனர்.

### 5.4.4. தாய்வழிக்கிளை உறவுமுறை

இன்றளவும் பாணர் என்று வழங்கப்படுவோர் தம் உறவு முறையில் ‘கிளை’ என்னும் முறைமையைக் கொண்டுள்ளனர். இக்கிளையானது அவர்களின் ‘தாய்வழிக்கிளை’ என்று கூறப்படுகிறது. தாய்வழிச் சமூகம் என்பது ஆரம்பகால மனித சமூகம் கொண்டிருந்த முறைமை. இந்நிலை இன்று தமிழ் மக்களுள் பெரும்பான்மையும் மாறித் தந்தை வழிச் சமூகமாக நிலைகொண்டுள்ளது. ஆனால் இப்பாணர் சமூகத்தில் இன்றளவும் ‘தாய்வழிக்கிளை’யைக் கொண்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. அவையாவன, 1. மதிக்கினியன், 2. செம்பிறாந்தன், 3. சடகோபவல்லான், 4. குறுந்தன்நரசிம்மன், 5. ஊர்ச்சூழ்ந்தான் சந்நியாசி, 6. மருவியகோவிந்தன் சந்நியாசி, 7. பழமை பண்டாரம் 8. வல்லகடசல், 9. வளர்இலசன் உமாநாதன், 10. வெள்ளச்சி, 11. தனக்குருளகத்தி, 12.

பிராந்தனருள், 13. கொண்டமார்த்தாண்டன், 14. பெரியகளக்காடு, 15. வீரவநல்லூர், 16. இடகால், 17. அய்யநாகால், 18. உய்யகொண்டான் என்று வழங்கப்படுகின்றன. (ஏ. கே. பாபு.(ஆசி).,2007: 76) இப்பதினெட்டு கிளைகளுள் சில ஆண், பெண் பெயர்களைப் போன்றும், சில ஊர்பெயர்களைப் போன்றும் காணப்படுகிறது. இவ்ஊர்ப் பெயர்களைப் போன்று காணப்படும் 'கிளைகள்' அவ்வவ் ஊர்களில் அக்கிளையினர் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். மேலும் இவர்களில் சைவ வழிபாடு கொண்டவர்களும் உள்ளனர். வைணவ வழிபாடு கொண்டவர்களும் உள்ளனர். இக்கிளைகளுள் சகோதரக் கிளைகளும் உண்டு. சம்பந்தக் கிளைகளும் உண்டு என்று கூறுகின்றனர். சமபந்தக் கிளைகள் மட்டுமே தங்களுக்குள் பெண் எடுக்கவும் கொடுக்கவும் செய்வர் என்றும் குறிப்பிடுகின்றனர். இத்தாய்வழிக் கிளை மூலமாகவே இவர்கள் திருமண உறவும் ஏற்படுத்திக்கொண்டுள்ளனர். (அவ்வையார் மணி., 15.02.2017)

உதாரணமாக, ஒரு பெண் தன் தாய்மாமன் மகனுக்கு வாழ்க்கைப்பட முடியாதபோது, (அதாவது அப்பெண் வயதில் மூத்தவராகவும் தாய்மாமன் மகன் வயதில் இளையவராகவும் இருந்தால்) அப்பெண்ணை வேறு மாப்பிள்ளைக்குத் திருமணம் செய்து கொடுப்பர். அப்பெண்ணுக்குப் பிறக்கும் பெண் குழந்தையை அவளுடைய (முன்னர் கூறிய) தாய்மாமன் மகனுக்கே திருமணம் செய்விக்கும் வழக்கம் முன்பு இவர்களிடம் இருந்து வந்துள்ளது. ஆனால் தற்போது இவ்வழக்கம் சமூகத்தில் விநோதமாகப் பார்க்கப்படுவதால் அதனை நடைமுறைப்படுத்துவதில்லை என்றும் கூறப்படுகிறது. இவ்உறவு முறை ''மச்சினியைத் திருமணம் செய்யவில்லை என்றால் மச்சினி வயிற்று மகளைத் திருமணம் செய்'' என்னும் சொலவடையோடு ஒத்துப்போகிறது. இச்சொலவடை இவ்உறவுமுறை கொண்டே உருவாகியிருக்கக்கூடும் என்பதும் குறிப்பிடத்தக்கது.

### 5.4.5. இன்றைய பாணர் சங்கமும் செயல்பாடும்

இன்றைய பாணர் சங்கம் என்பது திருச்சியைத் தலைமையகமாகக் கொண்டு செயல்படுகிறது. இச்சங்கத்தின் வாயிலாகப் பாணர் தமது சமூகத்தாரை ஒருங்கிணைத்துச் சமூக வளர்ச்சியை ஏற்படுத்தும் நோக்கில் செயல்படுகின்றனர். இவர்கள் இச்சங்கம் மூலம் தமிழக அரசிடம் பல கோரிக்கைகளையும் முன்வைத்துள்ளனர். அதாவது பாணர் என்போர் தமிழக அரசின் சாதியப் பிரிவில் தாழ்த்தப்பட்டவர்களாகக் கருதப்பட்டுள்ளனர். ஆனால் இந்நிலை 1958க்குப் பிறகு முற்றிலுமாக மாற்றம் கண்டுள்ளது.

1921ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் படி அதன் அறிக்கையில் மொத்தம் 88 சாதிகள் கொண்டதாகத் தமிழகம் இருந்துள்ளது. பின்னர் 1931ஆம் ஆண்டில் அது 31ஆகக் கொள்ளப்பட்டு அதில் சில சாதிகள் விடப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து மக்கள் தொகைக் கணக்கெடுப்புத் துறையின் தலைமை ஆணையர் வகுத்த வழியால் ‘செடியூல்டு’ வகுப்பினர் பட்டியலும், பிற்படுத்தப்பட்டோர் வகுப்பினர் பட்டியலும் உருவாக்கப்பட்டது. இதன்படி வருணாசிரம முறைப்படி கூறப்பட்டுள்ள சாதியினரைத் தவிர்த்து மற்றயாவரும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் (செடியூல்டு) என்று குறிப்பிடப்பட்டனர். 1950ஆம் ஆண்டு தமிழக அரசின் உத்தரவுப்படி (vide G.O. Ms No. 202 Rural Welfare dated 1.9.50 issued under article 341C11 of the constitution Ministry of law notification dated 10.8.50) இப்பாணர் சமூகத்தினர் தொடர்ந்து மாநிலம் முழுவதும் எந்தத் தடையுமின்றி 1958ஆம் ஆண்டு வரை தாழ்த்தப்பட்டோருக்கான அரசின் அனைத்துச் சலுகைகளையும் அனுபவித்து வந்ததாகக் கருதப்படுகிறது. பின்னர் 1958ஆம் ஆண்டு இந்தச் சலுகை நீக்கப்பட்டது. பின் மீண்டும் தமிழக அரசின் உத்தரவுப்படி (vide G.O.Ms No.437 social welfare dated 15.5.1972) கன்னியாகுமரி மாவட்டமும் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள செங்கோட்டை தாலுகாவிலும் உள்ள பாணர் சமூகத்தினர் மட்டும் சாதிய அடிப்படையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினராகக் கருதப்படுகின்றனர். மற்ற அனைத்து மாவட்டங்களிலும் இப்பாணர் பிற்படுத்தப்பட்ட வகுப்பினராக இன்றுவரை கருதப்படுவதும் குறிப்பிடத்தக்கது. (ஏ. கே. பாபு.(ஆசி)., 2007: 6) இத்தகைய வகுப்புப் பிரிவில் ஏற்பட்ட ஏற்றத் தாழ்வினைச் சரிசெய்ய வேண்டி இவர்கள் தொடர்ந்து தங்களின் கோரிக்கைகளைத் தமிழக அரசுக்கு முன்வைத்து வருகின்றனர்.

பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் பிரிவில் பாணரைச் சேர்த்தமையால், அவர்களுக்குக் கிடைத்துக் கொண்டிருந்த அரசின் சலுகைகள் அனைத்தும் கிடைக்காமற்போனது என்றும் கூறுகின்றனர். எனவே இவர்கள் தங்களை மீண்டும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பட்டியலில் சேர்க்கக்கோரி அன்றைய முதலமைச்சர். எம். ஜி. இராமசந்திரனிடத்தில் விண்ணப்பம் செய்துள்ளனர். இவ்வாறு இவர்களின் சமுதாயச் சங்கம் தங்களுக்கான தேவைகளைக் கருதிச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. மேலும் இச்சங்கத்தின் மூலம் கோயில் திருவிழாக்கள், தங்கள் சமூகத்து வளரும் தலைமுறையினரின் கல்வி ஊக்கத்தொகை போன்ற நற்காரியங்களும் செய்து வருவதாகக் கூறப்படுகிறது.

5.4.6. வழிபாட்டிலுள்ள கோயில்கள்

இன்றைய பாணரின் வழிபாட்டுக் கோயில்களாகப் பின்வரும் திருகோயில்கள் காணப்படுகின்றன.

தூத்துக்குடி – அருள்மிகு ஸ்ரீ உச்சினி மாகாளி அம்மன் திருக்கோயில்.

தூத்துக்குடி – தட்டப்பாறை - ஸ்ரீபுளியடி சாஸ்தா திருக்கோயில்.

திருநெல்வேலி - கூலக்கடைத் தெரு – அருள்மிகு ஸ்ரீ உச்சினிமாகாளி அம்மன் திருக்கோயில்.

திருநெல்வேலி – அருள்மிகு சந்தனமாரியம்மன் திருக்கோயில்.

திருநெல்வேலி – பள்ளக்கால் - ஸ்ரீ காமாட்சிஅம்மன் திருக்கோயில்.

திருநெல்வேலி – சித்தூர் - மகாராஜேஸ்வரர் திருக்கோயில்.

திருநெல்வேலி - இட்டமொழி - இலங்காமணி சாஸ்தா திருக்கோயில்.

பாளையங்கோட்டை – திருநீலகண்ட விநாயகர் திருக்கோயில்.

பாளையங்கோட்டை – அருள்மிகு ஸ்ரீ உச்சினிமாகாளி அம்மன் திருக்கோயில்.

கோவில்பட்டி – சிதம்பரப்பட்டி – சித்தூர் தென்கரை மகாராஜேஸ்வரர் திருக்கோயில்.

கோவில்பட்டி - ஸ்ரீ செண்பகவல்லி அம்மன் திருக்கோயில்.

கோவில்பட்டியிலிருந்து கழுகுமலை செல்லும் வழியில் வாரைமுட்டியில் உள்ள கிளிக்கூட்டு கருப்பசாமி திருக்கோயில்.

நாகர்கோயில் - ஸ்ரீ உச்சினிமாகாளி அம்மன் திருக்கோயில்.

மதுரை – தெற்குவெளிவீதி – மாரியம்மன் திருக்கோயில்.

திருச்சி - ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்.

திருச்சி – திரௌபதி அம்மன் திருக்கோயில்.

திருச்சி – அங்காளம்மன் திருக்கோயில்.

தென்காசி, செங்கோட்டை, நயினாகரம் பகுதியில் உள்ள குற்றாலம் - நங்கை அம்மன் கோயில்.

வத்திராயிருப்பு – நல்லதங்காள் திருக்கோயில் போன்றவை பாணர் சமூகத்தின் வழிபாடு செய்யும் கோயில்களாக விளங்குகின்றன. (ஏ. கே. பாபு.(ஆசி).,2007: 37) இக்கோயில்களுள்,

மகாராஜேஸ்வரர் கோயிலானது இவர்களின் முன்னோர்களால் சிதம்பரப்பட்டியில் ஏற்படுத்தப்பட்டதாகக் குறிப்பிடுகின்றனர்.

**5.5. பாணர் வரையறை**

பாணர் என்போர் சங்ககாலத்தில் சாதியப் பிரிவுகளில் தாழ்த்தப்பட்டவராகக் குறிப்பிடப்படவில்லை, எனினும் அவர்கள் வறுமைக்குள் சிக்குண்டவர்களாகவும், பிறரை அண்டி, வாழ்ந்தவராகவும் விளங்கினர். ஆனால் அந்நிலைமாறிக் காலமாற்றங்களால் தொழில்களை மையமிட்டதாக இன்று பாணரின் வாழ்க்கை மாற்றம் கொண்டது. ஏனென்றால், அரவனைப்போர் யாருமற்ற சூழல் உருவானதால், இவர்கள் உடல் உழைப்பையும், கைத்தொழிலையும் அண்டி வாழ முற்பட்டனர் என்பது அறியப்படுகிறது. பின்னர் காலப்போக்கில் தமது கலையுணர்வினையே இழந்துபோகும் நிலைக்கு ஆட்பட்டனர். இதனைத் தொடர்ந்து முதலாம் இராசராசன் செய்த அளப்பரிய தொண்டால், இசையும், இசைக் கலைஞர்ளும், ஆடற்கலைஞர்களும் சற்றே நிம்மதிகொண்டு வாழும் நிலை ஏற்பட்டது. எனினும் அந்நிலையும் நிலைக்கவில்லை.

இவ்வாறாகக் காலமாற்றங்களில் சிக்குண்ட இப்பாணர் இன்று தமிழகத்தில் பரவலாக வாழ்ந்து வந்தாலும், பெரிய மக்கள் தொகையினராகக் காணப்படவில்லை. தமிழகம் முழுமையுமே இவர்கள் ஒன்றரை லட்சம் பேருக்கும் குறைவாகத்தான் இருப்பர் என்று கூறப்படுகிறது. இதற்கிடையில் இவர்களுள் ஏற்பட்ட வகுப்புப்பிரிவில் காணப்படும் ஏற்றத்தாழ்வும் இவர்களை ஒருங்கிணைக்க இயலாத நிலையை உருவாக்கியுள்ளது. இக்குறைந்த மக்களினமே இவர்களின் கோரிக்கைகள் நிறைவேறாது போவதற்குக் காரணமாக இருக்கக்கூடும் என்பது குறிப்பிடத்தக்கது.

அதுமட்டுமல்லாது இவர்கள் தங்களை ‘பிள்ளை’ என்றும் ‘பாண்டிய வேளாளர்’ என்றும் கூறிக்கொள்வதும் ஒரு காரணமாக அமைகிறது. இவ்வாறு இவர்கள் தங்களைத் தலைமுறை தலைமுறையாகப் ‘பிள்ளை’ என்றே தம் சாதியப் பெயராகத் தெரிவித்துக் கொள்கின்றனர். இதன் பொருட்டு இவர்கள் தம்மைத் தாழ்த்தப்பட்ட வகுப்பினராகக் கருதவேண்டும் என்று அரசுக்கு முன் வைக்கின்ற கோரிக்கையால், பிள்ளை என்று வழங்கும் மற்ற பிரிவினருக்கும் இடையூறு விளைவிக்க நேரிடும் சூழல் உருவாக வாய்ப்புள்ளது.

இவர்களுள் பெரும்பாண்மையானோர் தம்மை சாதிய அடிப்படையில் தாழ்த்திக் கொள்ளப் பெரிதும் விரும்புவதில்லை. சமூகத்தில் மற்ற உயர்தர வகுப்பினரோடு நிகராகக் கருதுகின்ற, மதிக்கப்படுகின்ற சூழலில், திடீரென்று தம்மை தாழ்த்திக்கொள்ள சிலர்

விரும்பவில்லை. இருப்பினும் அரசின் பல்வேறு நலத்திட்டங்களும், சலுகைகளும் கிடைக்காமற் போவதற்குக் காரணமாக விளங்கும் பிற்படுத்தப்பட்ட வகுப்பு எனும் சாதிய வகுப்பினை இவர்கள் மாற்ற முயற்சிக்கின்றனர் என்பதும் இன்றியமையாதது.

ஆரம்பகாலம் தொட்டு பாணர் தாழ்ந்த குலத்தவரே என்று கூறப் பல சான்றுகள் இருந்தபோதிலும், இன்று இப்பாணர் தம் உண்மையான உழைப்பால் கல்வியிலும், பொருளாதாரத்திலும் சற்று முன்னேற்றம் கொண்ட மிதமான போக்கினைக் கொண்டுள்ளனர். ஆயினும் சிலர் இந்நிலையிலிருந்து மாறித் தாமும் சமூகத்தில் உயர்ந்த இடத்தை வகிக்க வேண்டும் என்ற முனைப்புள்ளவர்களாகவும் விளங்குகின்றனர். சாதியப் பெயரால் தாழ்த்தப்பட்ட நிலையிலிருந்து வெளியே வரவேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்களாகவும் இவர்கள் காணப்படுகின்றனர்.

“**கீழ்ப்பா லொருவன் கற்பின்**

**மேற்பா லொருவது மவன் கட்படுமே**” (புறம்.பா.எ: 183.,வ.எ்: 9-10)

என்ற வரிகளுக்கு ஏற்ப இன்றைய பாணர் தம் உழைப்பினை மூலதனமாகக் கொண்டு, தமது சந்ததியினரைக் கல்வியில் சிறந்தவர்களாக உருவாக்கி வருகின்றனர். இக்கல்வியால் தமது வறுமையும், வாட்டமும் துரத்தப்படும் என்று நம்பிக்கையோடு வாழ்ந்து வருகின்றனர் என்பது பெறப்படுகிறது.

**5.6. முடிவுரை**

சங்ககாலத்தில் பாணர் பாட்டுத்திறத்தால் உச்சநிலையைப் பெற்றிருந்தனர். மன்னர்களுடனும், வள்ளல்களுடனும் நல்ல நட்புறவுடன் வாழ்ந்தனர். போர்க்களத்திலும் அவர்களின் பங்கு முக்கியமானதாகிறது.

சங்ககாலத்துப் பாணர் மக்களுடனும் மிக்க நெருக்கமானவர்களாகக் காணப்பட்டனர். அதனை அடுத்த காலகட்டத்தில் தமிழகத்தில் ஏற்பட்ட அரசியல் சூறாவளியால் பாணரின் வாழ்க்கை நிலைதடுமாறி வேறு வடிவம் கொண்டது.

பின்னர் பக்தி எனும் இறைநம்பிக்கை பாணரின் இசையை உயிர்த்தெழச் செய்தது. மன்னனைப் போற்றிய நிலைமாறி இறைவனைப் போற்றுபவராக மாறினர். எனினும், சோழர் ஆட்சியில் இவர்களுக்கென்று உயர்ந்த மதிப்பு வழங்கப்பட்டது.

எருக்கத்தம் புலியூர் நங்கையைக் கண்டெடுத்தது இராசராச சோழனுக்கு மட்டுமல்லாது இலக்கிய உலகிற்கும், இசை உலகிற்கும் கிடைத்த பேறு எனலாம். இராசராசனின் இறைத்தொண்டு இசைவானர்ளைப் புத்துயிர் பெறச்செய்தது.

சங்ககாலம் தொடங்கி இன்றுவரை பாணர் பல்வேறு மாற்றங்களுக்கு உட்படுத்தப்பட்டனர். கால மாற்றங்களால் அவர்கள் தம்மை ஒவ்வொரு முறையும் கல்லைச் செதுக்கும் உளியைப் போலத் தம்மைத் தாமே செதுக்கிக் கொண்டு இன்று நிலைபெற்றுள்ளனர். இவர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் என்ற நிலையை இப்பொழுது இச்சமூகம் மறந்து போயிற்று. அதேவேளையில் இவர்களுக்கு சமூகத்தில் பிறரைப்போன்ற நல்ல மதிப்பும் மரியாதையும் கிடைக்கின்ற நிலையும் உருவாகியுள்ளது.

மக்களுடன் மக்களாகவே கலந்துவிட்ட இவர்கள் திடீரென்று தம்மை சாதிய அடிப்படையில் தாழ்த்திக் கொள்வது என்பது சற்று சிரமமான காரியமாகத் தென்படுவதும் உண்மை. எனவே சங்ககாலப் பாணர் பண்ணுக்கும் பாட்டுக்கும் என்றிருந்த நிலைமாறி இன்று தையற்கலைக்கே உரியவராகக் காணப்படுகின்றனர். இசையும், இசையறிவும் மறைந்து (மறந்து) போனாலும், இவர்களின் கலையுணர்வு தையலின் வழியே இழையோடிக் கொண்டிருப்பது தெளிவாகப் புலனாகிறது.

# துணை நூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


1. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 1961: ஐங்குநூறு, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.
2. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2007: குறுந்தொகை, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை. மு.ப: தெரியவில்லை
3. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2007: பரிபாடல், சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை. மு.ப: தெரியவில்லை
4. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2007: திருமுருகாற்றுப்படை, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை. மு.ப: தெரியவில்லை
5. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2007: பொருநராற்றுப்படை, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை. மு.ப: தெரியவில்லை
6. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2007: பெரும்பாணாற்றுப்படை, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை. மு.ப: தெரியவில்லை
7. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2008: முல்லைப்பாட்டு, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை. மு.ப: தெரியவில்லை
8. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2009: சிறுபாணாற்றுப்படை, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை. மு.ப: தெரியவில்லை
9. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2008: மதுரைக்காஞ்சி, சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை. மு.ப: தெரியவில்லை

10. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2007: நெடுநல்வாடை,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.
மு.ப: தெரியவில்லை

11. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2007: குறிஞ்சிப்பாட்டு,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.
மு.ப: தெரியவில்லை

12. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2008: பட்டினப்பாலை,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.
மு.ப: தெரியவில்லை

13. சோமசுந்தரனார். பொ. வே.,(உ.ஆ), 2008: மலைபடுகடாம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.
மு.ப: தெரியவில்லை

14. துரைசாமிப்பிள்ளை. சு.,(உ.ஆ), 1950: பதிற்றுப்பத்து,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.

15. துரைசாமிப்பிள்ளை. சு.,(உ.ஆ), 1947: புறநானூறு – 1,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.

16. துரைசாமிப்பிள்ளை. சு.,(உ.ஆ), 1951: புறநானூறு – 2,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.

17. நச்சினார்க்கினியர் (உ.ஆ), 1943: கலித்தொகை,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.

18. நாராயணசாமி ஐயர். அ.,(உ.ஆ), 1952: நற்றிணை,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.

19. வேங்கடசாமி நாட்டார். ந. மு.,(உ.ஆ): 1944: அகநானூறு,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.

## துணைமை ஆதாரங்கள்


1. அப்பாத்துரை. கா., 2003: ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழம், பூம்புகார் பதிப்பகம், சென்னை.
2. அப்பாத்துரை. கா., 2002: தென்னகப்பண்பு, மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம் - 608 001.
3. அருணாசலம். மா.தன., 2003: மூத்தகுடி, அருந்தமிழ் ஆய்வுகள், குழலி பதிப்பகம், பாண்டிச்சேரி.
4. அருணாசலம். மு., 2008: தமிழ் இசை இலக்கண வரலாறு – II காவ்யா பதிப்பகம், சென்னை - 24.
5. ஆசிரியர் குழு., 2009: பாண்டியர் செப்பேடுகள் பத்து, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை – 113.
6. இராசமாணிக்கனார். மா., 2009: தமிழக வரலாறும் ஆட்சியும், பூம்புகார் பதிப்பகம், சென்னை-108.
7. இராமசாமி. துளசி., 2012: பழந்தமிழ் இலக்கியங்கள் நாட்டுப்புறப் பாடல்களே, விழிகள், சென்னை – 600 042.
8. இராமசுப்பிரமணியன். வ. த.,(வி.ஆ) 2009: புறப்பொருள் வெண்பாமாலை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை – 625 001.
9. இளம்பூரணர்.,(உ.ஆ), 2005: தொல்காப்பியம், பொருளதிகாரம், சாரதா பதிப்பகம், சென்னை-14.
10. இனியன். இ.,(ப.ஆ)., 2014: மயிலைசீனி. வேங்கடசாமி ஆய்வுக் களஞ்சியம் - 3, இளங்கனி பதிப்பகம், சென்னை – 17.

11. கந்தையா. ந. சி., 2010: தமிழகம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.

12. காந்தி. க., 1980: தமிழர் பழக்கவழக்கங்களும்
நம்பிக்கைகளும்,
உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 113.

13. காந்திதாசன். க., 2011: சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல்,
உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
தரமணி,
சென்னை – 113.

14. கிருஷ்ணன். ப., 1957: தமிழ் நூல்களில் தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ்நாடு,
இளந்தமிழ் பதிப்பகம்,
சென்னை.

15. கீர்த்தி., 2014: அறுபத்து மூன்று நாயன்மார்கள்
வரலாறு,
சங்கர் பதிப்பகம்,
சென்னை – 49.

16. கைலாசபதி. க., 2006: தமிழ் வீரநிலைக் கவிதை,
குமரன் பதிப்பகம்,
வடபழனி,
சென்னை – 26.

17. கோதண்டம். கோ. மா.(தெ.ஆ).,2007: மணிமேகலை
கங்கை புத்தக நிலையம்,
தி. நகர், சென்னை – 17.

18. கோவிந்தராசமுதலியார்.கா.ரா.,(உ.ஆ),1948: அகப்பொருள் விளக்கம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் பி. லிட்., சென்னை.

19. ஞானசுந்தரம்.(உ.ஆ)., 1984: பெரியதிருமொழி,
தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியீடு,
தஞ்சாவூர்.

20. ஞானசேகரன். தே., 2005: மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை – 98.

21. சண்முகம்பிள்ளை. மு., 1996: சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும்,
உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
தரமணி,
சென்னை – 113.

22. சிவசுப்பிரமணியன். ஆ., 2014: இனவரைவியலும் தமிழ் நாவலும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை.

23. சிவசுப்பிரமணியன். ஆ., 2010: மந்திரமும் சடங்குகளும், காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில்.

24. சீனிவாச அய்யங்கார். பி. டி.,2013: தமிழர் வரலாறு, ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை – 17.

25. சீனிவாசன்.மதி.உ.வே.(தெ.ஆ).,1998: பெரியதிருமொழி, வராகி பிரிண்டர்ஸ், ஆழ்வார்ப்பேட்டை, சென்னை – 18.

26. சோமசுந்தரனார். பொ. வே.(வி.ஆ).,1970: திருக்கோவையார், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பிலிட்., சென்னை.

27. சௌரிராஜன். பொன்., 1990: மு. வ. புதினங்களில் தமிழ் - தமிழனம், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை.

28. தமிழண்ணல். 2003: சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை – 1.

29. தமிழண்ணல்., 1956: பரிசில் வாழ்க்கை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை – 625 001.

30. தனஞ்செயன். ஆ., 2015: விளிம்புநிலை மக்கள் வழக்காறுகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை – 98.

31. நக்கீரர்.,(உ.ஆ) 2005: இறையனார் அகப்பொருள், முல்லை நிலையம், சென்னை – 17. மு.ப: தெரியவில்லை

32. நடராசன். பி. ரா.(உ.ஆ).,2003: திருஞானசம்பந்தர் தேவாரம், உமா பதிப்பகம், சென்னை – 1.

33. நடராசன். பி. ரா.(உ.ஆ).,2003: திருநாவுக்கரசர் தேவாரம், உமா பதிப்பகம், சென்னை – 1.

34. நாராயணவேலுப்பிள்ளை. எம்.(தெ.ஆ).,2000: நாலாயிர திவ்யப் பிரபந்தம்,
முல்லை நிலையம்,
தி. நகர், சென்னை – 17.

35. பக்தவத்சல பாரதி., 2013: தமிழகப் பழங்குடிகள்,
அடையாளம் வெளியீடு,
திருச்சி – 621 310.

36. பக்தவத்சல பாரதி., 2014: இலக்கிய மானிடவியல்,
அடையாளம் வெளியீடு,
திருச்சி – 621 310.

37. பக்தவத்சல பாரதி., 2005: மானிடவியல் கோட்பாடுகள்,
அடையாளம் வெளியீடு,
திருச்சி - 621 310.

38. பக்தவத்சல பாரதி., 2011: பண்பாட்டு மானிடவியல்,
அடையாளம் வெளியீடு,
திருச்சி – 621 310.

39. பக்தவத்சல பாரதி., 2013: வரலாற்று மானிடவியல்,
அடையாளம் வெளியீடு,
திருச்சி – 621 310.

40. பக்தவத்சல பாரதி., 2015: பாணர் இனவரைவியல்,
அடையாளம் பதிப்பகம்,
திருச்சி.

41. பரமசிவன். தொ.,1997: அறியப்படாத தமிழகம்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில் - 629 001.

42. பரமசிவன். தொ.,2001: பண்பாட்டு அசைவுகள்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில் - 629 001.

43. பழனிவேலு. கே., 2010: சங்க இலக்கியம் பாட்டு மரபும், எழுத்து மரபும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை – 98.

44. பெருமாள். ஏ. என்.,1984: தமிழர் இசை,
உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
தரமணி,
சென்னை – 14.

45. பாக்கியமேரி., 2008: தமிழ் இலக்கிய வரலாறு (வகைமை நோக்கில்), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை – 98.

46. பாக்கியமேரி.,2007: ஆயகலைகள் (1 - 32), பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை – 2007

47. மறைமலையடிகள்., 2005: வேளாளர் நாகரிகம், வ. உ. சி. நூலகம், சென்னை – 14.

48. மாணிக்கம். வ.சுப.,2007: தமிழ்க் காதல், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம் - 608 001.

49. மாதையன். பே., 2004: சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை – 98.

50. மாதையன். பெ.,2004: சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை – 2004

51. ராஜ் கௌதமன்., 2006: பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், தமிழினி, சென்னை – 2.

52. வரதராசன். மு., 1964: பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை – 108.

53. வித்தியானந்தன். சு., 1954: தமிழர் சால்பு, (சங்க காலம்), குமரன் புத்தக இல்லம், சென்னை-26.

54. விபுலாநந்த அடிகளார்., 1947: யாழும் நூலும், யாதுமாகி பதிப்பகம், திருநெல்வேலி – 627 002.

55. வேங்கடசாமி நாட்டார். ந. மு., 2005: சிலப்பதிகாரம், ராமையா பதிப்பகம், சென்னை – 5.

56. வேங்கடசாமி. மயிலைசீனி., 2001: தமிழுக்கு வழங்கிய கொடை – I
தமிழ் வளர்ச்சிப் பேரவை, சென்னை.

## அகராதிகள்

1. அப்பாய் செட்டியார்.பி.ஆர்.,(தொ.ஆ).,2009: எதுகை அகராதி,
மீள் பதிப்பகம்,
சென்னை – 85.
2. கதிரைவேற் பிள்ளை. நா., 1981: தமிழ் மொழியகராதி,
ஏசியன் எடுகேசனல் சர்வீசஸ்,
புதுதில்லி – 110 016.
3. சந்தியா நடராஜன்.,(ப.ஆ)., 2004: மதுரைத் தமிழ்ப் பேரகராதி, 2ம் பாகம்,
சந்தியா பதிப்பகம்,
சென்னை – 600 083.
4. சுப்பிரமணியன். சு. வே., 2006: மெய்யப்பன் தமிழ் அகராதி,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை – 600 108.

## ஆய்வேடுகள்

1. அஜீபா. செ.,2013: சங்க இலக்கியங்களில் நீரும் நீர்
மேலாண்மையும்,
தியாகராசர் கல்லூரி,
மதுரை.
2. ஆரோக்கியமேரி. சூ.,2014: சங்க அக இலக்கியங்களில்
பாத்திரங்களின்
மன உணர்வு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
3. கலைமணி. ச., 2006: தமிழ் நாடகத்தில் காலந்தோறும்
கட்டியங்காரன்,
யாதவர் கல்லூரி,
மதுரை.
4. ஞானசேகர். த., 2015: நாட்டுப்புறக் கலைகள் சங்ககாலம் முதல்
இக்காலம் வரை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை.
5. சிங்கராஜா. வெ., 2013: கலை இலக்கிய வெளிப்பாடு,
அய்யநாடார் ஜானகி அம்மாள்
கல்லூரி,(தன்னாட்சி),
சிவகாசி.

6. செந்தில் குமார். சு., 2009: அழகு, ஒழுக்கம், குடிமை எனும் சமூக மதிப்புகள் ஒரு வரலாற்றுப் பார்வை, அமெரிக்கன் கல்லூரி, (தன்னாட்சி), மதுரை.

7. தியாகராஜன். கே., 2011: மிருதங்க இசைமரபு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

8. தேவ்மாலா. ஆ.,2015: தூது இலக்கியத்தில் வாழ்வியல் அறங்கள், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

9. பன்னீர்செல்வம். பி., 2013: தமிழ் இலக்கியங்களில் சுற்றுச்சூழலியல் அன்றும் - இன்றும், அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, (தன்னாட்சி), சிவகாசி.

10. மணிவாசகம். க., 2012: பண்பாட்டு மானிடவியலும் சங்க இலக்கியமும், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

11. ராதிகா. க., 2009: பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் வாழ்வியல் நெறிகள், யாதவர் கல்லூரி, மதுரை.


## இதழ்கள்

1. ஜான் பீட்டர். அ., பாணாற்றுப்படை, தமிழியல் ஆய்வு, ஞாலத்தமிழ் பண்பாட்டு ஆய்வு மன்றம், மதுரை. மு.ப: தெரியவில்லை

2. பாபு. ஏ. கே. (ஆ)., 2007: பாணர் சமுதாயத்தின் இரண்டாவது மாநில மகாநாடு சிறப்புமலர், பாணர் சமுதாயம் வெளியீடு, திருச்செந்தூர்.

3. பொன்னீலன் மற்றும் முப்பால்மணி (தொ. ஆ): சாதிமதங்களைப் பாரோம், பேராசிரியர் நா. வானமாமலை வெளியீட்டகம், மனிக்கட்டி பொட்டல்,

கன்னியாகுமரி மாவட்டம்.
மு.ப: தெரியவில்லை.

4. கல்லாடன் (தொ.ஆ),2003: அருந்தமிழ் ஆய்வுகள், குழலி பதிப்பகம், பாண்டிச்சேரி – 605 013.

5. ஆ.கு., 1998: தமிழியல் (இலக்கியக் கட்டுரைகள்), ஞாலத்தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம், மதுரை – 625021.

6. சண்முகசுந்தரம் (தொ.ஆ)., 2007: இலக்கியமும் கோட்பாடுகளும், காவ்யா, சென்னை.

7. சதாசிவம் மற்றும் மகாலட்சுமி. ஆ,(தொ.ஆ).,2017: தமிழர் வழிபாடுகள், செம்மூதாய் பதிப்பகம், சென்னை – 59.

8. ப.கு.,2017: தமிழ் இலக்கியங்களில் சூழலியல் சிந்தனைகள், ராஜா வெளியீட்டகம், திருச்சி- 23.

9. கீதாஞ்சலி. த.,(ப.ஆ).,2017: தமிழ் இலக்கியங்களில் அறிவியல் சிந்தனைகள், என். ஜி. எம். கல்லூரி வெளியீடு, பொள்ளாச்சி.

10. ஜெகதீசன். இரா., மற்றும் சரவணன். சு (தொ.ஆ)., 2015: செம்மொழி இலக்கியப் புலவர்களும் பாடுபொருள்களும், குறிஞ்சிப் பதிப்பகம், வேலூர்.